ஸ்ரீ:

கோயில் திருமலை பெருமாள்கோயிலென்கிற ஸ்ரீரங்கம் திரு
மலை காஞ்சீ ஆகிய மூன்று திவ்ய தேசத் தெம்பெரு
மான்கள் விஷயமாகவும், ஆழ்வாரெம்பெருமானுர்
ஜீயர்கள் விஷயமாகவும் பக்தர்களுக்கு நித்
யாநுஸந்தேயமாகப் பெரியார் பணித்த
பல ஸ்தோத்ரங்களின் தொகுதி.

# நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலா.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசார்யரியற்றிய விரிவுரையோடு கூடியது.

கிடைக்குமிடம்: P. B. Annangaracharya Kancheepuram-3.

இப்புத்தகத்திலுள்ள ஸ்தோத்ரங்களின் அட்டவணை



இது மூன்ருவது பதிப்பகம்

G. L. அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது. 75, பெரம்பூர் பேரக்ஸ் ரோடு, சென்னை-7.
விலை 2.50 1968.

ஸ்ரீரஸ்து.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜியர் திருவடிகளே சரணம்

# நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலா.

கோயில் திருமலை பெருமாள் கோயில் என்கிற மூன்று திவ்ய தேசங்களிலும் ஆழ்வாரெம்பெருமானுர் மணவாள மாமுனிகளென்கிற ஆசாரியர்கள் மூவரிடத்திலும் ஈடுபாடுள்ளவர்கள் நாடோறும் காலை மாலைகளில் அநுஸந்திக்கவேண்டியதாக நம் பூருவாசாரியர்களால் பணிக்கப்பட்ட சில திவ்யஸ்துதிகள் உரையுடன் வெளியிடப்படுகின்றன.

உரையாசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யர்

## ஸ்ரீரங்கநாதஸ்தோத்ரம்.

(ஸ்ரீபராசரபட்டர் அருளிச்செய்தது.)

பட்டர் தனியன்.

ஸ்ரீபராசரபட்டார்ய: ஸ்ரீரங்கேசபுரோஹித:
ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ச்ரேயஸே மேஸ்து பூயஸே.

—:o:—

### உரையவதாரிகை

கூரத்தாழ்வான் க்ரிமிகண்ட சோழனுடைய உபப்லவத்தினுல் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழகில்லாமல் பல ஸம்வத்ஸரங்கள் திருமாலிருஞ்சோலையில் ஏகாந்தவாஸஞ் செய்ததுபோலவே அவருடைய திருக்குமாரரான பட்டரும் ஒருகால் ஸ்ரீரங்கவாஸத்தையிழந்து திருக்கோட்டியூரில் சில வருஷங்கள் எழுந்தருளியிருக்க நேர்ந்தது. திருவாய்மொழியில் (3—2) * முந்நீர் ஞாலம் படைத்த வென்கிற திருவாய் மொழியின் ஈடுமுப்பத்தாறுயிரப்படி ப்ரவேசத் தொடக்கத்தில் —"பட்டர் திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருக்கச்செய்தே" என்றருளிச் செய்திருப்பதும் இங்கு அநுஸந்தேயம். அப்படி கோயில் வாஸத்தை யிழந்து திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளவேண்டிய காரணம் யாதென்னில்:—

பட்டர் திருவரங்கம் பெரியகோயிலில் எம்பெருமானுருடைய ஸ்தானத்திலே வீற்றிருந்து தர்சந நிர்வாஹகராயிருக்கும் நாளிலே அவ்விடத்து ஸப்த ப்ராகாரங்களுள் ஆருவதுப்ராகாரமான திருவிக்கிரமன் திருவீதித்திருமதிள் மிகவும் ஜீர்ணமாய்ச் சரிந்து விழ, அதனைச் சீர்படுத்திக் கட்டுவிக்கத் தொடங்கிய வீரஸுந்தரப்ரஹ்மராயன் இந்தமதிலின் நேர்மைக்கு மாருக (கூரத்தாழ்வானுடைய ப்ரிய சிஷ்யரான) பிள்ளைப்பிள்ளை யாழ்வானுடைய திருமாளிகை குறுக்கிட்டிருப்பதுகண்டு முன்போல

மதிலை ஒதுக்கிக் கட்டாமல் அத் திருமாளிகையை யிடித்து நேரொழுங்காகத் திருமதிள் கட்டுவிக்க முயன்ருன். அதனையறிந்த பட்டர் அவ்வரசனை நோக்கி 'கட்டுவிக்கிற திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம் ? பரம பாகவதரான பிள்ளைப்பிள்ளை யாழ்வான் மஹாநுபாவராதலால் அவருடைய மங்களாசாஸநமன்ரே நம்பெருமாளுக்குப் பாதுகாப்பு; முன்பு திருமங்கையாழ்வார் நான்காவது பிராகாரம் கட்டுவிக்கிற போது தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலை சேர்க்கிற இடமாகிய அடந்தை நடந்தை யென்னும் பூஞ்சோலை நேர்பட, அவற்றையழித்துக் குறுக்கி மதிள் கட்ட மனங்கொள்ளாமல், ஒதுக்கி மதிள் கட்டவில்லையா? அதுபோலவே இப்பொழுதும் பிள்ளைப்பிள்ளை யாழ்வானுடைய திருமாளிகையை விட்டு ஒதுங்கத் திருமதிள் கட்டுவிப்பதே தகுதி' யென்று நல்லறிவு கூறினர். அதுகேளாமல் வீரசுந்தரன் 'மஹானுன இவ்வாசிரியர் இங்ஙனம் நியமிக்கிருரே' என்று கௌரவங் கொள்ளாமல், தான் ஆழ்வான் திருவடிகளை ஆச்ரயித்தவனுயிருந்தும் ஆசார்யபுத்திரருடைய நியமனமன்ரே வென்றும் கணிசியாமல் பட்டர் வார்த்தையை உபேக்ஷித்துப் பிள்ளைப்பிள்ளை யாழ்வானது திருமாளிகையை யிடித்துத் தள்ளி நேர்படத் திருமதிள் கட்டுவித்தான். இது காரணமாகப் பட்டர்க்கும் அவ்வரசனுக்கும் உண்டான மநஸ்தாபம் நாளடைவிலே மேலிட, வீரசுந்தரன் பட்டரை ஸ்ரீரங்கத்தில் வாழவொட்டாது மிகவும் உபத்ரவிக்க, பட்டர் யாரோடுஞ் சொல்லாது கோயிலினின்று புறப்பட்டுத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளலானுர். அப்போது திருவரங்கத்தையும் நம்பெருமாளையும் விட்டுப்பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் நொந்து * திடர்விளங்கு கரைப் பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் கடல் விளங்கு கருமேனியம்மான் தன்னைக் கண்ணுரக் கண்டுகக்குங் காதல் கிளர்ந்து, முன்பு குலசேகராழ்வார் * திருவரங்கப்பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையாலடிவருடப் பள்ளிகொள்ளுங் கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என்கண்ணிணைகளென்றுகொலோ களிக்கும் நாளே*என்றும், *களிமலர் சேர் பொழிலரங்கத்து உரகமேறிக் கண்வளரும் கடல்வண்ணர் கமலக்கண்ணும் ஒளிமதிசேர் திருமுகமுங் கண்டுகொண்டு என்னுள்ளமிகவென்று கொலோ வுருகு நாளே * என்றும், *மாயோனைக் கண்டென்கண்கள் நீர்மல்க வென்று கொலோ நிற்குநாளே* என்றும் அரற்றினுப்போல ஸ்வாமிபட்டர் தாமும் அரற்றினது சில ச்லோகங்களாக வழிந்து புறப்பட்டது. அந்த ச்லோகங்களே ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரமென்பதாம்.

ஸ்தோத்ராரம்பம்

**ஸப்தப்ராகாரமத்யே ஸரஸிஜமுகுளோத்பாஸமாநே விமாநே**
**காவேரீமத்யதேசே ம்ருதுதரபணிராட்போகபர்யங்க பாகே,**
**நித்ராமுத்ராபிராமம் கடிநிகடசிர:பார்ச்வவிந்யஸ்தஹஸ்தம்**
**பத்மாதாத்ரீகராப்யாம் பரிசிதசரணம் ரங்கராஜம் பஜேஹம். (1)**

காவேரீ மத்ய தேசே ஸப்த ப்ராகார மத்யே ஸரஸிஜ முகுள உத்பாஸமாநே விமாநே ம்ருதுதர பணிராட் போகபர்யங்க பாகே நித்ரா முத்ரா அபிராமம் கடிநிகட சிர: பார்ச்வ ஊந்யஸ்த ஹஸ்தம் பத்மா தாத்ரீ கராப்யாம் பரிசித சரணம் ரங்கராஜம் அஹம் பஜே.

உபய காவேரிமத்யத்திலே யுள்ள தென்திருவரங்கத்திலே ஏழுதிருமதில்களினுள்ளே தாமரை முகுளம் போல்விளங்குகின்ற ப்ரணவாகார ஸ்ரீரங்கவிமானத்திலே பரமஸுகுமாரமான திருவனந்தாழ்வான் திருமேனியாகிற திருப்பள்ளி மெத்தையிலே திருக்கண் வளர்ந்தருளுகிற பாவனையினுல் அழகுபொலிந்தவரும் திருவரையருகில் ஒரு திருக்கையும் திருமுடியருகில் மற்றொரு திருக்கையும் வைத்திருப்பவரும் திருமகளும் மண்மகளும் தமது திருக்கைகளினுல் திருவடி வருடப்பெற்றவருமான ஸ்ரீரங்கநாதரை நான் ஸேவிக்கின்றேன்.

* கங்கையிற் புனிதமாய காவிரி நடுவுபாட்டில் பொன்மதிளேழுடுத்த ஸ்ரீரங்க விமானத்தில் அரவரசப் பெருஞ்சோதி யனந்தனென்னு மணிவிளங்கு முயர் வெள்ளை யணையை மேவிச் சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும் நீர் பூத்த திரு மகளும் நிலமகளுமடிவருடப் பள்ளிக்கொள்ளும் பரமனைத் தாம் இடைவீடின்றிப் பாவனைசெய்யும்பரிசை இதனால் அருளிச்செய்தாராயிற்று. [ஸப்தப்ராகாரமத்யே]"மாட மாளிகை சூழ்திருவீதியும் மன்னுசேர் திரிவிக்ரமன் வீதியும், ஆடல்மாறனகளங்கன் வீதியும் ஆலிநாடனமர்ந்துறை வீதியும், கூடல்வாழ் குலசேகரன் வீதியும், குலவுராச மகேந்திரன் வீதியும், தேடுதன்மவன்மாலவன் வீதியும் தென்னரங்கர் திருவாவர ணமே." என்ற செய்யுளை இங்கு அநுஸந்திக்க.

[நித்ரா முத்ராபிராமம்.] * உறங்குவான்போல் யோகுசெய்த பெருமான்* என்று நம்மாழ்வாரும், * ஒரு பாம்பை மெத்தையாக விரித்து அதன்மேலே கள்ளநித்திரை கொள்கின்ற * என்று பெரியாழ்வாரு மருளிச்செய்தவை காண்க. [கடிநிகட சிர: பார்ச்வ விந்யஸ்த ஹஸ்தம்] ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் * கிரீடம் ஸ்ரீரங்கேசயிது: * (110) என்று தொடங்கி யருளிச் செய்யப்பட்ட ச்லோகம் இங்கு அநுஸந்தேயம். அதன் கருத்தாவது; தலையணையாக அமைத்துக் கொள்ளப்பட்டவொரு திருக்கையான து திருவபிஷேகத்தைத் தொட்டுக் கொண்டிருக்குமிருப்பினாலே 'ப்ரஹ்மருத்ரர்களுக்கும் தலைவரான பெரியபெருமாளொருவர்க்கே இத்திருவபிஷேகம் பொருந்தும்' என்று தெரிவிக்கின்றதுபோலும். இனி, திருமுழந்தாளளவும் நீட்டிவைக்கப்பட்டிருக்கின்ற மற்றொரு இடத்திருக்கையானது திருவடியைத் தொட்டுக்கொண்டிருக்கு மிருப் பினாலே 'இத்திருவடியிணையே தாழ்ந்தார்க்குத் தக்க புகலிடம்' என்று தெரிவிக் கின்றதுபோலும் என்பதாம். வலத்திருக்கையானது பரத்வத்தையும் இடத்திருக் கையானது ஸௌலப்யத்தையும் கோட்சொல்லித் தருகின்றது என்றவாறு.

[பத்மா தாத்ரீ கராப்யாம் பரிசித சரணம்] * வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீ யொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே * என்ற அபிஸந்தி விசேஷத்தினால் இந்த விசேஷண மிட்டருளினபடி. .... .... .... (1)

கஸ்தூரீகலிதோர்த்வபுண்ட்ரதிலகம் கர்ணாந்தலோலேக்ஷணம்
முக்தஸ்மேரமநோஹராதரதளம் முக்தா கிரீடோஜ்ஜ்வலம்,
பச்யந்மாநஸபச்யதோஹரருச: பர்யாயபங்கேருஹம்
ஸ்ரீரங்காதிபதே: கதா நு வதநம் ஸேவேய பூயோப்யஹம். (2)

பச்யத் மாநஸ பச்யதோஹர ருச: ஸ்ரீரங்காதிபதே: கஸ்தூரீ கலித ஊர்த்வ புண்ட்ர திலகம் கர்ணாந்த லோல ஈக்ஷணம் முக்த ஸ்மேர மநோஹர அதரதளம் முக்தா கிரீட உஜ்ஜ்வலம் பர்யாய பங்கேருஹம் வதநம் அஹம் பூய: அபி கதா நு ஸேவேய.

கண்டார்நெஞ்சைக் கவருமழகு வாய்ந்த ஸ்ரீரங்க நாதருடைய, கஸ்தூரிக் காப்பினாலமைந்த திவ்யோர்த்வ புண்ட்ர திலகமுடையதும் திருச்செவியள வும் சுழலமிடா நின்ற திருக்கண்களையுடையதும், வ்யாமோஹமே வடிவெடுத்தும் புன்முறுவல் செய்து கொண்டு மநோஹரமாயிருக்கின்ற திருவதரத்தை யுடையதும் முத்துக் கிரீடத்தினால் ஒளிபெற்று விளங் குவதும் தாமரையே யென்னலாம்படி யுள்ளதுமான திருமுக மண்டலத்தை அடியேன் மறுபடியும் என்று ஸேவிப்பேன்?

இதுமுதல் நான்கு ச்லோகங்களினால் —ஸ்ரீரங்கநாத விச்லேஷத்தினாலும் ஸ்ரீரங்க க்ஷேத்திர விச்லேஷத்தினாலும் தமக்குண்டான ஆற்றாமையை வெளியிட்டுக் கொண்டு 'அந்தோ! என்விடாய் தீருவது என்றைக்கு? அப்படியுமொருநாள் வாய்க் கப்பெறுமோ?" என்று புலம்புகிறார். * களிமலர்சேர் பொழிலரங்கத்து உரகமேறிக்

கண்வளருங் கடல் வண்ணர்கமலக் கண்ணும், ஒளிமதிசேர் திருமுகமுங்கண்டு கொண்டு என்னுள்ளமிக வென்று கொலோ வுருகுநாளே * என்ற குலசேகராழ்வார் பாசுரத்தின் சாயலாக அமைந்தது இந்த ச்லோகம். கஸ்தூரிக் காப்புத் திருமண் காப்பு விளங்கப்பெற்றதும், காதளவும் நீண்டு கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய திருக்கண்களை யுடையதும் அபிமதஜந தர்சநானந்த வேகத்தாலே அர்ச்சாவதார ஸமாதியைக் கடந்து விம்மி யெளிவிழுகின்ற அவ்யக்தமதுர மந்தஹாஸ விலாஸம் விளங்க நின்ற திருவதரத்தையுடையதும் முத்துக்கொண்டை யணிந்து திகழ்வதும் தாமரைப் பூப்போன்றதுமான என்னப்பனது திருமுகமண்டலத்தை இப்பிறப்பிலே மீண்டுமொருகால் ஸேவிக்கப் பெறுவேனே? பாவியேனுக்கு அந்தப்பாக்கியம் வாய்க்குமோ? என்றுராயிற்று.

''பச்யந்மாநஸபச்யதோஹரருசிம்'' என்ற சிலருடைய பாடம் தவறானதென்று மறுக்கத் தக்கது. நபும்ஸகலிங்கமான வதந சப்தத்திலே விசேஷணமாக அந்வயிக்க மாட்டா தாகையாலே. அநுஸ்வாரமின்றிக்கே (ருசி) என்றிருந்ததாகில் ஒக்கும்; அப்போது சந்தோபங்கமாகும். ஆகவே ''பச்யதோ ஹரருச: '' என்ற ப்ராசீந பாடமே கொள்ளத் தக்கது. இது ஸ்ரீரங்காதிபதிக்கு விசேஷணம். [ஷஷ்டீவிபக்தி.]

நாச்சியார் திருமொழியில் (10—5) * நல்லார்கள் வாழும் நளிரரங்கநாகணையான் * என்றவிடத்து வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை இரண்டு ஐதிஹ்யங்களருளிச் செய்கிறார்; அவை இவ்விடத்திலநுஸந்திக்கவுரியவை. (அவையானவை—) (1) பட்டர் முதுகில் புண்ணாலே நொந்திருக்கச் செய்தே பெருமாள் அருள்பாடிட்டு 'வாராய்! அஞ்சினாயோ? என்று கேட்டருள. 'நாயன்தே! எனக்குச் செய்து தந்தருளாத தரமில்லை; இங்கே யிருக்கச் செய்தேயும் பரமபதம் என் சிறுமுறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று. அதிலொரு குறையுமில்லை. இங்கே குளிர்ந்த திருமுகத்தையும் திருநாமத் தழும்பையும் முறுவலையும் இழக்கவென்றால் அடியேன் அஞ்சமாட்டேனோ?' என்றாராம். (2) ஆளவந்தார் மகனார் சொட்டைநம்பி ஓரளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒருவார்த்தை சொன்னாராய் 'நீ கடக்க வர்த்தி' என்று ஆளவந்தார் அருளிச்செய்ய; அவரும்படை வீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரமஸமயத்தில் இவருடைய அத்யவஸாய மறியவேணுமென்று 'நீ நினைத்துக் கிடக்கிறதென்?' என்று கேட்டார்களாய் 'ஆளவந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணித் தந்தல்லது விடாது; அங்கேபோனால் ஸ்ரீவைகுண்ட நாதன்முகம் நம் பெருமாள் திருமுகமண்டலம் போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக் கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்' என்றாராம். .... .... .... (2)

கதாஹம் காவேரீதடபரிஸரே ரங்கநகரே
சயாநம் போகீந்த்ரே சதமகமணிச்யாமலருசிம்,
உபாஸீந: க்ரோசந் மதுமதந நாராயண ஹரே
முராரே கோவிந்தேத்ய நிசமபநேஷ்யாமி திவஸாந். (3)

காவேரீ தட பரிஸரே ரங்க நகரே போகீந்த்ரே சயாநம் சதமக மணி ச்யாமல ருசிம் உபாஸீந: மதுமதந நாராயண ஹரே முராரே கோவிந்த இதி அநிசம் க்ரோசந் அஹம் கதா திவஸாந் அபநேஷ்யாமி.

திருக்காவிரிக் கரையருகில் திருவரங்கமா நகரில் திருவனந்தாழ்வான் மீது பள்ளிகொண்டருளா நின்ற இந்திர நீலரத்னம் போன்று சாமளமான காந்தியை யுடைய பெருமாளைப் பணிந்தவனாகி, மதுஸூதந ! என்பது முதலான திருநாமங்களை இடைவிடாது சொல்லிக் கதறு நின்றவனாய் அடியேன் எப்போது (ஜீவிதசேஷமான) நாட்களை யெல்லாம் போக்குவேன்?

இதில், காவேரீதடபரிஸரே என்றதை 'ரங்கநகரே' என்பதோடு சேர்த்து அந்வயிப்பதன்றிக்கே 'காவேரீதடபரிஸரே க்ரோசந்' என்று அந்வயிப்பதும் அழகியதாம். முந்தின அந்வயத்தில், ஸ்ரீரங்க நகரம் காவிரிக்கரையிலுள்ள தென்றும் ஸ்ரீரங்கநாதன் * தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையா லடிவருடப் பள்ளிகொள்பவனென்றும் தெரிவிக்கப்பட்டதாகும். பிந்தின அந்வயத்தில், தாம் காவிரியாற்றங்கரையிலே யிருந்துகொண்டு * மதுமதந நாரயணேத்யாதி திருநாமங்களை வாய்வெருவிப் போதுபோக்கக் குதுகலித்திருக்கின்றமை தெரிவிக்கப்பட்டதாகும். இந்த ச்லோகத்தைக் கண்ட சிவபக்தனொருவன் இதுவேசாயலாக, ''கதா வாராணஸ்யாம் அமரதடிநீரோதஸி வஸந் வஸாந: கௌபீநம் சிரஸி நிததாநோஞ்ஜலிபுடம், அயே கௌரீநாத த்ரிபுரஹர சம்போ த்ரிநயந நப்ரஸீதேதி க்ரோசந் நிமிஷமிவ நேஷ்யாமி திவஸாந்'' என்று கவி பண்ணினுனயிற்று.

சதமகமணிச்யாமலருசிம் = சதமகனென்று இந்திரனுக்குப் பெயர். மணியென்றது ரத்னம். இந்திர நீலக்கல்போன்ற எழிலுடைமை சொன்னபடி. பச்சைமாமலை போல் மேனியென்னப்பட்ட பெருமாளை இங்ஙனே வருணிக்கலாமோ வென்று சங்கிக்கவேண்டா; பச்சை நீலம் கருமை ஆகிய நிறங்கள் கவிஸரணியில் பர்யாய மாகக் கொள்ளப்பட்டன. (3.)

**கதாஹம் காவேரீவிமலஸலிலே வீதகலுஷ:**
**பவேயம் தத்தீரே ச்ரமமுஷி வஸேயம் கநவநே,**
**கதா வா தம் புண்யே மஹதி புளிநே மங்களகுணம்**
**பஜேயம் ரங்கேசம் கமலநயநம் சேஷசயநம்.**

| | |
|---|---|
| காவேரீ விமல ஸலிலே வீத கலுஷ : அஹம் கதா பவேயம், தத்தீரே ச்ரம முஷி கநவநே கதா வஸேயம், புண்யே மஹதி புளிநே சேஷசயநம் கமல நயநம் மங்கள குணம் ரங்கேசம் கதா வா பஜேயம்? | திருக்காவேரியில் நிர்மலமான தீர்த்தத்திலே (குடைந்தாடி) ஸகல கல்மஷங்களுமற்றவனாக நான் என்றைக்கு ஆவேன்? அந்தக் காவிரியின் கரையில் விடாய் தீர்க்கும் சோலைகளிலே எப்போது வஸிக்கப் பெறுவேன்? மிகப் புனிதமும் பெருமை தங்கியதுமான மணற்குன்றிலே [ஸ்ரீரங்கத்திலே] அரவணைமேல் பள்ளி கொண்டருளா நின்றவரும் தாமரை போன்ற திருக்கண்களையுடையவரும் கல்யாணகுண நிதியுமான ஸ்ரீரங்கநாதரை எப்போது ஸேவிக்கப் பெறுவேன்? |

முதல்பாதத்தில் (அவகாஹ்ய) என்றொருபதம் வருவித்துக்கொள்ளலாம். காவேரீவிமலஸலிலே] திருக்காவேரியின் தீர்த்தத்தைப்பற்றி ஆழ்வார்களிருவர் இரண்டு விதமாக அருளிச்செய்துள்ளனர். குலசேகராழ்வார் * தெண்ணீர்ப்பொன்னி * என்று தெளிந்த தீர்த்தமாக அருளிச் செய்தார். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் * தெளிவிலாக்கலங்கல் நீர்சூழ் * என்றருளிச் செய்தார். * ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்ய மநோ யதா * என்றாப்போலே தெளிவுள்ளதாக வருணிக்க வேண்டுமே யொழிய, கலங்கல் நீராக வருணிப்பது கூடுமோ? என்கிற சங்கைக்குப் *பரிஹாரமாக பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில், * துக்தாப்திர் ஜநகோ ஜநந்யஹமியம் என்கிற ச்லோகத்தினால் கலக்கத்திற்கு ஹேதுவை உத்ப்ரேக்ஷாரீதியில் காட்டியருளினர். ஆறுகளுக்குக் கலக்கமும் தெளிவுமாகிய இரண்டும் ஸம்பாவிதமே. இங்கு விமலஸலிலே என்று தெளிவையே அநுபவிக்கிறார். [வீதகலுஷ:] விரஜாநதீஸ்நாநத்தினால் போக்கவேண்டியதான கல்மஷமும் இங்கே தொலையுமென்க. தத்தீரே கநவநே= இங்கு, * வண்டினமுரலுஞ் சோலை மயிலினமாலுஞ் சோலை, கொண்டல் மீதணவுஞ் சோலை குயிலினங் கூவுஞ் சோலை, அண்டச்கோனமருஞ் சோலை * என்ற திருமாலைப்பாசுரம் நெஞ்சு குளிர அநுஸந்திக்கத் தக்கது. *கதளவகுளஜம்பூ (52)

*ஸ்புரிதசபரதீர்யந்நாளிகேரீ 28 * இத்யாதி ஸ்ரீரங்கராஜஸ்தவச்லோகங்களும் அநுஸந்திக்க.

மூன்றுவது பாதத்தில் 'தத்புண்யே' என்கிற சிலருடைய பாடம் அநந்விதம் புண்யம் புளிநம் என்று இங்கு விவக்ஷிதமானது ஸ்ரீரங்கதிவ்ய க்ஷேத்ரமேயாம். தேசிகனும் பகவத்த்யாந ஸோபாநத்தில் *ப்ராதுர்ப்பூதம் கநகஸரிதஸ் ஸைகதே ஹம்ஸஜுஷ்டே* ச்லோ (2) என்றவிடத்தில் ஸைகதமாகச் சொல்லிற்றும் ஸ்ரீரங்க க்ஷேத்ரமேயாகும். (4)

**பூகீகண்டத்வயஸஸரஸஸ்நிக்தநீரோபகண்டாம்**
**ஆவிர்மோதஸ்திமிதசகுநாநூதிதப்ரஹ்மகோஷாம்,**
**மார்க்கேமார்க்கே பதிகநிவஹைருஞ்ச்யமாநாபவர்க்காம்**
**பச்யேயம் தாம் புநரபி புரீம் ஸ்ரீமதீம் ரங்கதாம்ந:**

பூகீகண்டத்வயஸ ஸரஸ ஸ்நிகத நீர உபகண்டாம் ஆவிர்மோத ஸ்திமித சகுந அநூதிதப்ரஹ்ம கோஷாம் பதிக நிவஹை: மார்க்கே மார்க்கே உஞ்ச்யமாந அபவர்க்காம் ரங்க தாம்ந: தாம் ஸ்ரீமதீம் புரீம் புந: அபி பச்யேயம்.

பாக்கு மரங்களின் கழுத்தளவாகப் பெருகுகின்றதும் தேனேடுகூடினதும் ஸ்நேஹயுக்தமுமானதீர்த்தத்தை ஸமீபத்திலே யுடையதாய் மகிழ்ச்சியுண்டாகி ஸ்திமிதமாயிருக்கின்ற பறவைகளினுல் அநுவாதம் செய்யப்பட்ட வேதகோஷத்தை யுடையதாய் வழிநடப்பவர்களின் கூட்டங்களினுல் வழிகள்தோறும் திரட்டியெடுத்துக்கொள்ளப்படுகிற மோக்ஷத்தை யுடையதான ஸ்ரீரங்கநாதனுடைய அந்தக்கோயிலை (அடியேன்) மறுபடியும் ஸேவிக்கப் பெறுவேனே?

எம்பெருமானை ஸேவிக்கப் பெறுவதிற்காட்டிலும் எம்பெருமானும் பாகவதர்களும் உறையுமிடமான திவ்ய தேசத்தை ஸேவிக்கப் பெறுவதே பெரும்பேருயிருக்கும் பதியேபரவித் தொழும் தொண்டர்கட்கு. ஆதலால் அந்தத் திருவரங்கம் பெரிய கோயிலையாவது நான் எனது வாழ்நாளில் மீண்டு மொருகால் ஸேவிக்கப் பெறுவேனே வென்கிருர். மூன்று பாதங்களினுல் கோயிலை வருணிக்கிருர். [பூகீகண்டேத்யாதி;] * கதள வகுள ஜம்பூ பூக மாகந்த கண்ட த்வயஸ ஸரஸநீராம் அந்தராஸஹ்யகந்யாம் * என்ற ஸ்ரீரங்க ராஜஸ்தவச்லோகம் இங்கு அநுஸந்தேயம். காவிரிக்கரையில் பாக்கு மரங்கள் ஓங்கி வளர்ந்து விளங்குகின்றன; அவற்றின் கழுத்தேகட்டளையாக வெள்ளம் பெருகுகின்றது; அந்த வெள்ள நீர் தேனெழுகப்பெற்றுமஸ்ருணமாகி உள்துறைவீதியருகிலேயும் ப்ரவஹியாநின்றதென்கை. * வெள்ளநீர் பரந்துபாயும் விரிபொழிலரங்கமிறே.

[ஆவிர்மோதே த்யாதி]காவிரிக்கரையில் பரமைகாந்திகள் நித்யகர்மாநுஷ்டானஞ் செய்து பரஹ்மயஜ்ஞபாராயணஞ் செய்யாநிற்க, அது கேட்டுக் கேட்டு அங்குள்ள கிளிமுதலிய பறவைகளெல்லாம் அந்த வேதவாக்யங்களை அநுவாதம் செய்கின்றனவாம்.*அருமா மறையந்தணர் சிந்தைபுக, செவ்வாய்க்கிளி நான் மறைபாடு தில்லைத் திருச்சித்ரகூடம் * என்றுர் திருமங்கையாழ்வாரும். இவ்விரண்டு பாதங்களுக்குஞ் சேர * தோதவத்தித் தூய்மறையோர் துறைபடியத் துளும்பியெங்கும், போதில் வைத்த தேன் சொரியும் புனலரங்க மென்பதுவே * என்ற பெரியாழ்வார் பாசுரம் அநுஸந்தேயம்.

[மார்க்கே மார்க்கே இத்யாதி] கோயிலில் வீதிகள்தோறும் வழி போமவர்கள் மோக்ஷத்தைப் பொறுக்கி யெடுத்துக்கொள்ளுகிருர்களென்றவிது—வழியடைவே கோயில் வீதியேறச் செல்பவர்களுக்கு முக்தி கரஸ்தமென்றபடி. கோயில்வாஸமே மோக்ஷமென்றதாகவுங் கூறுவாருளர். காவேரீ விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம். ஸவாஸுதேவோ ரங்கேச: ப்ரத்யக்ஷம் பரமம் பதம்* என்னக்கடவதிறே. ஆக இப்படிப்பட்ட

ஸ்ரீரங்கதிவ்ய க்ஷேத்திரத்தை அடியேன் மீண்டு மொருகால் ஸேவிக்கப்பெறுவேனே? என்று தமது நோயாசையை வெளியிட்டருளினாராயிற்று. நான்காவது பாதத்தில் அபி என்ற அவ்யயம் கேள்விப்பொருளது. .... .... .... (5)

**ந ஜாது பீதாம்ருதமூர்ச்சிதாநாம் நாகௌகஸாம் நந்தநவாடிகாஸு,**
**ரங்கேச்வர த்வத்புரமாச்ரிதாநாம் ரத்த்யாசுநாம் அந்யதமோ பவேயம்.**

ரங்கேச்வர! நந்தந வாடிகாஸு பீத அம்ருத மூர்ச்சிதாநாம் நாகௌக ஸாம் அந்யதம: ந ஜாது பவேயம், த்வத்புரம் ஆச்ரிதாநாம் ரத்த்யா சுநாம் அந்யதம: பவேயம்.

ஸ்ரீரங்கநாதனே ! தேவேந்திரனது சோலைப்புறங்களிலே அம்ருத பானம்பண்ணி மயங்கிக் கிடக்கிற அமரர்களுள் ஒருவனாக ஒருகாலும் ஆகக்கடவேனல்லேன் ; (பின்னையோவென்னில்) தேவரீருடைய ஸ்ரீரங்கநகரியைப் பற்றி வாழ்கிற திருவீதி நாய்களுள் ஒரு நாயாகப்பிறக்கக்கடவேன்.

*இந்திர லோகமாளுமச்சுவை பெறினும் வேண்டேனென்றிருக்கு முறுதியை வெளியிடுகிறாரிதில். பக்தர்களிலே சிலர் எம்பெருமான் திருவடிகளிலே பிரார்த்திக்கும் போது மறுபிறவி நேராதபடி முக்தியை அளிக்கவேணுமென்பர்கள். ஆண்டாள் * எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு மென்கையாலே எத்தனை பிறவிகள் பிறக்கப் பெற்றாலும் அது அநிஷ்டமன்று என்றும், பிறக்கும் பிறவிகள் திவ்ய தேசவாஸத்திற்கு அநுகூலங்களாயிருக்கப் பெறில் குறையில்லையென்றும் இருப்பார் பலருளர். அவர்களது திரளில் சேர்ந்தவராயிற்று பட்டர். பெரிய திருமடலில் *அறத்தின் வழிமுயன்ற அன்னவர் தாங்கண்டீர்கள் ஆயிரக்கண் வானவர்கோன் * என்று தொடங்கி, *இன்னமுதம் மாந்தியிருப்பர்* என்னுமளவாக மிகவிரிவாய்க்கூறப்பட்டுள்ள தேவலோக போகத்தை யநுபவிக்கக் குதூஹலமுடையேனல்லேன்; திருவரங்கம் பெரிய கோயில் திருவீதிகளிலே திறந்து கிடந்த வாசல் தோறும் நுழைந்து திரியும் ஜந்துக்களிலே ஒன்றாகப் பிறக்கப் பெறவேணு மென்றாராயிற்று. இவ்விடத்தில் ''வாய்க்குங் குருகைத் திருவீதியெச்சிலை வாரியுண்ட, நாய்க்கும் பரமபதமளித்தாய்'' என்ற பாசுரம் நினைக்கத் தக்கது.ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *அஹ்ருதஸஹஜதாஸ்யாஸ் ஸூரய:* (33) என்றச்லோகத்தில் ஸ்ரீரங்கத்திலுள்ள மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களெல்லாம் நித்யமுக்த முமுக்ஷுவர்க்கங்களேயன்றி வேறில்லையென்று அருளிச்செய்ததும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. ஆக இந்த ஆறுச்லோகங்களே ஸ்ரீரங்கநாதஸ்தோத்திரமென்கிற இந்த ஸ்துதியிற் சேர்ந்தவை, மேலுள்ள இரண்டுச்லோகங்கள் முக்தகங்கள்; அவையும் இந்த ஸ்தோத்ரத்துடன் சேர்த்து அநுஸந்திக்கப்படுமவை. .... (6)

**அஸந்நிக்ருஷ்டஸ்ய நிக்ருஷ்டஜந்தோர்**
**மித்த்யாபவாதேந கரோஷி சாந்திம்,**
**ததோ நிக்ருஷ்டே மயி ஸந்நிக்ருஷ்டே**
**காம் நிஷ்க்ருதிம் ரங்கபதே கரோஷி.** (7)

ஹே ரங்கபதே! அஸந்நிக்ருஷ்டஸ்ய நிக்ருஷ்ட ஜந்தோ: மித்த்யா அபவாதேந சாந்திம் கரோஷி; தத: நிக்ருஷ்டே மயி ஸந்நிக்ருஷ்டே காம் நிஷ்க்ருதிம் கரோஷி.

ஸ்ரீரங்கநாதரே! (உண்மையில்) உமது அருகில் வராத ஒரு நாயின் ஸம்பந்தமான பொய்யான அபவாதத்தினால் சாந்திகர்மாவைச் செய்து போரா நின்றீர் ? அந்த நாயினும் கடைகெட்டவனான அடியேன் வெகு ஸமீபத்தில் வந்திருக்கும்போது என்ன சாந்தி செய்வீர்.

இந்தச்லோகம் ஒரு ஐதிஹ்யத்தினால் தோன்றியது. அதாவது, பட்டர் ஒரு நாள் நம்பெருமாள் புறப்பாட்டுக்காகத் திருமாளிகையில் நின்றும் புறப்பட்டுத் திருப்புன்னைக் கீழே வந்து சேர்ந்து முதலிகளின் செவிகுளிர உபய வேதாந்த விஷயங்களையருளிச் செய்து கொண்டிருந்தார். கோவில்கொத்திலுள்ளவர்கள் புறப்

பாட்டுக்கு முன் அவ்விடத்தே வந்து எழுந்தருளப்பண்ணுவது வழக்கம். அன்று வெகு நாழிகையாகியும் ஒருவரும் வந்து ஸமயம் தெரிவிக்கவில்லை. ஏன் இன்னமும் புறப்பாடு நடைபெறவில்லையென்று தெரிந்து கொள்வதற்காக ஸ்வாமி தாமே ஸன்னிதிக்குள் வந்து விசாரிக்கையில், ஒரு நாய் உள்ளே வந்து விட்டதாகவும், அதற்காக சாந்திஹோமம் நடைபெறுவதாகவும் அதனுல் காலதாமதமாகிறதாகவும் தெரிந்துகொண்டு நேரே பெரிய பெருமாள்பாடே விடை கொண்டு இந்தச்லோகத்தை விண்ணப்பஞ் செய்தாராம்; நாய் ஸன்னிதிக்குள் ஏதோவொரு புறத்தில் நுழைந்ததேயன்றி கர்ப்பக்ருஹத்தினுள் நுழைந்திலது; அதற்கே இவ்வளவு சாந்தி அனுஷ்டிப்பதாயின் அந்த நாயினும் கடைகெட்ட அடியேன் தேவரீருடைய அருகிலேயே வந்துவிட்டேனே; இதற்குஎவ்விதமான பிராயச்சித்தம் செய்தருளத் திருவுள்ளமோ அறியேனென்று ரஸோக்தியாக அருளிச் செய்தார்.

இதில் "மித்யாபவாதேந" என்பதற்குச் சில ரஸிகர்கள் பணிப்பதொன்றுண்டு ஸன்னிதியில் சாந்திஹோமம் நடந்தால் அர்ச்சகபரிசாரகர்களுக்கு வருமான முண்டாதலால் அதையுத்தேசித்து அவர்களில் சிலர் நாய்க்குட்டியொன்றை ஒரு கூடையிலிட்டு உள்ளே கொண்டுபோய் விட்டிட்டு 'ஐயோ! நாய்வந்து விட்டது, சாந்திஹோமம் செய்யவேணும்' என்பர்களாம்; சிலஸமயங்களில் அப்படியும் செய்யாமல் 'நாய் உள்ளேவந்து ஓடிற்று, நான் கண்டேன்' என்று பொய்யாகச் சொல்லி சாந்திஹோமம் செய்ய நிர்ப்பந்திப்பர்களாம்; இது பட்டருடைய திருச்செவியில்பட்டே மித்யாபவாதேந கரோஷி சாந்திம்' என்னருளிச் செய்தாரென்று.

கீழ்ச்லோகத்தில் ''ரத்யாசுநாம் அந்யதமோ பவேயம்' என்றிருக்கையாலே அதற்குச் சார்பாக இந்தமுக்தகமும் இங்கேசேர்த்து அநுஸந்திக்கப்படுகிறதுபோலும்.

**ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரிஸிம்ஹாசலௌ**
**ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ் ச பதரீ நாராயணம் நைமிசம்,**
**ஸ்ரீமத்த்வாரவதீ ப்ராயாக மதுராயோத்யா கயாபுஷ்கரம்**
**ஸாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:**

எம்பெருமானுருடைய திவ்யதேசயாத்திரையைப்பற்றி நித்யாநுஸந்தானம் செய்வதற்காக பட்டர் பண்டே அருளிச்செய்திருந்த முக்தகம் இது. தென்திருவரங்கம் திருவத்திமாமலை திருவேங்கடமலை (கருடாசலமென்கிற) திருநாராயணபுரம் ஸிம்ஹாசலம் ஸ்ரீகூர்மம் ஜகந்நாதம் ஸ்ரீபதரிகாச்ரமம் நைமிசாரணியம் த்வாரகை ப்ரயாகை வடமதுரை அயோத்யை கயை புஷ்கரம் ஸாளக்ராமம் ஆகிய இந்ததிவ்ய க்ஷேத்திரங்களிலே எம்பெருமானுர் உகந்து வர்த்தித்தபடியை அருளிச்செய்தாராயிற்று.

மூன்றுவதுபாதம் முழுவதும் ஸமஸ்தபதம். *ஸர்வோ த்வந்த்வோ விபாஷயா ஏகவத் பவதி* என்கிற பரிபாஷையினுல் ஏகவசநாந்தமாய்க் கிடக்கிறது. ''அயோத்யாகயா:'' என்று விஸர்க்காந்தமான பாடமும் காண்கிறது. அப்போது அதுவரைக்கும் ஒரு பதம். த்விதீயாபஹுவசநாந்தம். இதுவும் பொருத்தமான பாடமே. .... (*)

பட்டர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

# ஸ்ரீரங்கநாத ஸ்தோத்ரவுரை - முற்றிற்று.

ஸ்ரீ:

கூரத்தாழ்வான் இளைய திருக்குமாரரான ஸ்ரீவேதவ்யாஸபட்டரென்கிற
சீராமப்பிள்ளையின் திருக்குமாரரான வேதாசார்யபட்டர்

அருளிச் செய்த

# க்ஷமாஷோடசிஸ்தோத்ரம்.

ஸ்ரீரங்கநாதனுடைய பொறுமையென்னும் குணத்தை வருணிக்கும்
பதினாறு ச்லோகங்கள் கொண்ட துதி.

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரையுடன் கூடியது.

தனியன்

**யச் சக்ரே ரங்கிணஸ் ஸ்தோத்ரம் க்ஷமாஷோடசிநாமகம்,**
**வேதவ்யாஸஸ்ய தநயம் வேதாசார்யம் தமாச்ரயே.**

ஸ்ரீரங்கநாதன் விஷயமான க்ஷமாஷோடசிஸ்தோத்ரத்தை யருளிச்செய்தவரும் வேதவ்யாஸ பட்டருடைய திருக்குமாரருமான வேதாசார்யபட்டரைப் பணிகின்றேனென்கை. க்ஷமாவிஷயமான ஷோடசச்லோகங்களையுடைய ஸ்தோத்ரமாதலால் க்ஷமாஷோடசி ஸ்தோத்ரமென்று இதற்குத் திருநாமமாயிற்று. .... *

—[—]—

**ஸ்ரீரங்கேச யயா கரோஷி ஜகதாம் ஸ்ருஷ்டிப்ரதிஷ்டாக்ஷயாந்**
**அத்ராமுத்ர ச போகமக்ஷயஸுகம் மோக்ஷஞ்ச தத்தத்த்ருஷாம்,**
**த்வத்ஸ்வாதந்த்ர்யமபாஸ்ய கல்பிதஜகத்க்ஷேமாதிஹ்ருத்யா ஸ்வத:**
**க்ஷாந்திஸ் தே கருணாஸகீ விஜயதாம் க்ஷேமாய ஸர்வாத்மநாம்.** (1)

ஸ்ரீரங்கேச! ஜகதாம் ஸ்ருஷ்டி ப்ரதிஷ்டா க்ஷயாந் அத்ர போகம் அமுத்ர போகம் ச அக்ஷயஸுகம் மோக்ஷம் ச தத்தத் த்ருஷாம் யயா கரோஷி (ஸா) த்வத்ஸ்வாதந்த்ர்யம் அபாஸ்ய கல்பித ஜகத் க்ஷேமா ஸ்வத: அதிஹ்ருத்யா கருணாஸகீ தே க்ஷாந்தி: ஸர்வாத்மநாம் க்ஷேமாய விஜயதாம்.

ஸ்ரீரங்கநாதரே! உலகங்களினுடையபடைத்தல் காத்தல் அழித்தல் என்னுங் காரியங்களையும் இஹலோக போகங்களையும் ஆமுஷ்மிக போகங்களையும்கைவல்யானந்தத்தையும் பரமபதானந்தத்தையும் அவ்வவற்றில் விருப்ப முடையவர்களுக்கு யாதொரு பொறுமைக் குணத்தினால் உண்டாக்குகின்றீரோ, அப்படிப்பட்டதாய் தேவரீருடைய ஸ்வாதந்திரியத்தைத் தள்ளி ஜகத்துக்கு க்ஷேமத்தைவிளைவிப்பதாய் இயற்கையாகவே பரம போக்யமாய் கருணாகுணத்திற்குத் துணையான தேவரீரது பொறுமைக் குணமானது ஸகல சேதநருடையவும் க்ஷேமத்தின் பொருட்டு நித்ய ஸ்ரீர்நித்ய மங்களமாக விளங்குக.

இந்த திவ்யக்ரந்தம் இடையூறின்றி முடிவதற்காகச் செய்த மங்களாசரணமிது. ஆசீர் நமஸ்க்ரியா வஸ்துநிர்தேசங்களுள் இது ஆசீஸ்ஸெனப்படும். இந்த ஸ்துதி முழுவதும் க்ஷமை யென்கிற ஒரு குணத்தைப் பற்றியதே யாதலால் அந்த க்ஷமைதனக்கே இந்த ஆசீஸ்ஸுமாயிற்று.

ஸகலஜகத்துக்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்வதற்கும் இம்மை
மறுமை யின்பங்களை யளிப்பதற்கும் ஸாதனமாகி ஜகத் க்ஷேமத்தை நிர்வஹியாநின்
றது எம்பெருமானுடைய க்ஷமாகுணம். அப்பெருமானுடைய நிரங்குச ஸ்வாதந்த்ர்
யமே தலையெடுக்குமாகில் ஜகத்துக்கு க்ஷேமம் அரிதாகும்; இந்த க்ஷமையானது
அந்த ஸ்வாதந்த்ரியத்தைத் தலையெடுக்கவொட்டாதபடி அமுக்கி, கருணாகுணத்தை
யும் துணை கொண்டு அவ்வோபுருஷார்த்தங்களிலே ருசியுடைய சேதநர்களுக்கெல்
லாம் வேண்டினவற்றை யளித்துக் காக்கின்றதாயிற்று. இப்படிப்பட்ட க்ஷமா
குணம் நீடூழி நின்று விளங்கி உலகுகெல்லாம் சேமவைப்பாகவேணு மென்றாராயிற்று.

ரக்ஷணத்திற்கு க்ஷமை வேண்டுமானாலும் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்கும்
க்ஷமை வேண்டுமோ வென்னில்: வேண்டும்;''யௌகபத்யம் அநுக்ரஹகார்யம்''என்பர் நம்
முதலிகள். இதுதன்னை ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் *ஸம்வர்த்தவர்த்தி நிகிலம்*என்ற ச்லோ
கத்தில் ஆழ்வான் விரியவருளிச்செய்தார். கரணகளேபரங்களை அநீதிப்ரவ்ருத்தி
களுக்கு ஹேதுவாக்கி அநர்த்தப்பட்டுப் போகாதபடி ஒடுக்கிவைக்கைதான் ஸம்ஹார
மாகையாலே அதுவும் அநுக்ரஹ கார்யமென்றிட்டு க்ஷமாஸாபேக்ஷமா யிருக்கும்.

அக்ஷயஸுகம் என்று அபுநராவ்ருத்திலக்ஷணமான கைவல்யஸுகத்தைச் சொல்லு
கிறது; *ஐச்வர்ய மக்ஷரகதிம்* என்ற விடத்திற்போல. மூன்றாவது பாதத்தில் அபாஸ்ய,
அபோஹ்ய என்பன பாடபேதங்கள் : பொருள் ஒன்றே. கருணாஸகீ—தத்புருஷனாகவு
மாம் பஹுவ்ரீஹியாகவுமாம். கருணையும் பொறுமையும் கூடியே உலகுக்கு க்ஷேம
மளிப்பன வென்றுணர்க. .... .... .... (1)

பாபாநாம் ப்ரதமோஸ்ம்யஹம் பவதி சேத் சாஸ்த்ரம் ப்ரமாணம் பரம்
ஸ்ரீரங்கேச ந வித்யதேத்ர விசயஸ் ஸந்த்யேவ தே ஸாக்ஷிண:,
ப்ருஷ்ட்வா தாநதுநா மயோதிதமிதம் ஸத்யேந க்ருஹ்யேத சேந்
ஸத்யம் ஹ்யுக்தமிதி க்ஷமஸ்வ பகவந் ஸர்வம் ததஸ்மத்க்ருதம். (2)

ஸ்ரீரங்கேச, அஹம் பாபாநாம் ப்ரதம: அஸ்மி, சாஸ்த்ரம் பரம் ப்ரமாணம் பவதி சேத் அத்ர விசய: ந வித்யதே, தே ஸாக்ஷிண: ஸந்தி ஏவ, அதுநா தாந் ப்ருஷ்ட்வா மயா உதிதம் இதம் ஸத்யேந க்ருஹ்யேத சேத் பகவந்! ஸத்யம் ஹி உக்தம் இதி அஸ்மத்க்ருதம் ஸர்வம் தத் க்ஷமஸ்வ.

ஸ்ரீரங்கநாதரே! அடியேன் பாபிகளில்தலைவனாகவுள்ளவன்; சாஸ்த்ரமானது பரம ப்ரமாணமாக ஆகுமாகில் அடியேன் மஹா பாபியென்பதில் ஸந்தேஹமில்லை; தேவரீருக்கு [விசாரிக்கும்படியாக] ஸாக்ஷிகள் இருக்கவே யிருக்கின்றார்கள்; இப்போது அவர்களை வினவி அடியேன் சொன்ன விது ஸத்யமாகக் கொள்ளப்படுமாகில், எம்பெருமானே! (இவனால்) உண்மை பேசப்பட்டதன்றோ வென்று இதையே குணமாகக்கொண்டு அடியேன் செய்த அந்தப்பாவங்களை யெல்லாம் பொறுத்தருள்க.

* * * எவ்வளவு பாபங்கள் செய்தாலும் பொய் சொல்லி யொளித்திடாமல்
உள்ளது உள்ளபடியே ஒப்புக்கொண்டால் எம்பெருமானுடைய பொறுமைக்கு
இலக்காகலாமென்பது இந்தச்லோகத்தினால் காட்டப்படுகிறது. ஸ்வாமி! அடியேன்
பாவமே செய்து பாவியானவர்களில் முதல்வனாக எண்ணக்கூடியவனாயிருக்கின்றேன்
என்பதில் ஸந்தேஹமில்லை. நான் சொல்லுகிறவிது பொய்யென்று திருவுள்ளமாகில்
தேவரீரால் ஏற்படுத்தப்பட்டுள்ள ஸாக்ஷிகளான சந்த்ர ஸூர்ய பூதபஞ்சகாதிகளைக்
கேட்டு உண்மை தெளியவடுக்கும்; அங்ஙனம் கேட்டு அவர்களால் அடியேனை ஸத்ய
வாதியாகத் திருவுள்ளம்பற்ற நேர்ந்தால், ஸத்யமென்கிற வொருகுணமுடைய
விவன்பக்கலிலே நாம் க்ஷமை காட்டவேண்டாவோ வென்று தேவரீருக்கே இரக்கம்
பிறந்து தீரும் என்பது பரமதாத்பரியம். செய்தபாவங்களை இல்லைசெய்யாதே
இசைந்து போருகின்ற வடியேனை க்ஷமைக்கு இலக்காக்குவதே தகுதியென்றாராயிற்று.

''பவதிசேத் சாஸ்த்ரம் ப்ரமாணம் பரம்'' என்பது மத்யம தீபமாகி முன்னும் பின்னும் அந்வயிக்கும். 'தே' என்பது ப்ரதமாபஹுவசநமாகவும் ஷஷ்ட்யேகவசனமாகவும் கொள்ளத்தகும். ஸத்யேந என்றது ஸத்யத்வேந என்றபடி; தத்த்வேந என்றும் பாடமுண்டு. .... .... .... .... (2)

த்வத்க்ஷாந்தி: கலு ரங்கராஜ! மஹதீ: தஸ்யா: புநஸ் தோஷணே
பர்யாப்தம் ந ஸமஸ்த சேதநக்ருதம் பாபம் ததோ மாமகம்,
லக்ஷ்யம் நேதி ந மோக்துமர்ஹஸி யத: குத்ராபி துல்யோ மயா
நாந்யஸ் ஸித்த்யதி பாபக்ருத் தததுநா லப்தம்து நோபேக்ஷ்யதாம். (3)

ஹேரங்கராஜ ! த்வத் க்ஷாந்தி : மஹதீ கலு, தஸ்யா: தோஷணே புந: ஸமஸ்த சேதந க்ருதம் பாபம் ந பர்யாப்தம்; தத: மாமகம் பாபம் ந லக்ஷ்யம் இதி மோக்தும் ந அர்ஹஸி; யத: மயா துல்ய: பாப க்ருத் அந்ய: குத்ராபி ந ஸித்யதி; தத் அதுநா லப்தம் து ந உபேக்ஷ்யதாம்.

ஸ்ரீரங்கநாதனே! உன்னுடைய பொறுமைக் குணமானது மிகவும் பெருவயிறு உடையதன்றோ; அதை (வயிருர வுணவுகொடுத்து) த்ருப்தி செய்விக்கும் விஷயத்தில் உலகிலுள்ள சேதநர்களெல்லாரும் செய்த பாவமும் வல்லதன்று; ஆனபின்பு நானொருவன் செய்த பாபம் எந்தமூலைக்கென்று நினைத்து என்னை நீ உபேக்ஷிக்கலாகாது; ஏனென்றால், என்னோடொத்த பாபிஷ்டன் தேறமாட்டானன்றோ; ஆதலால் இப்போது கிடைத்த விதனை உபேக்ஷிக்க வேண்டா.

ஸ்ரீரங்கநாதரே! தேவரீர் *ஒருவரையும் நின்னொப்பாரொப்பிலா வென்னப்பா* என்றும், *தன்னொப்பாரில்லப்பன்* என்றும் காருண்ய ஸௌந்தர்யாதிகளிலே ஒப்பற்றவராகப் பேர்படைத் திருக்குமாபோலே அடியேனும் பாபிகளில் ஒப்பற்றவனென்று பேர் பெற்றிருக்கிறேன்; ஆதலால் என்னொருவனுடைய பாபங்களைக் கொண்டுதான் தேவரீருடைய க்ஷமை வயிருரவுண்டுகளிக்கமுடியும். உலகத்திலுள்ள மற்றெல்லாருடையவும் பாபங்களும் ஏகதேசமாக இருந்தாலும் அடியேனுடைய பாபங்களை அப்படி நினைக்கலாகாது; நானொருவன் தவிர மற்ற ஸமஸ்த சேதநர்களும் செய்த பாபங்களத்தனையும் தேவரீருடைய க்ஷமைக்கு ஒருதுற்றுக்கு ஆற்ருவென்பது வாஸ்தவமே. அடியேன் பாபிகளில் விலக்ஷணனுதலால் எனது பாபங்களைக் கொண்டே தேவரீருடைய க்ஷமை வயிறு நிரப்பத்தகுமென்றுராயிற்று.

தயாசதகத்திலுள்ள *மயி திஷ்டதி துஷ்க்ருதாம் ப்ரதாநே மிததோஷாநிதராந் விசிந்வதீ த்வம், அபராதசநைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே! கதம் பவித்ரீ*என்றச்லோகம் பெரும்பாலுமிதனையொக்கும்.

த்வத்க்ஷாந்தி: மஹதீ'' என்றது மஹத்தான குக்ஷியையுடையது என்றபடி. ....(3)

புண்யம் பாபமிதி த்வயம் கலு தயோ: பூர்வேண யத் ஸாத்யதே
தத் த்வத்விஸ்ம்ருதிகாரகம் தநுப்ருதாம் ரங்கேச ஸஞ்ஜாயதே,
பாச்சாத்யஸ்ய து யத் பலம் ததிஹ தே துக்கச்சிதஸ் ஸ்மாரகம்
தேநாநேந க்ருதம் ததேவ சிசுநேத்யஸ்மத்க்ருதம் க்ஷம்யதாம். (4)

ஹே ரங்கேச ! புண்யம் பாபம் இதி த்வயம் கலு, தயோ: பூர்வேண யத் ஸாத்யதே தத் தநுப்ருதாம் த்வத் விஸ்ருதி காரகம் ஸம்ஜாயதே, பாச்சாத்யஸ்யது யத் பலம் தத் இஹ துக்கச்சித: தே ஸ்மாரகம்; தேந அநேந சிசுநா தத் ஏவ க்ருதம் இதி அஸ்மத்க்ருதம் க்ஷம்யதாம்.

ஸ்ரீரங்கநாதனே! (உலகில்) புண்யமென்றும் பாவமென்று மிரண்டுதானே யுள்ளது; அவ்விரண்டினுள் முந்தியதான புண்யத்தினல் பெறக்கூடியது ஸம்பத்து; அது மனிதர்களுக்கு உன்னை மறக்கச் செய்வதாக ஆகின்றது; மற்றையதானபாபத்தின் பயனுகப் பெறக்கூடிய துக்காநுபவமானது இவ்வுலகின்கண் ஆர்த்திஹரனை உன்னை (இடைவிடாது) நினைக்கச் செய்வதாகும்; ஆதலால் இந்தப் பையல் (நம்மை அநவரதம் நினைக்கச் செய்யுமதான) அந்தப் பாபத்தையே செய்து போந்தானென்று திருவுள்ளம் பற்றியாம் செய்த தீவினை யெல்லாம் க்ஷமிக்கத் தக்கது.

தாம் பாபம் செய்தது மிகவும் பொருத்தமானதென்று ஒருசமத்காரமாகப் பேசுகிருரிதில். உலகில் புண்யமென்றும் பாபமென்றும் இரண்டேயுள்ளன. புண்யம் செய்தால் அதன்பலனுக ஸம்பத்துக்களையநுபவிக்க நேரும்; பாபஞ்செய்தால் அதன் பலனுக பலவகைக் கஷ்டங்களையநுபவிக்கநேரும். ஸம்பத்துக்களை யநுபவிக்க நேர்ந் தால் பகவானை ஸ்மரிக்க அவகாசமே யில்லையாகிறது; கஷ்டங்களையநுபவிக்கும் போதுதான் “பகவானே! உனக்குக் கண்ணில்லையா?” என்று சொல்லிக்கொண் டாவது பகவானைச்சிந்திக்க நேர்கின்றது. ஆகவே பகவானுடைய விஸ்மரணத்தை யுண்டுபண்ணவல்ல ஸம்பத்துக்களுக்குக் காரணபூதமான புண்யத்தைச் செய்வதிற் காட்டிலும், பகவானுடைய நிரந்தரஸ்மரணத்தை யுண்டு பண்ணவல்ல கஷ்டங்க ளுக்குக் காரணபூதமான பாபத்தைச் செய்வதேயன்ருே நன்று. இந்த நிருபணத்தின் படிநன்றென்று நினைக்கத்தக்க பாபத்தையே அடியேன் செய்திருப்பது நன்றுதானே; இதனை க்ஷமிக்கத் தடையுண்டோ வென்கிருர். புண்யம் செய்து செல்வவாழ்க்கை யிலிருப்பவர்கள் பெம்ருபாலும் எம்பெருமானை ஸ்மரிக்கவும் அவகாசம் பெருர்க ளென்பதும், பாபஞ்செய்து க்லேசங்களையநுபவிக்குமவர்களே எம்பெருமானை இடை யருது சிந்திக்க அவகாசம் பெறுகின்ருர்களென்பதும் இங்குத் தெரிவிக்கப்பட்ட தாகிறது. :— பூர்வபுண்ய விபவவ்யயலப்தாஸ் ஸம்பதோ விபத ஏவ விம்ருஷ்டாঃ” என்ற நைஷதச்லோகம் இதில் இரண்டாவது பாதத்திற்குச்சேர அநுஸந்தேயம். (4)

**புண்யம் யத் தவ பூஜநம் பவதி சேத் தத்கர்த்துரிஷ்டே க்ருதே**
**தத் ஸ்யாத் ரங்கபதே க்ருதப்ருதிக்ருதம் ஸர்வேபி தத் குர்வதே,**
**பாபஞ்சேத் அபராத ஏவ பவதஸ் தத்கர்த்ருஸம்ரக்ஷணே**
**க்ஷாந்திஸ் தே நிருபாதிகா நிருபமா லக்ஷ்யேத தத் க்ஷம்யதாம். (4)**

ஹே ரங்கபதே! புண்யம் (இதி) யத் தத் தவ பூஜநம் பவதி சேத் தத்கர்த்துঃ இஷ்டே க்ருதே தத்க்ருதப்ரதிக்ருதம் ஸ்யாத், தத் ஸர்வே அபி குர்வதே, பாபம் சேத் பவதঃ அபராதঃ ஏவ; தத்கர்த்ரு ஸம்ரக்ஷணே (ஸதி) தே க்ஷாந்திঃ நிருபாதிகா நிருபமா லக்ஷ்யேத தத் க்ஷம்யதாம்.

ஸ்ரீரங்கநாதனே! புண்யமென்பது உன்னை வழிபாடு செய்வதாக முடிகின்றது. அந்தப்புண்ணியம் செய்த வனுக்கு (நீ) இஷ்டஸித்தியைப் பண்ணிக் கொடுத் தால், செய்த நன்றிக்குக் கைம்மாறு செய்ததாகு மத்தனை அது; அவ்விதமான காரியத்தை (உலகில்) எல்லாருமே செய்கின்ருர்கள். உன் விஷயத்தில் அப ராதப்படுவ தென்பது யாதோ,அதுவே பாபமெனப் படும்; அப்படிப்பட்ட பாபம் செய்யுமவனை ரக்ஷிக்கு மளவில் உன்னுடையபொறுமைக்குணமானது உபா தியற்றதாகவும் ஒப்பற்றதாகவும் காணப்படும்; ஆகவே க்ஷமித்தருள்வது.

புண்யம் செய்தவர்களை ரக்ஷிப்பதிற் காட்டிலும் பாபம் செய்தவர்களை ரக்ஷிப்பதே யுக்தமான தென்று நிருபிக்கிருரிதில். * ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ் தாமுல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி நவைஷ்ணவঃ * என்று எம்பெரு மான் தானே சோதிவாய் திறந்தருளிச் செய்தபடியே ச்ருதி ஸ்மிருதி முதலான வற்றில் விதித்தபடி செய்கை புண்யமென்றும் அவற்றில் மறுக்கப்பட்ட அவற்றைச் செய்கை பாபமென்றும் உலகமறியும். *வர்ணச்ரமாசாரவதா புருஷேண பரঃமர்ந், விஷ்ணுராராத் யதேபந்தாঃ நாத்யஸ் தத்தோஷகாரகঃ*என்ற பிரமாணத்தின்படி வர்ணச்ரமாசாரங்களோடு கூடியிருக்கையாகிற புண்யமானது பகவதாராதந ரூபமென்றும் தெரிவிக்கப்பட்டது. ஆகவே தன்னை ஆராதிப்பதாகிற புண்யத்தைச் செய்பவர்களையே எம்பெருமான் ஸம்ரக்ஷிக்கிருனென்று தேறினுல் இது க்ருதப்ரதிக்ருதமாயிற்று; அதாவது உபகாரம் செய்தவர்களுக்கு ப்ரத்யுபகாரம் செய்தபடியாயிற்று. செய்த நன்றிக்குக் கைம்மாறு செய்கையாகிற விது உலகில் யாவரிடத்திலும் காண்பதொன்ருதலால் இது எம்

மானுக்கு ஒரேற்றமாகுமோ? நிர் ஹேதுகவிஷயீகாரம் செய்வதே தன்னேற்றமாதலால் அபராதிகளையும் ரக்ஷித்துப் பெருமை பெறப் பார்க்கவேணுமே. அப்போதன்றோ க்ஷமாகுணத்தின் வீறு விளங்கும் என்று விஜ்ஞாபித்துத் தம்பக்கலிலே க்ஷமையைக் காட்டியருளும்படி வேண்டினாராயிற்று.

''பவதி சேத்'' என்றது—பவத்யேவ என்றபடி; ''உச்சைர் கதிர் ஜகதி ஸித்யதி தர்மதச் சேத்''[சம்பூராமாயணே] என்றவிடத்திற் போல. .... .... (5)

**ந த்வித்ராணி க்ருதாந்யபேந நிரயைர் நாலம் புநஃ கல்பிதைஃ**
**பாபாநாமிதி மத்க்ருதே தததிகாந் கர்த்தும் ப்ரவ்ருத்தே த்வயி,**
**தேப்யோபப்யபதிகாநி தாந்யஹமபி க்ஷுத்ரஃ கரோமி க்ஷணாத்**
**தத் யத்நஸ் தவ நிஷ்பலஃ கலு பவேத் தத் தே க்ஷமைவ க்ஷமா. (6)**

ரங்கபதே!) அநேந க்ருதாநி:(பாபாநி) ந த்வித்ராணி, கல்பிதைः நிரயைः ந அலம்- இதி மத்க்ருதே தததிகாந் கர்த்தும் த்வயி ப்ரவ்ருத்தே ஸதி க்ஷுத்ரஃ அஹம் அபி க்ஷணாத் தேப்யः அபி அப்யதிகாநி தாநி கரோமி, தத் தவ யத்நः நிஷ்பலः கலு பவேத், தத் க்ஷமா ஏவ தே க்ஷமா.

ஸ்ரீரங்கநாதனே! இப்பையலினால் செய்யப்பட்ட பாபங்களானவை ஸ்வல்பமானவையல்ல;(ஆதலால்) பாபங்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்ற நரகங்கள் போதா என்று கருதி அடியேனுக்காக உள்ள நரகங்களைக்காட்டிலும் அதிகநரகங்களை ஸ்ருஷ்டிக்க நீ முயன்றால் அற்பனான அடியேனும் ஒருநொடிப் பொழுதில் முன்னிலும் அதிகமான பாபங்களையே செய்திடுவேன்; ஆகவே உன்னுடைய முயற்சி பயனற்றதாக வன்றோ ஆய்விடும். ஆனபின்பு க்ஷமிப்பது தான் உனக்குத் தகுதியானது.

தம்முடைய பாவங்கள் அளவுகடந்தவை யென்பதையும் ஒருநாளளவிலே ஓய்கின்றனவல்ல என்பதையும் ஒரு சமத்காரமாகச் சொல்லி இவற்றை க்ஷமிப்பது தவிர வேறுவழியில்லை யென்கிறார், பாபபலன்களை அநுபவிப்பதற்காக இப்போது ஸ்ருஷ்டித்திருக்கின்ற நரகங்கள் போதாவென்று எண்ணி இன்னமும் அடியேனுக்காக நரகங்களை தேவரீர் ஸ்ருஷ்டிக்கப் புகுமளவில் அடியேனும் மேன்மேலும் ஓயாது பாபங்களை அளவின்றிச் செய்துகொண்டே போருவேன். தேவரீர் நரகஸ்ருஷ்டியில் வல்லவரா? அடியேன்பாபஸ்ருஷ்டியில் வல்லவனா? என்று ஆராயுமளவில் தேவரீருடைய வல்லமை தாழ்ந்ததாகி அடியேனுடைய வல்லமையே மேன்மை பெற்று ஓங்கி நிற்கும். ஆகவே தேவரீர் வீணாக நரகஸ்ருஷ்டியில் முயல்வதைவிட இப்பையல் செய்தபாவங்களை க்ஷமிப்பதே நலம்' என்று திருவுள்ளம்பற்றி நிற்றல் தகும் என்றாராயிற்று. [மத்க்ருதே என்றது அவ்யயம்;] என்பொருட்டு என்றபடி. (6)

**ஸம்பூயாகிலபாதகைர் பஹுவிதம் ஸ்வம் ஸ்வம் பலம் தீயதாம்**
**ஸர்வம் ஸஹ்யமிதம் மம த்வயி ஹரே ஜாக்ரத்யபி த்ராதரி,**
**துஃக்காக்ராந்த மவேக்ஷ்ய மாமிஹ ஜநோ துஷ்டாசயஸ் த்வத்குணந்**
**க்ஷாந்த்யாதீந் ப்ரதி துர்வசம் யதி வதேத் ஸோடும் ந தத் சக்யதே. (7)**

ஹரே! அகிலபாதகைः ஸம்பூய பஹுவிதம் ஸ்வம் ஸ்வம் பலம் தீயதாம், இதம் ஸர்வம் மம ஸஹ்யம், இஹ துஷ்ட ஆசயः ஜநः; த்ராதரி த்வயி ஜாக்ரதி அபி மாம் துஃக்க ஆக்ராந்தம் அவேக்ஷ்ய க்ஷாந்தி ஆதீந் த்வத் குணாந் ப்ரதி துர்வசம் வதேத் யதி தத் ஸோடும் ந சக்யதே.

எம்பெருமானே! (நான் செய்த) ஸகலபாபங்களும் ஒன்று சேர்ந்து தாம்தாம் கொடுக்கவேண்டியபல வகைப்பட்ட பலன்களைத் தாராளமாகவே கொடுக்கட்டும்; இதையெல்லாம் நான் ஸஹித்தே யாக வேண்டும். (ஆனாலும்) இவ்வுலகில் துர்புத்தியுள்ள ஜனமானது, ரக்ஷகனான நீ ஜாகருகனாக இருக்கவும் என்னை (பாபபலன்களான) துக்கங்களையநுபவிப்பவனாகக் கண்டு பொறுமைமுதலிய உனது திருக்குணங்களைப் பற்றி சொல்லத்தகாத வார்த்தையைச் சொல்லுமாகில் அதுதான் (அடியேனால்' ஸஹிக்க முடியாதது.

பிரானே! அடியேன் பலவகைப்பட்ட பாவங்களை நிரவதிகமாகச் செய்து போந்திருக்கிறேனதலால் அவையெல்லாமொன்றுகூடிப் பலனளித்தே தீரவேண்டும் பாபங்கள் தரும் பலன் துக்கமேயாதலால் பலவகைப்பட்ட துக்கங்கள் அடியேனுக்கு நேர்ந்து தீர வேண்டும். அவற்றை யநுபவிக்க அடியேன் இருய்க்க வொண்ணுமோ? *யத் யத் பவ்யம் பவது பகவந்! பூர்வகர்மாநுரூபம்* என்று சொல்லிக் கொண்டு எதையும் அநுபவிக்க வேண்டியதே; "தன்காய் பொருத கொம்புண்டோ?" என்றபடி எதுவும் ஸஹ்யமேயாகும்; ஆனல் ஒன்றுமாத்திரமே அடியேனல் ஸஹிக்க வொண்ணதது; அது எது வென்னில்; ஸர்வரக்ஷக னென்று பேர் பெற்றிருக்கின்ற நீ ரக்ஷாதீக்ஷிதனயிருக்கச் செய்தேயும் அந்த ரக்ஷணத்திற்கு நானெருவன் இலக்காகாமல் பாப பலன்களான துக்கங்களையே அநுபவித்துக் கொண்டிருந்தேனகில் இது உன்னுடைய க்ஷமாதி குணங்களுக்கு அவத்யமாகுமன்ருே? உலகில் ரந்த்ராந்வேஷி ஜனங்கள் பலவுண்டே: உனது திருக்குணங்களின்மீது என்ன குற்றங்குறை கூறலாமென்று தேடித் திரிவார் பலருண்டே; அப்படிப்பட்ட துர்ஜனங்கள், நான் துக்காநுபவம் செய்வதே காரணமாக உன்னுடைய க்ஷமை முதலிய திருக்குணங்களின் மீது வாய்கொண்டு சொல்ல வொண்ணத அவத்யத்தைக் கூறுமே; அதுதான் அடியேனல் ஸஹிக்கப் போகாதது. ஆதலால் அஸஹ்யமான அந்த துக்கத்தை மாத்திரம் உண்டுபண்ணுதொழிய வேணும்—என்று ப்ரார்த்திக்கும் முகத்தினல் "அடியேன் மீது க்ஷமை முதலிய குணங்களை ப்ரகாசிக்கச் செய்தருளி அடியேன் செய்த பாவங்களையெல்லாம் பொறுத்தருளி உலகம் புகழ நிற்கவேணும்" என்று விண்ணப்பஞ் செய்தாராயிற்று.

ஸ்தோத்ர ரத்நத்தில் * அபூதபூர்வம் மம பாவி கிம் வா * என்கிற ச்லோகத்தைத் தழுவி அருளிச்செய்ததாயிற்று இந்த ச்லோகம், இந்த ஜன்மத்திற் செய்தவை, செய்யவேணு மென்று ஸங்கல்பித்திருப்பவை, ஜந்மாந்தரங்களிற் செய்தவை * த்விஷந்தஃ பாபக்ருத்யாம் * என்கிறபடியே அசல் பிளந்தேறிட்டவை முதலான எல்லாப் பாபங்களையும் நினைத்து அகிலபாதகை : என்றது. .... .... (7)

**க்ஷாந்திர் நாம வரோ குணஸ் தவ மஹாந் ஸ்ரீரங்கப்ருத்விபதே**
**ஸோயம் ஸந்நபி ஸாபராதநிவஹாபாவே ந வித்யோததே,**
**தஸ்மாந் நைகவிதாபராதகரணே நிஷ்டாவதா நித்யசஃ**
**ப்ராப்நோத்யேஷ மயா ப்ரகாசமதுலம் ப்ராப்ஸ்யாம்யஹஞ் ச ப்ரதாம். ()**

ஸ்ரீரங்கப்ருத்வி பதே! தவ க்ஷாந்திஃ நாம வரஃ குணஃ மஹாந்; ஸோயம் ஸந் அபி ஸாபராத நிவஹ அபாவே ந வித்யோததே; தஸ்மாத் நைகவித அபராத கரணே; நித்யசஃ நிஷ்டாவதா மயா ஏஷஃ அதுலம் ப்ரகாசம் ப்ராப்நோதி ; அஹம் ச ப்ரதாம் ப்ராப்ஸ்யாமி.

ஸ்ரீரங்கராஜனே! உனது மிகச்சிறந்த பொறுமையென்னுங் குணமானது மஹாவைபவம் பொருந்தியது; இக்குணமானது இரா நின்றதே யாகிலும் அபராதிகளின் கூட்டம் இல்லையாகில் ப்ரகாசிக்கமாட்டாது; ஆதலால் பல்வகைக் குற்றங்களையுஞ் செய்வதில் அநவரதமும் ஊக்கமுள்ள அடியேனலே இந்த க்ஷமாகுணமானது ஒப்பற்ற ப்ரகாசத்தை யடைகின்றது; (அடியேனும் உனது க்ஷமாகுணத்தை விளங்கச் செய்தவ னென்கிற) பெரும் புகழையடையப் போகிறேன்.

குணக்கடலான எம்பெருமானுக்கு எண்ணில் பல் குணங்களிருந்தாலும் அவற்றுள் பொறுமைக்குணமே மிகச்சிறந்தது. இது பெருவயிறுவாய்ந்தது. அபரிமிதமான அபராதிவர்க்கம் இருந்தால்தான் இக்குணம் மிகவிளங்கும்; இல்லையேல் ஒளிமழுங்கும். ஆகவே அபரிமிதமான அபராதங்களைச் செய்வதிலேயே அல்லும்பகலும் ஆவல்கொண்டவனை அடியேனெருவனலேயே இத்திருக்குணம் மிகவிளக்கமடையக்கடவது. இதனை விளங்கச் செய்வதினுலுண்டாகும் பெரும்புகழும் எனக்கேஉரித்தாகும்.

—என்ருராயிற்று. ஸாபராத நிவஹாபாவே என்றபதத்தில் (ஸாபராத) என்பதை நிவஹத்திற்கு விசேஷணமாக்கி 'அபராதங்களோடு கூடின கூட்டம்' என்று பொருள் கொள்ள நினைப்பது பொருந்தாது. இப்படி ஸமாநாதிகரணமாகவன்றிக்கே ''ஸாபராதாநாம் நிவஹ:'' என்று வ்யாதிகரணமாகவே கொள்ளவேணும். கூட்டமென்ற போதே யாருடைய கூட்டமென்று ஆகாங்க்ஷை பிறக்குமே. ஸாபராதா: என்றது அபராதிந: என்றபடி. [நைக] ஏகசப்தத்திற்கு நசப்தத்தோடே ஸமாஸமென்றுணர்க. (8)

மத்பாபக்ஷபணைய யோஜயஸி சேத் கோரேண தண்டேந மாம்
ரங்காதீச்வர கேவலாககரணாத் துக்கம் மம ஸ்யாந் மஹத்,
தத்த்ரஷ்டுர் பவதோபி துக்கமதுலம் கோரம் தயாளோ பவேத்
தஸ்மாத் தேபி ஸுகாய மத்க்ருதமிதம் ஸர்வம் த்வயா க்ஷம்யதாம். (9)

தயாளோ ரங்காதீச்வர! மத்பாப க்ஷபணாய கோரேண தண்டேந மாம் யோஜயஸி சேத் கேவல அக கரணாத் மம மஹத் துக்கம் ஸ்யாத்; தத் த்ரஷ்டு: பவத: அபி அதுலம் கோரம் துக்கம் பவேத்; தஸ்மாத் தே அபி ஸுகாய மத்க்ருதம் இதம் ஸர்வம் த்வயா க்ஷம்யதாம்.

காருணிகனான ஸ்ரீரங்கநாதனே! என்னுடையபாவங்களைத் தொலைப்பதற்காகக் கொடிய தண்டனையோடே என்னைச் சேர்ப்பாயாகில் [என்னைக் கொடுமையாக தண்டிக்கு மளவில்] நான் வெறும் பாவங்களையே செய்திருப்பதனால் எனக்கு (அந்த தண்டனையினால்) மஹத்தான துக்கமுண்டாகும். நான் படும் அந்த துக்கத்தைக் காணப்போகிற வுனக்கும் (தயாளுத்வ ப்ரயுக்தமாக) ஒப்பற்ற கொடிய துக்கமுண்டாகும்; ஆகவே நீயும் ஸுகப்படுவதற்காக நான் செய்துள்ள இந்தப்பாவங்களை யெல்லாம் நீ பொறுப்பது நலம்.

ஸ்ரீரங்கநாதா! அநுபவித்தேதீரவேண்டிய அபரிமிதமான பாபங்களை நான் செய்திருக்கிறேனாதலால் அவற்றைத்தீர்க்கக் கொடிய தண்டனைகளோடே என்னைக் கூட்டியேயாக வேண்டும். அப்போது நானபடும் துயரங்களைக்கண்டு பரதுக்க துக்கித்வ ரூபமான தயாகுண முடைய நீயும் துக்கப்படவேநேரும். இப்படி ஸ்வதுக்கத்தை ஸ்வயமேவ விளைத்துக்கொள்வது நன்றோ? என் குற்றங்களை க்ஷமித்து விட்டால் நானும் துக்கப்படவேண்டா, நீயும் துக்கப்படவேண்டா. என்னுடைய துக்கம் எப்படியாவது கிடக்கட்டும்; உன்னுடைய ஸுகத்திற்காக க்ஷமிப்பது நலம் என்ருராயிற்று.

மூன்ருவது பாதத்தில் தயாளோ: என்று ஷஷ்டியான பாடமும் காண்கிறது, தயாளோ: பவத:'' என்று அந்வயிக்கும். ஹேதுகர்ப்பவிசேஷணம். .... (9)

தேவ த்வாம் சரணம் ப்ரபந்நமபி மாம் துக்காந்யநந்யாச்ரயம்
பாதந்தே யதி ஸர்வபாபநிவஹாத் த்வாம் மோக்ஷயிஷ்யாம்யஹம்,
இத்யுக்தம் தவ வாக்யமர்த்த விதுரம் ஜாயேத யத்வா பவாந்
தத்ராசக்த இதி ப்ரதேத ஹி ததோ மாம் ரக்ஷது த்வத்க்ஷமா. (10)

தேவ! த்வாம் சரணம் ப்ரபந்நம் மாம் அபி துக்காநி அநந்யாச்ரயம் (யதா ததா) பாதந்தே யதி ,அஹம் த்வாம் ஸர்வ பாபநிவஹாத் மோக்ஷயிஷ்யாமி' இதி உக்தம் தவ வாக்யம் அர்த்த விதுரம் ஜாயேத; யத்வா பவாந் தத்ர அசக்த: இதி ப்ரதேத; தத: த்வத் க்ஷமா மாம் ரக்ஷது.

எம்பெருமானே! உன்னையே தஞ்சமாகப் பற்றியிருக்கின்ற என்னையும் துக்கங்களானவை வேறொரு புகலின்றிக்கே என்னையே பற்றிநின்று நலியுமாகில் ''அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' என்று சொன்ன உனதுவார்த்தை பொருளற்றதாக ஆய்விடும்; அல்லது நீ அந்த விஷயத்தில் [ஸர்வபாப மோக்ஷணத்தில்] அசக்த னென்ருவது விளங்கி விடும்; ஆதலால் உனது பொறுமைக்குணம் என்னைக் காத்திடுக.

திருத்தேர்த்தட்டில் அர்ஜுநனை வியாஜமாகக்கொண்டு அஸ்மதாதிகளுக்கும் அந்வயிக்கும்படியாக அருளிச்செய்த சரமச்லோகார்த்தம் பழுதுபடாதபடிக்கு அடியேனை க்ஷமைக்கு இலக்காக்கியேயாகவேணுமென்கிறார். பிரானே! * மாமேகம் சரணம் வ்ரஜ* என்று கட்டளையிட்டபடியே உன்னையே சரணமாகப்பற்றி நின்றேன டியேன்! இவ்வளவிலும் பாபபலன்கள் என்னைவந்து நலியா நின்றனவே; ''அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி'' என்றது பலிக்கப் பெறவில்லையே; இதனால் அந்த சரமச்லோகம் அர்த்தமில்லாத வார்த்தை யென்றோ, ஒரு அசக்தன் சொன்னவார்த்தை யென்றோ உலகில் பரவிவிடுமே; இப்படிப்பட்ட அவத்யத்தை ஸம்பாதித்துக் கொள்வதிற்காட்டிலும் ''என்னுடம்பிலழுக்கை நானே போக்கிக் கொள்ளேனோ?'' என்றும், ''உன்னுடைய பாபங்களை நான் க்ஷமித்தருள நீ சோகிக் கக்கடவையோ?'' என்றுமருளிச் செய்தபடியே எனது பாபங்களை க்ஷமித்து என்னைக் காத்தருள்வது நன்று—என்றாராயிற்று. ''அநந்யாச்ரயம்'' என்பதை மாம் என்பதற்கு விசேஷணமாகக் கொள்வதும்ஏற்கும். பாதந்தே என்ற க்ரியையிலே விசேஷணமாகக் கொள்வதே ஸ்வரஸம். ப்ரதேத என்கிற க்ரியைக்கு பவாந் என்பது கர்த்தாவாகவுமாம்; இதி (அயம்விஷயஃ) என்று அத்யாஹரித்துக் கொள்ளக்கூடிய தானது கர்த்தாவாக வுமாம். .... .... .... .... .... .... (10)

**ந த்வம் க்ஷாம்யஸி சேதிதம் மம க்ருதம் நாஸ்த்யத்ர காசித் க்ஷதி:**
**பூர்வம் யத் ஸமபூத் ததேவ ஹி புநர் ஜாயேத தஜ்ஜாயதாம்;**
**யத்வா ஸ்யாததிகஞ் ச ஸோபி ஸுமஹாந் லாபோஸ்து மே தாத்ருச:**
**ஸ்வாமிந் தாஸஜநஸ் தவாயமதிகம் ஸ்வைரேண தூரீபவேத். 11**

ஸ்வாமிந் மம க்ருதம் இதம் த்வம் ந க்ஷாம்யஸி சேத் அத்ர காசித் க்ஷதிஃ நாஸ்தி; பூர்வம் யத் ஸமபூத் தத் ஏவ ஹி புநஃ ஜாயேத தத் ஜாய தாம்; யத் வா அதிகம் ச ஸ்யாத்; ஸஃ அபி மே ஸுமஹாந் லாபஃ அஸ்து; தாத்ருசஃ அயம் தவ தாஸ ஜநஃ அதிகம் ஸ்வைரேண தூரீபவேத்.

எம்பெருமானே! என்னுடைய செய்கையான இந்த பாபத்தை நீ க்ஷமியாதொழியில் இதில் யாதொரு ஹாநியுமில்லை. இதுவரையில் பாப பலனாக என்ன நேர்ந்ததோ அதுவே யன்றோ மீண்டும் மீண்டும் நேரப்போகிறது; அது தாராளமாக நேரட்டும்; அல் லது முன்னிலும் அதிகமாகவே நேர்ந்தாலும் நேரட் டும்; அதுவும் எனக்குப்பெரிய லாபமாகவே ஆயிடுக; அப்படிப்பட்ட இந்த உனது தாஸஜனமானது மிக வும் யதேஷ்டமாக விலகி அகன்றொழியும்.

எம்பெருமானே! நான் செய்த குற்றங்களை சரமச்லோகத்தின்படியே க்ஷமித் தருளாமல் *கல்பகோடி சதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே! * என்றபடி நிக்ரஹத்திற்கே இலக்காக்குமளவில் அடியேனுக்கு ஹாநியொன்றுமில்லை; தேவரீருக்கே மிகுந்த (ஹாநியாகுமென்பது பரமதாற்பரியம். அதுவே மேல்மூன்று பாதங்களினால் மூதலிக் கப்படுகிறது. *அபூதபூர்வம் மம பாவி கிம்வா* என்றபடி இதுவரையில் நேராத பாபபலன் எனக்கினி அபூர்வமாக என்ன நேரிடப்போகிறது? நேர்ந்த துக்கங்களே மாறிமாறி நேரப்போகின்றன; அபூர்வமாக அளவுகடந்த துக்கங்கள் நேர்ந்தாலும் நேரட்டுமே, நமக்குக்கிடைக்கிற பொருள் அதிகமாகவே கிடைத்தால் அதனைப்பெருத்த லாப மாகவே கொள்ளுங்கணக்கிலே நானும் கொள்ளக்கடவேன். எனக்கு லாபமென்பது மாத்திரமேயன்றி உனக்குப்பெருத்த நஷ்டமென்பதும் குறிக்கொள்ளத்தக்கது. நான் உனது திருவடிகளைச் சார்ந்தவனாகாமே அகன்றொழியவன்றோ நேரும்! அது உனக்கு நஷ்டமன்றோ! ஆகவே உன்சரக்கு தப்பிப்போகாமே நோக்கிக்கொள்ளப் பாராய் என்றதாயிற்று. .... .... .... .... (11)

**ஸோஹம் க்ஷுத்ரதயா ஜுகுப்ஸிததமம் துஷ்கர்ம நித்யம் ஸ்மரந்**
**குர்வந் காமமசுத்தரீதிரபவம் ஸ்ரீரங்கப்ருத்விபதே,**
**ஏதத் தே மஹதோ விசுத்தமநஸா ஸ்மர்த்தும் ந யுக்தம் கலு**
**க்ஷாந்த்யா விஸ்மர தத் ததோஹமஸுகாந் முக்தோ பவேயம் ஸுகீ. 12**

ஸ்ரீரங்கப்ருத்விபதே ஸோஹம் க்ஷுத்ரதயா ஜுகுப்ஸிததமம் துஷ்கர்ம நித்யம் ஸ்மரந் காமம் குர்வந் அசுத்தரீதி: அபவம்; ஏதத் மஹத: தே விசுத்த மநஸா ஸ்மர்த்தும் நயுக்தம் கலு; தத் க்ஷாந்த்ய விஸ்மர ; தத: அஹம் அஸுகாத்முக்த: ஸுகீ பவேயம்.

ஸ்ரீரங்கராஜனே! பழைய நான் நீசனுகையாலே மிகவும் வெறுக்கத்தக்க துஷ்கர்மத்தை இடைவிடாது சிந்தித்துக்கொண்டு (அதை) மனம்போனபடிசெய்து கொண்டு அசுத்தமான தன்மையை யுடையவனுக ஆயினேன் ; இந்நிலைமையானது மஹானுனவுனக்கு பரிசுத்தமான திருவுள்ளத்தினுல் ஸ்மரிக்கத்தகாத தன்றோ; அதனை க்ஷமாகுணத்தினுல் மறந்து விடுக. அப்படி மறக்குமளவில் அடியேன் துக்கத்தினின்றும் விடுபட்டு ஆனந்தசாலியாக ஆவேன்.

தம்முடைய பாபங்களை க்ஷமிக்கவேண்டுமென்பதற்கு ரஸோக்தியாக ஒரு ஹேதுவை விண்ணபப்ஞ்செய்கிருரிதில். ஸ்ரீரங்கநாதனே! பாபங்களைச் செய்த நான் அவற்றைச் செய்யும்போதும் அதற்குப் பூர்வாங்கமாக அதைப்பற்றி ஸங்கல்பிக்கும் போதும் அவற்றை நெஞ்சால் நினைக்கவேண்டுகையாலே நினைத்து மிகவும் அசுத்தி பெற்றவனுயினேன். *நீசனேன்நிறையொன்று மிலேனென்றிருக்குமடியேனுக்கு இது தகும். என்னை நீ தண்டிக்க வேண்டும். அப்படியெண்ணுவதுதானும் உனக்கு அவத்யாவஹமன்ருே? க்ஷுத்ரனுன வெனக்கு இது தகுமாயினும் மஹானுனவுனக்கு இது தகாதன்ருே. ஆகவே தண்டனைக்காக வாகிலும் என்குற்றங்களை ஸ்மரித்து அவத்யம் பெறுவதிற்காட்டிலும் க்ஷாந்தியினுல் அவற்றை அறவே மறந்துவிடுவது நலம். இது நம்மிருவர்க்கும் க்ஷேமாயவாகிறது என்ருராயிற்று. .... .... (12)

**தத்தத்கர்மபலாநுரூபமகிலோ லோகஸ் த்வயா ஸ்ருஜ்யதே**
**தஸ்மாத் கர்மவசம்வதத்வமதிகம் வக்தும் தவாபி க்ஷமம்,**
**ஸ்ரீரங்கேச்வர தத்ப்ரசாந்திவிதயே க்ஷாந்த்யா நிராக்ருத்ய மே**
**ஸர்வம் பாதகமாசு தர்சய பவந்ஸ்வாதந்த்ர்யமத்யுஜ்ஜ்வலம். 13**

ஸ்ரீரங்கேச்வர அகில லோக தத் தத் கர்ம பல அநுரூபம் த்வயா ஸ்ருஜ்யதே; தஸ்மாத் கர்ம வசம் வதத்வம் அதிகம் தவ அபி வக்தும் க்ஷமம்; தத்ப்ரசாந்தி விதயேமே ஸர்வம் பாதகம் க்ஷாந்த்யா நிராக்ருத்ய பவத் ஸ்வாதிந்த்ர்யம் அத்யுஜ்ஜ்வலம் ஆசு தர்சய.

ஸ்ரீரங்கநாதனே! எல்லாவுலகமும் அந்தந்த கரும பலன்களுக்குத் தகுதியாக உன்னுல் படைக்கப்படுகிறது; ஆதலால் கர்மபாரவந்த்ரியமானது அதிகமாக உனக்கும் சொல்ல ப்ராப்தமாகும். அந்த கர்மபாரதந்த்ரியம் குலைவதற்காக எனது ஸகலபாபங்களையும் பொறுமையினுல்தள்ளி உனது ஸ்வாதந்திரியத்தை மிக்கபுகர்பெற்றதாக சீக்கிரம் காட்டியருளவேணும்.

ஸ்ரீரங்கநாதனே! ஸம்ஸாரிகளான நாங்களே கருமங்களுக்கு வசப்பட்டவர்களென்றும் நீ அப்படிப்பட்டவனல்லாத ஸ்வதந்த்ர னென்றும் ப்ரஸித்தியிருந்தும் நீயும் கர்ம பரதந்த்ரனுகக் காணுநின்ருய்; எங்ஙனேயென்னில்; *வைஷம்யநைர்க்ருண்யே ஸாபேக்ஷத்வாத்* என்ற ஸுத்ரத்தின்படி அவரவர்கள் செய்த கருமங்களுக்கு வசப்பட்டே ஸ்ருஷ்டிகளைச் செய்துபோராநின்றபடியினுலே கர்மபாரதந்திரியம். உனக்குத் தவிர்க்க வொண்ணுதாயிற்று. இது ஸ்ருஷ்டிவிஷயத்தில் மாத்திரமன்றே. ஸ்ருஷ்ட்யுபலக்ஷிதமான லோகநிர்வாஹம் முழுவதிலும் இங்ஙனேயன்ருே. இப்படி இந்த கர்ம பாரதந்த்ரியமே ஓங்குமளவில் உன்னுடைய ஸ்வாதந்திரியம் புகரழிந்துபோமே; இது தகுதியன்றே. ஆதலால் அடியேனுடைய கருமங்களுக்குத் தகுந்த பலனைக்

கொடுப்பதென்கிற வழியிலேநின்று ஸ்வாதந்திரியத்தையிழந்து கர்மபாரதந்திரியமாகிற அபக்யாதியை ஸம்பாதிக்கத் திருவுள்ளம் பற்றுமல் அடியேனுடைய பாபங்களையெல்லாம் க்ஷமித்தருள்வது நன்று என்றுராயிற்று. .... .... (13)

**ஸ்ரீரங்கேச வசோ மதீயமதுநா வ்யக்தம் த்வயா ச்ரூயதாம்**
**புண்யம் தத்பலஸங்கமாத்ரவிரஹாத் பூயோ ந மாம் ப்ராப்நுயாத்,**
**பாபம் நைவ ததா, பலம் விதநுதே, சக்யம் ந தத்வாரணம்**
**தத் க்ஷாந்த்யா தவ சக்யமேவ ததியம் ஸத்யஸ் த்வயா கல்ப்யதாம்.(14)**

ஸ்ரீங்கேச! அதுநா மதீயம் வசஃ த்வயா வ்யக்தம் ச்ரூயதாம்; புண்யம் தத் பல ஸங்க மாத்ர விரஹாத் பூயஃ மாம் ந ப்ராப்நுயாத் பாபம் (து) ததா நைவ; பலம் விதநுதே; தத் வாரணம் ந சயக்ம்; தத் தவ க்ஷாந்த்யா சக்யம் ஏவ; தத் இயம் ஸத்யாஃ த்வயா கல்ப்யதாம்.

ஸ்ரீரங்கநாதனே! இப்போது அடியேனுடையதான வார்த்தையொன்று உன்னுல் நன்றுகக் கேட்கப்படவேண்டும்; (அது யாதெனில்) புண்யமானது அதனுடைய பலனை விரும்பாதவளவில் பெரும்பாலும் அது என்னை வந்துசேராது; பாபமோவென்றுல் அப்படி யன்று; (அதன்பலனை விரும்பாமற்போனுலும்) பாபமானது பலனை விளைத்தேதீரும்; அதனைத்தடுப்பது அஸாத்யம்: அப்படிதடுப்பதானது உன்னுடைய க்ஷமாகுணத்திறுல் ஸாத்யமேயாகும்; ஆகவே இந்த க்ஷாந்தியானது உடனே உன்னுல் செய்யப்படட்டும்.

புண்யத்திற்கும் பாபத்திற்கும் பலனளிக்கும் ஒருவாசியுண்டு; அதாவது, புண்யம் செய்பவர்கள் அதன் பலனை விரும்பினுல்தான் அதுவந்தடையும். விரும்பாதவளவில் அது அணுகாது. பாபமோவென்னில் அப்படிபட்டதல்ல; பாபபலனை விரும்பாமலே நான் பாபத்தைச் செய்கிறேனென்றுலும் அதன் பலன் வந்தே தீரும். அடியேன் செய்த பாவங்களுக்குப்பலனுன துக்காநுபவங்கள் தவிரா; 'பாபங்களை நான் பொறுத்து விட்டேன்' என்று நினைப்பிடுமளவில் பாபங்களானவை பலன்கொடுக்க மாட்டாவாதலால் அந்த க்ஷாந்தியைச் செய்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறேனென்றுராயிற்று.

[“புண்யஸ்ய பலமிச்சந்தி புண்யம் நேச்சந்தி மாநவா:, நபாபபலமிச்சந்தி பாபம் குர்வந்தி ஸந்ததம்”] புண்யத்தின்பயனுன ஸுகாநுபவத்தில்மாத்திரம் உலகர் விருப்பங்கொள்ளுகிறுர்கள்; ஆனுல் ஸாதனமாகிய புண்யத்தைச் செய்வதில்லை, பாபபலனுன துக்காநுபவத்தில் விருப்பமற்றிருக்கச் செய்தேயும் தத்ஸாதனமான பாபத்தை மாத்திரம் இடைவிடாது செய்துபோருகின்றனர்—என்றபடியே அடியேன் செய்த பாவங்களுக்கு தேவரீருடையு க்ஷமையல்லது புகலில்லையென்றுராயிற்று. தத்பலஸங்கமாத்ரவிரஹாத் என்றது—விரஹே ஸதி என்றபடி. .... .... .... (14)

**ஸ்ரீரங்கேச்வர புண்யபாபபலயோஸ் ஸ்வாதீ ந தாம் குர்வதோ:**
**ஸர்வேஷாம் ஸுகது:கயோஸ் ஸ்வயமஹம் மக்நாசயோ மாமபி,**
**ஸ்மர்த்தும் ந ப்ரபவாமி கிம் புநரஹோ த்வாம் அந்தரந்தஸ் ஸ்திதம்**
**தத் தே த்வம் க்ஷமயா நிரஸ்ய குரு மே த்வத்த்யாநயோக்யாம் தசாம்**

ஸ்ரீரங்கேச்வர! ஸர்வேஷாம் ஸ்வாதீந தாம் குர்வதோஃ புண்ய பாப பலயோஃ ஸுக துஃகயேஃ ஸவயம் மக்ந ஆசயஃ அஹம் மாம் அபி ஸ்மர்த்தும் ந ப்ரபவாமி; அந்தஃ அந்த ஸ்திதம் த்வாம் (ஸ்மர்த்தும்) கிம் புநஃ; தத் த்வம் தே க்ஷமயா நிரஸ்ய த்வத் த்யாந யோக்யாம் தசாம் மே குரு.

ஸ்ரீரங்கநாதனே! (உலகில்) எல்லாரையும் தம் வசப்படுத்திக் கொள்ளுகின்ற புண்யபாவங்களின் பலனுன இன்பதுன்பங்களில் ஸ்வயமாகவே யீடுபட்டிருக்கின்ற அடியேன் என்னையே ஸ்மரிக்க சக்தியற்றவனுயிருக்கின்றேன்; உள்ளுக்குள்ளே பதிந்து கிடக்கிற உன்னை ஸ்மரிக்ககில்லேனென்பது பற்றிச் சொல்லவும் வேணுமோ? அந்த அசக்தியை நீ உன்னுடைய பொறுமையினுல் போக்கி உன்னையே சிந்திப்பதற்குரிய நிலைமையை எனக்கு உண்டாக்கி யருளவேணும்.

உலகத்தவர்கள் புண்யமோ பாபமோ இரண்டிலொன்றைச் செய்து தீரவேண்டும். புண்யம்செய்தால் அதன்பலனான ஸுகாநுபவத்திலே யீடுபடநேர்கின்றது பாபம் செய்தால் அதன்பலனான துக்காநுபவத்திலே யீடுபடநேர்கின்றது. அப்போது ஸ்வாத்மாவையே மறந்து கிடக்கவேண்டியதாகின்றது. இப்படி யாவரையும் தன்வசத்திலிழுக்கின்ற புண்யபாப பலன்களான இன்பதுன்பங்களில் ஈடுபட்டு ஸ்வாத்மாவையே மறந்திருக்கின்ற அடியேன் நிலைகாண வொண்ணாதவிடத்திலே பதிந்துகிடக்கின்ற தேவரீரை ஸ்மரிக்க ப்ரஸக்திலேசமுமில்லையே; இங்ஙனே அடியேன் பாழ்பட்டுப் போகலாமா? தேவரீருடைய க்ஷமாகுணத்தினால் — அடியேன் கருமபலன்களுக்கீழ்பட்டு தேவரீரை மறந்திருக்குமிருப்பைத்தவிர்த்து தேவரீரை சிந்திக்கவல்லேனும்படி செய்தருளவேணு மென்றாராயிற்று. .... .... (15)

அல்பஞ்சேதநவேக்ஷணீயஸரணுவாரோப்யதாம் மத்க்ருதம்
கிஞ்சித் பூரி பவேதிதம் யதி குரூந் ஸம்ப்ரேக்ஷ்ய மே த்யஜ்யதாம்,
யத்வாநந்தமநந் தவைபவஜுஷோ ரங்கக்ஷமாவல்லப
த்வத்க்ஷாந்த்யா: கலு லக்ஷ்யதாமநுகுணமாநீயதாம் தத் த்வயா. (16)

ரங்கக்ஷமாவல்லப ! மத் க்ருதம் அல்பம் சேத் அநவேக்ஷணீய ஸரணௌ ஆரோப்யதாம்; இதம் கிஞ்சித் பூரி பவேத் யதி மே குரூந் ஸம்ப்ரேக்ஷ்ய த்யஜ்யதாம் ; யத்வா அநந்தம் யதி தத் அநந்தவைபவ ஜுஷ: த்வத் க்ஷாந்த்யா: அநுகுணம் லக்ஷ்யதாம் த்வயா ஆநீயதாம்.

ஸ்ரீ ரங்கபூபதியே! நான் செய்த பாவமானது (தேவரீர் திருவுள்ளத்தினால்) சிறிதாகத் தோற்றுமானால் காணக்கண்ணிட்டிருக்கவேணும்; நான் செய்த பாவமானது சிறிது அதிகமாகத் தோற்றுமானால் அடியேனுடைய ஆசிரியர்களைக் கடாக்ஷித்து, விடப்படட்டும் (என்னுடைய பாபம்) அளவுகடந்ததாக இருக்குமாகில் அந்தப்பாபமானது அபரிமிதமான வைபவம் வாய்ந்த தேவரீருடைய க்ஷமாகுணத்திற்குப் பொருத்தமான இலக்காயிருக்குந்தன்மையை தேவரீரால் அடைவிக்கப்படட்டும்.

அடியேன் செய்தபாவங்கள் உண்மையில் அளவுகடந்தவையேயானாலும் தேவரீர் திருவுள்ளத்தால் ஒரு கால் அவை அற்பமாகத் தோன்றினால் இதுவொரு பொருளோ வென்று இகழ்ந்து காணக்கண்ணிட்டிருக்கவமையும்; அங்ஙனன்றிக்கே அடியேன் செய்த பாவங்கள் சிறிது பெரியனவாகத் தோன்றினால் * பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா* என்கிறபடியே ஆசிரியர்களைக் கடாக்ஷித்து அவர்களுடைய குடல்துடக்குடையனன்றோவிவன்! என்று கொண்டு அவர்களுக்காக விட்டுத் தொலைக்க வமையும். அங்ஙனுமன்றிக்கே அடியேன் செய்த பாவங்கள் அபரிமிதங்களாகவே திருவுள்ளத்தில் தோன்றுமாகில், எப்படிப்பட்ட குற்றங்களையும் பொறுக்கவல்ல பெருமை வாய்ந்த தேவரீருடைய க்ஷமாகுணத்திற்கு தகுந்த இலக்காக்கியருளவமையும். ஆகவே, எந்த விதத்திலும் அடியேனுடைய பாபங்கள் அடியேனை தேவரீர் நிக்ரஹிக்கைக்கு உறுப்பாக வொண்ணாதென்று விஜ்ஞாபித்தாராயிற்று. .... .... .... .... (16)

ஸந்த்யக்தஸர்வவிஹிதக்ரியம் அர்த்தகாம
ச்ரத்தாளும் அந்வஹமநுஷ்டிதநிந்த்யக்ருத்யம்,
அத்யந்தநாஸ்திகமநாத்மகுணோப பந்நம்
மாம் ரங்கராஜ பரயா க்ருபயா க்ஷமஸ்வ. (17)

ரங்கராஜ! ஸந்த்யக்த ஸர்வ விஹித க்ரியம் அர்த்த காம ச்ரத்தாளும் அந்வஹம் அநுஷ்டித நிந்த்ய க்ருத்யம் அத்யந்த நாஸ்திகம் அநாத்ம குண உபபந்நம் மாம் பரயா க்ருபயா க்ஷமஸ்வ

ஸ்ரீரங்கநாதனே! சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக் காரியங்களையும் அறவே விட்டவனுயும் அர்த்த காமங்களிலேயே ஊற்றமுள்ளவனுயும் சாஸ்த்ரங்களில் கர்ஹிக்கப்பட்ட தீவினைகளையே நிச்சலும் செய்து போருமவனுயும் மிகவும் நாஸ்திகனுயுமிருக்கிற அடியேனைப் பரம க்ருபையினுலே க்ஷமித்தருள வேணும்.

ஸ்ரீமாந் கூராந்வவாயே கலசஜலநிதௌ கௌஸ்துபாபோவதீர்ண:
ஸ்ரீவேதவ்யாஸபட்டாரகதநயவரோ ரங்கராஜஸ்ய ஹ்ருத்ய:,
வேதாசார்யாக்ர்யநாமா விதிதகுணகணோ ரங்கிணஸ் ஸ்தோத்ரமேதத்
சக்ரே நித்யாபிஜப்யம் ஸகலதநுப்ருதாம் ஸர்வபாபாமநுத்த்யை. (18)

கூராந்வவாயே கலச ஜலநிதௌ கௌஸ்துபாப: அவதீர்ண: ஸ்ரீவேதவ்யாஸ பட்டாரக தநயவர: ரங்கராஜஸ்ய ஹ்ருத்ய: விதிதகுண கண: ஸ்ரீமாந் வேதாசார்யாக்ர்ய நாமா ரங்கிண: ஸ்தோத்ரம் ஏதத் ஸகல தநுப்ருதாம் ஸர்வபாப அபநுத்த்யை நித்ய அபிஜப்யம் சக்ரே.

கூரகுலமாகிற பாற்கடலிலே கௌஸ்துபமணிபோல் அவதரித்தவரும் ஸ்ரீவேதவ்யாஸ பட்டருடைய திருக்குமாரரும் ஸ்ரீரங்கநாதனுக்குத் திருவுள்ள முகந்தவரும் ஜகத்ப்ரஸித்தமான திருக்குணத்திரள்களையுடையவருமான ஸ்ரீவேதசார்யபட்டரென்பவர் ஸ்ரீரங்கநாதன் விஷயமான ஸ்தோத்ரமாகிய இந்த க்ஷமாஷோடசியை ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸகல பாபங்களும் தீருகைக்கு நித்யமும் அநுஸந்திக்கத் தக்கதாக அருளிச்செய்கிருர்.

(இது இந்த ஸ்தோத்ரகர்த்தாவின் சிஷ்யர்களிலொருவர் பணித்தது.)

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

க்ஷமாஷோடசியுரை முற்றுப்பெற்றது.

ஸ்ரீரஸ்து

பத்மாவதீஸமேத ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

அலர்மேல்மங்கையுறைமார்பனடியிணை வாழி.

## 2. திருவேங்கடமுடையான் விஷயமான ஸ்தோத்ரம்

மணவாளமாமுனிகள் திவ்ய தேசயாத்திரையாக எழுந்தருளுமளவில் திருமலைக்கெழுந்தருளின காலத்துத் தமது திருவடிகளில் ஸ்ரீவைஷ்ணவதாஸராய்ப் பணிந்திருந்த அண்ணனுக்கு நியமிக்க, அவர் பணித்த ஸ்துதி.

# ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம்

[திருமலையில் அன்றுதொட்டு நாடோறும் ஸுப்ரபாத காலத்தில் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருவது]

கமலாகுசசூசுககுங்குமதோ நியதாருணிதாதுலநீலதநோ!
கமலாயதலோசந லோகபதே விஜயீ பவ வேங்கடசைலபதே! (1)

கமலா குச சூசுக குங்குமதः நியத அருணித அதுல நீல தநோ! கமல ஆயத லோசந! லோகபதே! வேங் கடசைல பதே! விஜயீ பவ.

பெரிய பிராட்டியாருடைய திருமுலைத் தடங்களி லணிந்த குங்குமக்குழம்பினால் எப்போதும் சிவப்புப் பெற்று ஒப்பற்று விளங்காநின்ற நீலமேனியையுடை யாய்! அரவிந்தம்போன்றுநீண்டகண்ணினாய்! உலகங் கட்கெல்லா மிறைவனே! திருவேங்கடமலைக்கிறை வனே! நித்தியஸ்ரீர் நித்யமங்களமாக விளங்குவாயாக

* * * திருவேங்கடமுடையானுக்கு மங்களாசாஸனம் செய்வது இந்த ச்லோகம். இதில்பூர்வார்த்தம் முழுவதும்ஒரு ஸம்போதநம்.*அகலகில்லேனிறையுமென்று. அலர்மேல்மங்கையுறைமார்பா!* என்ற அருளிச்செயலின் பொருளைப் பர்யாயமாக அநுஸந்தித்தபடி. பெரிய பிராட்டியாருடைய திருமுலைத் தடங்களிலே மங்களாலங்காரமாகக் குங்குமச்சாறு அணிந்திருப்பதுண்டே; அது நித்ய ஸம்ச்லேஷத்தினால் உறைந்துறைந்து எம்பெருமானுடைய நீலமேனியானது செந்நிறமாயிற்றென்கிற இந்த அதிசயோக்தியினால் திவ்ய தம்பதிகளின் இணைபிரியாமை தெரிவிக்கப்பட்டதாகும்.''இவளோடே கூடியே வஸ்துவினுடையஉண்மை; ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராதத்தையும் கண்டு அகலமாட்டாள்'' என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம். ஞானம் ஆனந்தம் முதலியவை எப்படி பகவானுக்கு ஸ்வரூபநிரூபகங்களோ அப்படி ஸ்ரீபதித்வமும் நிரூபகமாகையாலே இவளோடே கூடியே ஈச்வர வஸ்துவின் ஸத்தையாம். சேதநர்களின் அபராதங்களைக் கணக்கிட்டு தண்டிக்க வல்லவனான ஈச்வரனுடைய ஸ்வாதந்திரியத்தையும் சேதநர் செய்யும் குற்றங்களின் அளவின்மையையுங் கண்டு 'ஐயோ! என்னாகுமோ!' என்கிற பயத்தினால் ஈச்வரனைவிட்டு ஒரு நொடிப்பொழுதும் அகலமாட்டாளென்க.

சூசுகம்—சூசுகம் து குசாக்ரம் ஸ்யாத்'' என்ற அமரகோசத்தின்படி ஸ்தநத்தின் அக்ரபாகம் சூசுகமெனப்படும். 'கரிகலப' கர்ணவதம்ஸாதி ப்ரயோகம் போலே இங்கு குச சப்தப்ரயோகம் மிகையாகாது. ''கொவ்வைவாய் மகளிர் கொங்கைக் குங்குமங் கழுவிப்போந்த தெய்வநீர் கமழுநாங்கூர்'' என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தினாலும் மாதர்கள் முலைத்தடங்களில் குங்குமச்சேறு அணிதல்தெரியவரும். [கமலாயதலோசந!] கமலம் போன்றவையாயும் ஆயதங்களாயுமிருக்கின்ற திருக்கண்களையுடையாய்! என்கை. கமலம் ஆயதத்வத்திற்கு உவமையன்றென்க. .... (1)

**ஸசதுர்முகஷண்முகபஞ்சமுகப்ரமுகாகிலதைவதமௌலிமணே!**
**சரணாகதவத்ஸல! ஸாரநிதே! பரிபாலய மாம் வ்ருஷசைலபதே!** (2)

ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக ப்ரமுக அகில தைவத மௌலி மணே! சரணாகத வத்ஸல ஸாரநிதே வ்ருஷ சைல பதே! மாம் பரிபாலய.

நான்முகக் கடவுளோடு கூடிய ஸுப்ரம்மண்யன் சிவன் முதலான ஸகல தெய்வங்களுக்கும் சிரோபூஷணமாக விளங்குமவனே! அடிபணிந்தவர்கள் பக்கலிலே வாத்ஸல்யமுடையவனே! சிறந்தநிதி போன்றவனே! வ்ருஷபகிரி யென்னப்படுகிற திருமலைக்கு இறைவனே! அடியேனைக் காத்தருளவேணும்.

* * * ''யாம் கடவுளென்றிருக்குமெவ்வுலகிற் கடவுளர்க்கும் ஆங்கடவுள் நீ'' என்றபடி தெய்வமென்று பேர் சுமக்கின்ற ஸகல தெய்வங்களுக்கும் தலையான தெய்வமே! சரணாகதர் பக்கலில் வாத்ஸல்யமே வடிவெடுத்தவனே! சிறந்த நிதி போன்றவனே! திருமலையப்பனே! அடியேனுக்கு அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான இஷ்டப்ராப்தியைச் செய்தருளவேணுமென்றபடி.

ஷண்முக பஞ்சமுகர்களை சதுர்முகனோடு கூடியிருப்பவர்களாகச் சொன்னது ஸமுச்சயதாத்பர்யகம்; பிரமனும் கந்தனும் சிவனுமாகிய தெய்வங்களுக்குத் தலை

வனே! என்றவாறு. ''நோலாதாற்றேனுனபாதங் காணவென்று நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் சேலேய் கண்ணூர் பலர் சூழவிரும்பும் திருவேங்கடத்தானே!'' என்ற திருவாய்மொழிப் பாசுரம் பூர்வார்த் தத்திற்குச் சேர அநுஸந்தேயம்.

* அகலகில்லேனிறையுமென்கிற பாசுரத்தில் *நிகரில் புகழாய்* என்றவிடத் திற்கு வியாக்கியானஞ்செய்தருளின பூருவாசாரியர்கள் வாத்ஸல்ய குணத்தையே நிகரில் புகழாக நிரூபித்தருளினபடியாலே இங்கு விசேஷித்து *சரணாகதவத்ஸல* என்றது. உடனே ஸாரநிதே! என்றது ஸாரமான குணங்களுக்கெல்லாம் கொள்கலமான வனே! என்றபடி. முந்தின ச்லோகத்தில் புருஷகாரபூதையான பிராட்டியின் ப்ரஸ் தாவமிருக்கையாலே, அந்த புருஷகாரபலத்தாலே எம்பெருமானுடைய ஸ்வாதந்த்ர் யமானது தலைமடிந்து தலையெடுக்குங் குணங்களான வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளைச் சொல்ல வேண்டுவது அவசியம். குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களென் றும் ஆச்ரித கார்யாபாதகங்களென்றும் இரண்டு வகுப்பாயிருக்கும். அஞ்சாமல் கூசா மல் நாம் ஆச்ரயிக்கும்படி அநுகூலப்படுத்துகின்ற குணங்கள் ஆச்ரயண ஸௌகர் யாபாதகங்களெனப்படும். ஆச்ரயித்த பிறகு காரியம் தலைக்கட்டும்படி செய்யுங்குணங் கள் ஆச்ரித கார்யாபாதகங்களெனப்படும். வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம் ஸௌலப்யம் என்கிற குணங்கள் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்களாம். ஜ்ஞாந சக்திகள் ஆச்ரித கார்யாபாதகங்களாம். ஆச்ரயிக்கவொருப்படுகின்ற இச்சேதநன் தன் தோஷங்களைப்பார்த்து அஞ்சும்போது தோஷபோக்கியத்வரூபமான வாத்ஸல் யத்தை நினைத்து அந்த அச்சம் தீரலாம். இந்த வாத்ஸல்யமே தலையான குண மென்பதை ஸ்வாமி யெம்பெருமானாரும் கத்யத்திலே விளங்கக் காட்டியருளினார். எங் ஙனேயென்னில்? * அபார--காருண்ய--ஸௌசீல்ய--வாத்ஸல்ய--ஐச்வர்ய--ஸௌந் தர்ய மஹோததே* என்று வாத்ஸல்யமுமுட்பட எடுத்தேத்தியிருக்கச் செய்தேயும் மீளவும் * ஆச்ரிதவாத்ஸல்யைகஜலதே! * என்று தனிப்படவுமருளிச் செய்தாரிறே.

[ஸாரநிதே] —'ஸாரோ பலே ஸ்திராம்சே ச ந்யாய்யே க்லீபம் வரே த்ரிஷு' என்ற அமரகோசத்தின்படி அங்கு சொன்ன பொருள்களடங்கலும் இங்குக் கொள் ளத்தகும். ஸாரமான குணங்களுக் கெல்லாம் நிதிபோன்றவனே! சிறந்த நிதி போன்றவனே! என்று இரண்டு வகையாகவும் பொருள் கொள்ளலாம். எம்பெரு மானை ஆழ்வார்கள் நிதியாகப்பேசியநுபவித்தார்கள். ''நிதியே திருநீர்மலைநித்திலத் தொத்தே!'' ''நிதியினைப் பவளத்தூணை'' ''வைத்தமாநிதியாம் மதுசூதனன்'' என் றிங்ஙனே பலபாசுரங்கள் காண்க. அந்தர்ஹிதோ நிதிரஸி த்வம் அசேஷபும்ஸாம் லப்யோஸி புண்ய புருஷைரிதரைர் துராப: * என்று ஆழ்வானும் * மாயாநிகூடமநபாயமஹாநிதிம் த்வயம்* என்று தேசிகனும் பணித்தார்கள். நிதியானது ஒருவர் கண்ணுக்கும் புலப்படாதபடி மறைந்து கிடக்கும்; எம்பெருமானும் * இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * *கரந் தெங்கும் பரந்துளன்* என்பவை முதலான பாசுரங்களின் படியும்,* கண்காண நிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்றாதபடி நின்று என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியின் படியும் கட்கிலியாயிருப்பவன். மறைந்து கிடக்கும் நிதியானது சில பாக்யசாலிகளுக்கே புலப்படுமா போலே எம்பெருமானும் *யானே தவஞ்செய்தேன்* *கோர மாதவம் செய்தனன் கொலறியேன்* என்னும்படியான சில பாக்கியசாலிகளுக்கே புலப்பட்டான். ஒருவகையான ஸித்தாஞ்ஜனமணிந்து கொண்டு பார்ப்பவர்களுக்கே நிதி தோன்றுமாபோலே எம்பெருமானும் *மநஸி விலஸதாக்ஷ்ணோ பக்திஸித்தாஞ்ஜநேந* என்று பட்டரும் :*ஸித்தாஞ்ஜநேந பவதைவ விபூஷிதாக்ஷா: * என்று தேசிகனும் பணித்தபடியே பக்தியாகிற ஸித்தாஞ்ஜனமணிந்த திவ்யசக்ஷுஸ் ஸைப் பெற்றவர்களுக்கே தோன்றுவன். நிதியானது எடுத்தெடுத்தெவ்வளவு அனு பவிக்கப் பட்டாலும் கொள்ள மாளாததாய் அக்ஷய்யமாயிருக்குமா போலே எம்

பெருமானும் எனையூழிகாலம் அநுபவிக்கப்பட்டாலும் குறைவுபடாதே மேன்மேலும் பெருகிச் செல்வன். *உத்காட்ய யோககலயா* என்கிற குவலயாநந்த மங்களச்லோகம் இங்கு நினைக்கத்தாகும். (2)

**அதிவேலதயா தவ துர்விஷஹை: அநுவேலக்ருதரைபராதசதை:,**
**பரிதம் த்வரிதம் வ்ருஷசைலபதே! பரயா க்ருபயா பரிபாஹி ஹரே. (3)**

வ்ருஷசைல பதே ஹரே! அதிவேல தயா தவ துர்விஷஹை: அநுவேல க்ருதை: அபராத சதை: பரிதம் (மாம்) பரயா க்ருபயா த்வரிதம் பரிபாஹி.

திருமலையப்பனே! கங்குகரை யில்லாமையினாலே தேவரீருக்கு ஸஹிக்கக் கூடாதவைகளாயும் க்ஷணந்தோறும் செய்யப்பட்டவையாயுமிருக்கின்ற நூற்றுக் கணக்கான குற்றங்களினால் நிறைந்திருக்கின்ற அடியேனைப் பரமக்ருபையாலே விரைந்து காத்தருள வேணும்.

* * * எம்பெருமான் ஸர்வாபராத ஸஹிஷ்ணுவானாலும் அவன்றனக்கும் அஸஹ்யமாம்படி க்ஷணந்தோறும் எண்ணிறந்த பாபங்களைச்செய்துபோராநின்றோமிறே. நோயாளியானவன் மருத்துவன்பக்கலிலே தனது உண்மையான அபத்யங்களைச் சொல்லிக்கொண்டு புகுந்து பரிஹாரம் பெறுமா போலே பாபிகளான நாமும் பகவத்ஸந்நிதியிலே உள்ளவாறு நமது பாபபூயிஷ்டதையைச் சொல்லிக் கொண்டு புகவே பரிஹாரம்பெறலாமிறே. அஸ்மதாதிகளின் அநுஸந்தானத்திற்காகவிறே பூருவர்கள் இங்ஙனே ச்லோகங்களும் பாசுரங்களும் பணித்து வைத்தது.

வேலாம் அதிக்ராந்தம் அதிவேலம்; வேலையாவது கரை; கரை கடந்திருப்பதினாலே யென்றபடி. தவ என்பதனோடே அபிசப்தமும் கூட்டிக்கொள்ளத் தக்கது; ஸர்வஸஹிஷ்ணு வென்று விருதுபடைத்த தேவரீர் தமக்கும் ஸஹிக்கவொண்ணாதபடியன்றோ எம்முடைய பாவங்கள் கூடுபூரித்துக் கிடக்கின்றனவென்கை. அநுவேலமென்றது க்ஷணந்தோறு மென்றபடி, "வேலா காலமர்யாதயோரபி" என்பது அமரகோசம். .... .... .... (3)

**அதிவேங்கடசைல முதாரமதே: ஜநதாபிமதாதிகதாநரதாத்,**
**பரதேவதயா கதிதாந்நிகமை: கமலாதயிதாந்ந பரம் கலயே. (4)**

அதிவேங்கடசைலம் உதாரமதே: ஜநதா அபிமத அதிக தாந ரதாத் நிகமை: பரதேவதயா கதிதாத் கமலா தயிதாத் பரம் ந கலயே.

திருமலையில் (எழுந்தருளியிருக்கிற) ஔதார்யம் மிகுந்த திருவுள்ளமுடையவரும் அவரவர்கள் விரும்புவதிற் காட்டிலும் அதிகமாகவே அளித்தருளவல்லவரும் வேதங்களினால் பரதெய்வமாக ஓதப்பட்டவரும் லக்ஷ்மீபதியான எம்பெருமானிற் காட்டிலும் வேறானதொரு வஸ்துவை எண்ணுகின்றிலேன்.

* * * பரமோதாரனாய் வேதாந்தவேத்ய பரதேவதையான திருமாலே திருமலையில் ஸேவை ஸாதித்தருளாநின்றபடியால் *மற்றோர் தெய்வம் நான் மதிக்கிலேனென்கிறார். அதிவேங்கடசைலம்—அவ்யயீபாவஸமாஸம். *ஹரௌ-அதிஹரி*என்னுமாபோலே. [உதாரமதே:] ஔதார்யத்தை எம்பெருமானிடத்தில் ஸாக்ஷாத்தாகச் சொல்லாமல் மதியிலே யிட்டுச் சொன்னது—அடியார்க்கு எவ்வளவு கொடுத்தாலும் ஒன்றுங்கொடுக்கப் பெற்றிலோ மென்றும் இன்னமுங்கொடுக்கவேணுமென்றுமிருக்கிற ஹ்ருதயவைசால்யத்தைச் சொன்னபடி. *ஒன்றுண்டு செங்கண் மால் யானுரைப்பது,உன்னடியார்க்கு என்செய்வனென்றேயிருத்தி நீ* என்ற பெரிய திருவந்தாதிப்பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தகும். ஜநதாபிமத தாநரதாத் என்னாதே "அதிகதாநரதாத்"என்றது * அர்த்திதார்த்தபரிதாந தீக்ஷிதரான தேவப்பெருமாளிற் காட்டில் வாசி சொன்னபடி. நிகமை: என்றது வேதாந்தங்களென்ற விவக்ஷையாலே. .... .... .... (4)

கலவேணுரவாவசகோபவதூசதகோடிவ்ருதாத் ஸ்மரகோடிஸமாத்;
ப்ரதிவல்லவி சாபிமதாத் ஸுக்ருதாத் வஸுதேவஸுதாந் ந பரம்
[கலயே. (5)

கலவேணுரவ அவச கோபவதூ சத கோடி வ்ருதாத் ஸ்மர கோடி ஸமாத் ப்ரதிவல்லவி ச அபிமதாத் ஸுக்ரு தாத் வஸுதேவ ஸுதாத் பரம் ந கலயே.

அதிமதுரமான வேணுநாதத்திற்குப் பரவசப்பட்ட ஆய்ச்சிகளின் திரளால் சூழப்பட்டவனும் கோடிக் கணக்கான மன்மதர்களையொத்தவனும் ஒவ்வொரு ஆய்ச்சியும் நமக்கே கணவனென்று அபிமானித்திருக் கப்பெற்றவனும் ஸாக்ஷாத் தர்மஸ்வரூபியுமான வாஸுதேவனிற்காட்டிலும் வேறொருவரை எண்ணு கின்றிலேன்.

* * * இந்த ச்லோகம் முதலாக நான்கு ச்லோகங்களினால் திருவேங்கடமுடையானைக்கண்ணபிரானாகவும் இராமபிரானாகவுங் கொண்டு ஏத்துகிறார். இந்த ச்லோகம் கண்ணபிரானாக வைத்துத் துதிக்கிறது. *பொங்கு புள்ளினைவாய் பிளந்த புராணர்தம்மிடம்-திருவேங்கடம்* என்றும், *கன்றிமாரிபொழிந்திடக் கடிதா நிரைக்கு இடர் நீக்குவான் சென்று குன்ற மெடுத்தவன் திருவேங்கடம்* என்றும் ஆழ்வார்கள் காட்டின வழியே யிது.

* தூவலம் புரியுடைய திருமால் தூயவாயிற்குழலோசை வழியே கோவலர் சிறுமியரிளங்கொங்கைகுதுகலிப்ப உடலுளவிழ்ந்து எங்குங் காவலுங் கடந்து கயிறு மாலையாகிவந்து கவிழ்ந்து நின்றனரே*என்னும்படியே திருக்குழலோசையில் பரவசப் பட்ட கோபிகளோடு குரவைகோத்த குழகன் என்கிறது முதல் விசேஷணம். ஸாக்ஷாந் மந்மதமந்மதः* என்னும் படியான வடிவழகை அவர்களுக்கு முற்றூட்டாகக் கொடுத்த படி சொல்லுகிறது—ஸ்மரகோடி ஸமாத் என்று. தீரஸமீரே யமுநாதீரே வஸதி வநே வநமாலீ கோபீ பீநபயோதரமர்தநநிர்தய கரயுகசாலீ, ச்லிஷ்யதி காமபி சும்பதி காமபி ரமயதி காமபி ராமாம் என்று கீதகோவிந்தத்தில் என்று ஜயதேவர் பணித்தபடியும்*கருமலர்க்கூந்தலொருத்தி தன் னைக்கடைக்கணித்தாங்கே யொருத்தி தன்பால்மருவி மனம் வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல்மங்கையொருத்திதன்னைப் புணர்தி* என்று குலசேகராழ்வா ரருளிச் செய்தபடியும் ஒவ்வொரு ஆய்ச்சியையும் இனிமைப்படுத்துமவனென்கிறது ப்ரதிவல்லவி சாபிமதாத் என்று[ஸுக்ருதாத்] *க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்* என்கிறபடியே தர்மமே வடிவெடுத்தவனாக வுள்ளவனென்றபடி. முமுக்ஷுப்படியில் ''தர்மஸம்ஸ் தாபநம் பண்ணப் பிறந்தவன்தானே ஸர்வதர்மங்க ளையும் விட்டு என்னைப்பற்று என்கையாலே ஸாக்ஷாத்தர்மம் தானேயென்கிறது'' என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தி இங்கே அநுஸந்தேயம் இப்படிப்பட்ட கண்ணபிரான் தானே *மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள். சந்தி செய்ய நின்றானாகை யாலே அவனையன்றி வேறொரு தெய்வம் நான் மதிக்ககில்லேனென்றாராயிற்று ... (5)

அபிராமகுணாகர தாசரதே ஜகதேகதநுர்த்தர தீரமதே,
ரகுநாயக ராம ரமேச விபோ வரதோ பவ தேவ தயாஜலதே, (6)

அபிராம குண ஆகர தாசரதே! ஜகத் ஏக தநுர்தர! தீரமதே! ரகுநாயக! ராம! ரமா ஈச! தயாஜலதே! விபோ தேவ! வரதः பவ.

திருக்கல்யாண குணங்களுக்குப் பிறப்பிடமானவனே! தசரதாத்மஜனாகத் தோன்றினவனே! உலகில் அத் விதீயனான வில்லாளியாய் விளங்கினவனே! துணிவி வாய்ந்த திருவுள்ளமுடையவனே! ரகுகுலதிலகனே இராமபிரானே! லக்ஷ்மீபதியே! கருணைக்கடலே! திரு வேங்கடமுடையானே! நீ (அடியேனுடைய) அபேக்ஷி தங்களை யளித்தருள்பவனாக ஆகவேணும்.

* * * இந்த ச்லோகம் முதலாக மூன்று ச்லோகங்களினால் திருவேங்கடமுடையானை சக்ரவர்த்தி திருமகனாகவே ப்ரதிபத்தி பண்ணியேத்துகிறார். அபிராமகுணகர! என்றவிடத்தில் சூர்ப்பணகையும் தாரையும் மந்தோதரியும் எடுத்துரைத்த திருக்குணங்களை நினைப்பது. (தாசரதே) *மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் மகனும்* என்று ஒருவர்க்கும் மகனாகத்தகாத ஸர்வலோகபிதாவானவன் ஆத்மாநம் மாநுஷம் ராமம் தசரதாத்மஜம்* என்னும்படியாகப் பெற்றபடி [ஜகதேகதநுர்தர!] *புணராநின்ற மரமேழன்றெய்தவொரு வில்வலவா ஓ!* என்ற பாசுரத்தை நோக்கி யருளிச்செய்தபடி [தீரமதே] ஒருவராலும் சலிப்பிக்கவொண்ணாதபடி ஆச்ரிதரக்ஷணத்திலே திண்மை வாய்ந்த திருவுள்ளமுடைமை சொன்னபடி.* அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே! ஸலக்ஷ்மணாம், ந ஹி ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:* என்றும்' *மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந* என்றும் காட்டியருளினவுறைப்பை நினைப்பது. .... (6)

**அவநீதநயாகமநீயவரம் ரஜநீகரசாருமுகாம்புருஹம்,**
**ரஜநீசரராஜதமோமிஹிரம் கமநீயமஹம் ரகுராமமயே. (7)**

அவநீதநயா கமநீய வரம் ரஜநீகர சாருமுக அம்புருஹம் ரஜநீசரராஜ தமோ மிஹிரம் கமநீயம் ரகுராமம் அஹம் அயே.

பூமிப்பிராட்டியின் புதல்வியான ஸீதா பிராட்டி விரும்பத்தக்க மணவாளப்பிள்ளையும், சந்திரனிற் காட்டிலும் அழகிய முகாரவிந்தத்தை யுடையவனும், ராக்ஷஸேச்வரனான இராவணனாகிற இருளையகற்றும் ஸூர்யனும், விரும்பத்தக்க வடிவுபடைத்தவனுமான ஸ்ரீராமபிரானை [திருவேங்கடமுடையானை] நான் அடைகின்றேன்.

* * * —இந்த ச்லோகமும் திருவேங்கடமுடையானை சக்ரவர்த்தி திருமகனாகவே ப்ரதிபத்திபண்ணி ஏத்துகிறது. *அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பனாகையாலே பிராட்டி மேல்விழுந்து விரும்பியநுபவிக்கத்தக்கவனாய் *சுற்றுமொளிவட்டஞ்சூழ்ந்து சோதிபரந்தெங்கும் எத்தனை செய்யிலும் என் மகன் முகம் நேரொவ்வாய்* என்னும்படி சந்திரமண்டலத்தையும் வென்று விளங்காநின்ற திருமுகமண்டலமுடையவனாய் *குன்றாத வலியரக்கர்கோனை மாளக் கொடுஞ்சிலைவாய்ச் சரந்துரந்து குலம் களைந்து வென்றானை* என்கிறபடியே அரக்கர் குலத்தைத் தடிந்தவனான இராமபிரானே திருவேங்கடமுடையானாக ஸேவைதந்தருளாநின்றமையால் இவ்விடத்தே அடைந்துய்ந்தேன் என்றாராயிற்று. அயே—"அய பய-கதௌ" என்ற தாதுவில் தேறின ரூபமிது. .... .... (7)

**ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம் ஸுகுணஞ் ச ஸுஜாய மமோகசரம்,**
**அபஹாய ரகூத்வஹமந்யமஹம் ந கதஞ்சந கஞ்சந ஜாது பஜே. (8)**

ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம் ஸுகுணம் ஸுஜாயம் அமோகசரம் ச ரகூத்வஹம் அபஹாய அந்யம் கதஞ்சந கஞ்சந ஜாது ந பஜே.

தண்ணளியே வடிவெடுத்தவனும், ஸர்வபூதஸுஹ்ருத்தானவனும், நீசர்க்கும் எளியனானவனும், இன்பமளிப்பவனும், நற்குணங்களமைந்தவனும், நல்ல தேவியையுடையவனும் பழுதுபடாத அம்புகளை உடையவனுமான இராமபிரானைத் தவிர்த்து வேறு எந்த தேவனையும் ஒருவிதமாகவும் ஒருகாலும் ஸேவிக்ககில்லேன்.

* * * —* தயரதற்கு மகன் தன்னையன்றிமற்றிலேன் தஞ்சமாகவே* என்றும் *கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ* என்றும் *சிலையினாலிலங்கை செற்ற தேவனே தேவனாவான்* என்றுமுள்ள பாசுரங்களையடியொற்றி அருளிச்செய்ததாமிது. .... .... .... .... .... (8)

**விநா வேங்கடேசம் ந நாதோ ந நாதः ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி**
**ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச. (9)**

வேங்கடேசம் விநா நாதः ந, நாதः ந; வேங்கடேசம் ஸதா ஸ்மராமி ஸ்மராமி; ஹரே வேங்கடேச! ப்ரஸீத ப்ரஸீத; வேங்கடேச! ப்ரியம் ப்ரயச்ச ப்ரயச்ச.

திருவேங்கடமுடையானைத் தவிர்த்து வேறொருநாத னில்லையென்பது ஸத்யம்; திருவேங்டமுடையானை அநவரதமும் நினைத்தபடியேயிருக்கின்றேன்; ஸகல தாபங்களையும் ஹரிக்கவல்ல அப்பனே! திருவுள்ளம் மிகவுமுகந்தருளவேணும், திருவேங்கடத்தெம் பெரு மானே! நன்மையைப் பயந்தருளினபடியே யிருக்க வேணும்.

இதில் ஒவ்வொரு பாதத்திலுமுள்ள த்விருக்திகள் ஆதராதிசயத்தாலானவை. 9

**அஹம் தூரதஸ் தே பதாம்போஜயுக்மப்ரணமேச்சயாகத்யஸேவாம் கரோமி,**
**ஸக்ருத் ஸேவயா நித்யஸேவாபலம் த்வம் ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ**
**[வேங்கடேச!. 10**

வேங்கடேச ப்ரபோ! அஹம் தே பதாம்போஜயுக்ம ப்ரணம இச்சயா தூரதः ஆகத்ய ஸேவாம் கரோமி; ஸக்ருத் ஸேவயா நித்ய ஸேவா பலம் த்வம் ப்ரயச்ச ப்ரயச்ச.

திருவேங்கடத்தெம்பெருமானே! அடியேன் உன்னு டைய இணைத் தாமரையடிகளை வணங்கும் விருப்பத் தினால் தூரதேசத்திலிருந்துவந்து [அத்திருவடிகளில்] ஸேவை செய்கின்றேன்; ஏதோவொருகால் செய்யும் ஸேவையினால் நித்யமும் ஸேவிப்பதனாலாகும் பலனை நீ அவசியம் கொடுக்கவேணும்.

***—* தெழிகுரலருவித் திருவேங்கடத்து எழில்கொள் சோதி யெந்தை தந்தை தந்தைக்கு—ஒழிவில் காலமெல்லா முடனு ய்மன்னி வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்* என்கிற பாரிப்பு குறையற்றிருக்கச்செய்தேயும் திருமலையிலே நித்ய வாஸம் பண்ணிக்கொண்டு நித்ய கைங்கரியம் செய்துகொண்டிருக்க இயலாமையி னாலே கதாசித் ஸக்ருத் வந்துஸேவிக்கின்றேன்; ஆனாலும் ஒழிவில் காலமெல்லா முடனுய்மன்னி ஸேவிப்பதாகவே திருவுள்ளம்பற்றி உகந்தருளவேணுமென்கிறார். அநந்யப்ரயோஜநமாக ஸேவிக்குமதிகாரிகள் ''நித்யஸேவாபலம் ப்ரயச்ச'' என்று ஒரு பலனை விரும்பக்கூடுமோவென்னில்; அத்தலையில் திருவுள்ளவுகப்பேயாயிற்று இங்குப் பலனாகக் கருதப்படுவது. *கதாஹமைகாந்திகநித்யகிங்கரः ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவிதः* என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தியிலே * ப்ரஹர்ஷயிஷ்யாமி * என்ற உயிரான வாசகம் நினைக்கத்தக்கது. .... .... .... (10)*

**வ்ருஷசைலாதிப ஏவ தைவதம் நः வ்ருஷபாத்ரீச்வர ஏவ தைவதம் நः**
**பணிசைலாதிப ஏவ தைவதம் நः பகவாந் வேங்கட ஏவ தைவதம் நः 11**

*வ்ருஷசைலமென்பதும் வ்ருஷபாத்ரியென்பதும் பணிசைலமென்பதும் திரு வேங்கடமலைக்கே பர்யாயநாமங்களாதலால் எல்லாவற்றாலும் திருமலையப்பனே அடியேன் தொழும் தெய்வமென்றதாயிற்று. .... .... (11)*

**ஸ்ரீ ஸ்ரீநிவாஸः பரதைவதம் நः ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரமம் தநம் நः,**
**ஸ்ரீ ஸ்ரீநிவாஸः குலதைவதம் நः ஸ்ரீ ஸ்ரீநிவாஸः பரமா கதிர் நः. 12**

*ஸ்ரீ ஸ்ரீநிவாஸனே நமக்குப் பரதேவதையும் பெருஞ்செல்வமும் குலதேவதை யும் பரமகதியுமாவான் என்றதாயிற்று. .... — — (12)*

**அஜ்ஞாநிநா மயா தோஷாந் அசேஷாந் விஹிதாந் ஹரே,**
**க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வ த்வம் சேஷசைலசிகாமணே. 13**

சேஷசைலமாகிற திருவேங்கடமலையுச்சியில் நீலமணிபோல் விளங்குமெம் பெருமானே! அவிவேகியான அடியேன் செய்த குற்றங்களையெல்லாம் நிர்ஹேதுக க்ருபையினாலே க்ஷமித்தருளவேண்டுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று. — : (13)

ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதேர் விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ்ஸ்தல நித்யவாஸரஸிகாம்தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம்,
பத்மாலங்க்ருதபாணிபல்லவயுகாம் பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வபாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம் பகவதீம் வந்தே ஜகந்மாதரம். 14

அஸ்ய ஜகத: ஈசாநாம் வேங்கடபதே: விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம் தத் வக்ஷஸ்ஸ்தல நித்யவாஸ ரஸிகாம் தத் க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் பத்ம அலங்க்ருத பாணி பல்லவ யுகாம் பத்ம ஆஸந ஸ்தாம் வாத்ஸல்ய ஆதி குண உஜ்ஜ்வலாம் பகவதீம் ஜகத் மாதரம் ச்ரியம் வந்தே.

இவ்வுலகுக்கெல்லம்ஈச்வரியாயும், திருமலையப்பனுக்கு ப்ராண வல்லபையாயும், அவனது திருமார்பிலேயே நித்யவாஸஞ் செய்வதில் விருப்பமுடையவளாயும், அப்பெருமானுடைய க்ஷமாகுணத்தை வளரச்செய்பவளாயும், தாமரைமலரினால் அலங்கரிக்கப்பட்டு பல்லவம் போன்ற இரண்டு திருக்கைகளை யுடையவளாயும், தாமரைத் தவிசில் வீற்றிருப்பவளாயும்வாத்ஸல்யம் முதலிய குணங்களால் திகழா நின்றவளாயும் பரம பூஜ்யையாயும், உலகுக் கெல்லாம் தாயாயுமிருக்கின்ற அலர்மேல்மங்கைப் பிராட்டியை அடியேன் வணங்குகின்றேன்.

* * *—*அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ* என்ற ச்ருதிச்சாயையிலே பணித்ததாயிற்று ப்ரதம பாதம். "அவன் மார்பைவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது" என்கிற ஸ்ரீஸூக்திக்குச் சேர *தத்வக்ஷஸ்ஸ்தலநித்யவாஸரஸிகாம்* என்றது. அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யலயம் ச்ரிய:, நிக்ரஹத்வ வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே" என்கிற தேசிக ஸ்ரீஸூக்தியையுட்கொண்டு தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம் என்றது; "புருஷர்காரபலத்தாலே ஸ்வாதந்த்ரியம் தலைசாய்ந்தால் தலையெடுக்கும்குணங்களைச் சொல்லுகிறது நாராயணபதம்" [முமுக்ஷுப்படி] *என் றவிடத்து அர்த்த விசேஷங்கள் இங்கே அநுஸந்தேயம். [பத்மாலங்க்ருதேத்யாதி] *பத்மப்ரியே பத்மிநி பத்மஹஸ்தே* இத்யாதி ஸ்ரீஸூக்தமிங்கே அநுஸந்தேயம். [வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம்] *ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்திதாம், அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாதநிக்ரஹாம்* என்ற தேசிகஸூக்தியை ஸ்மரிப்பது. ஆக இப்படிப்பட்ட பெருமை வாய்ந்த பிராட்டியைத் தொழுகின்றமை கூறி ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டினாராயிற்று. .... .... .... (14)

பிரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிச்செய்த வேங்கடேச ஸ்தோத்ரம் முற்றிற்று.

அலர்மேல்மங்கையுறைமார்பனடியிணை வாழி.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரவுரை முற்றிற்று.

———

ஸ்ரீ:
பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

## 3. தேவப்பெருமாள் விஷயமான ஸ்தோத்ரங்கள்

திருக்கச்சி நம்பிகள் அருளிச்செய்த

# தேவராஜாஷ்டகம்

தனியன்கள்

**ஸ்ரீமத்காஞ்சீமுநிம் வந்தே கமலாபதிநந்தநம்,**
**வரதாங்க்ரிஸதாஸங்க ரஸாயநபராயணம்**

[ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்காசாரியர் இயற்றிய உரை]

**ஸ்ரீகாஞ்சீபூர்ண முநிபி: ப்ரணீதாம் வரத ஸ்துதிம்,**
**அண்ணங்கரார்ய தாஸோயம் விவ்ருணோதி ஸதாம் முதே.**

[ஸ்ரீமத் காஞ்சீமுநி மித்யாதி.] தேவப்பெருமாளுடைய திருவடிகளிலே இடைவிடாது அன்பு பூண்டிருத்தலாகிற ரஸாயந ஸேவையிலே ஊற்றமுடையவரும், கமலாபதியென்பவருடைய திருக்குமாரருமான திருக்கச்சிநம்பிகளைத் தொழுகின்றேனென்கை.

காஞ்சீமுநிம் என்றது காஞ்சீபூர்ண முநிம் என்றபடி. நம்பிகளின் திருத்தகப்பனுருக்குக் கமலாபதி என்று திருநாமம் இருந்திருக்குமென்று இந்த ச்லோகத்தினுல் ஊகிக்கலாகிறது. "கமலாபதிம் நந்தயதீதி கமலாபதி நந்தந." என்று வ்யுத்பத்தி கொண்டு எம்பெருமானை உகப்பிக்குமவர் என்று பொருள் கொள்ளலாமாயினும் இதில் ஔசித்யமிருப்பதாகப் புலப்படவில்லை. பெரியார்வாய்க் கேட்டுணர்க.

நம்பிகள் திருவாலவட்டத் திருப்பணி செய்துகொண்டு தேவப்பெருமாளோடு இடைவிடாது வாழ்ந்தவராதலால் உத்தரார்த்தம் மிகப்பொருந்தும். ஆயுர்வேத ப்ரஸித்தமான ஔஷத விசேஷத்திற்கு ரஸாயநமென்று பெயர். அதனைப் பருகினுர்க்கு அப்ரதிமமான புஷ்டியுண்டாகுமென்பது ப்ரஸித்தம். நம்பிகளுக்குத் தேவப்பெருமாளுடைய ஸேவையே ரஸாயந ஸேவா ஸ்தாநீயமாய் விலக்ஷணமான புஷ்டியைத் தந்ததாயிற்று. .... .... (1)

**தேவராஜதயாபாத்ரம் ஸ்ரீகாஞ்சீபூர்ணமுத்தமம்,**
**ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்.**

தேவப்பெருமாளுடைய திருவருளுக்குக் கொள்கலமானவரும், மிகச்சிறந்தவரும் எம்பெருமானுர்க்குப் பூஜ்யரும், ஸத்துக்களுக்கு ஆச்ரயபூதருமான திருக்கச்சி நம்பிகளைத் தொழுகின்றேனென்கை.

திருக்கச்சி நம்பிகள் எம்பெருமானுருடைய வேண்டுகோளுக்கிணங்கி, தேவப் பெருமாளிடமிருந்து அஹமேவ பரம் தத்வமித்யாதியாக ஆறுவார்த்தைகளைப்பெற்று உபகரித்தருளினது பற்றியும் மற்றும் சில இதிஹாஸங்களையுட்கொண்டும் ராமாநுஜ முநேர்மாந்யம் என்றது.

இவ்விரண்டு சுலோகங்களும் பிள்ளைலோகஞ்சீயருடைய சிஷ்யர்களில் ஒருவரான 'இராமாநுசப்பிள்ளை' என்பவர் பணித்த 'ஸ்ரீ காஞ்சீபூர்ணசதகம்' என்கிற ஸ்துதியிலிருந்து எடுத்து அநுஸந்திக்கப்பட்டு வருவதாக விளங்குகிறது. .... *

தனியன் உரை முற்றிற்று.

**நமஸ்தே ஹஸ்திசைலேச ஸ்ரீமந்! அம்புஜலோசந,**
**சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்தி ஹராச்யுத.**

ஸ்ரீ ஹஸ்திகிரிநாதனே! பெருந்தேவி மணவாளனே! செந்தாமரைக் கண்ணனே! அடியார்களுடைய துயர்களைத் தீர்த்தருள்பவனே! ஆச்ரிதரை ஒருகாலும் நழுவவிடாதவனே! உனக்கு நமஸ்காரம்; உன்னைச் சரணம் புகுந்தவனாகின்றேனென்கை.

எம்பெருமானுக்குப் பர வ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்று ஐந்து நிலைமைகள் உள்ளனவென்பது ப்ரஸித்தம்; அந்த ஐந்து நிலைமைகளையும் இந்த ச்லோகத்தில் அநுபவிக்கிற அழகு அறியத்தக்கது. இதிலுள்ள ஐந்து ஸம்போதனங்களும் அந்த பஞ்ச ப்ரகாரங்களை நோக்கியிருப்பனவாகும். எங்ஙனனேயென்னில்; ஹஸ்திசைலேச! என்றது அர்ச்சாவதாரத்தை நோக்கியதென்பது ஸ்பஷ்டம். ஸ்ரீமந் என்பது "வைகுண்டேது பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே" என்கிற பிரமாணப்ரஸித்தியின்படியே பரவாஸுதேவனை நோக்கியதாகும். அம்புஜலோசந என்பது இந்நிலத்திலே அழகிய வடிவம் பூண்டு அவதரித்த ராமக்ருஷ்ணாதிரூப விபவாவதாரத்தை நோக்கியதாகும். திருக்கண்ணழகைச் சொன்னது ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையும் சொன்னபடி. ப்ரணதார்த்திஹர! என்றது க்ஷீரஸாகரநிலய வ்யூஹ நிலைமையை நோக்கியதாகும். இடர்ப்பட்டாருடைய கூக்குரல் கேட்டு அவர்களுடைய ஆர்த்தியைத் தீர்ப்பதற்காகவேயிறே பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்திருக்கிறபடி. அச்யுத! என்பது அந்தர்யாமித்வத்தை நோக்கியதாகும்; ஓரிடத்தையும் நழுவவிடாமல் எங்கும் பரந்துளன் என்கிறபொருள் இங்கு விவக்ஷிதம்.

இவ்வைந்து விளிகளும் தேவப்பெருமாளையே நோக்கியவை என்கிற நிர்வாஹத்திற்கு இந்த நிர்வாஹம் ப்ரதிகூலமன்று. .... *(1)*

**ஸமஸ்தப்ராணி ஸந்த்ராணப்ரவீண! கருணோல்பண!**
**விலஸந்து கடாக்ஷாஸ் தே மய்யஸ்மிந் ஜகதாம் பதே. 2**

ஸகல சேதநர்களையும் காத்தருளவல்லவனே! அருள்மிகுந்தவனே! உலகங்கட்கெல்லாம் இறைவனே! இந்த அடியேனிடத்தில் உன்னுடைய கடாக்ஷங்கள் ப்ரகாசிக்கவேணும்.

முதல் ச்லோகத்தில் ஸ்ரீமந்! அம்புஜலோசந என்ற இரண்டு விளிகளையும் விவரிப்பது போன்றுளது இந்த ச்லோகம். ஸ்ரீமானாகையாலே ஸமஸ்தப்ராணிகளையும் ரக்ஷித்தருளக் கடமைப்பட்டவன் என்று விவக்ஷித்துப் பூர்வார்த்தம் அருளிச்செய்தார். அம்புஜலோசநனாகையாலே * தாமரைப்பூப்போலே செங்கண் சிறிச்சிறிதே எம்மேல்விழித்தருள வேணுமென்று விவக்ஷித்து உத்தரார்த்தமருளிச்செய்தார். ப்ரவீண! என்று தனிப்பதமாகப் பிரிக்காதே பூர்வார்த்தம் முழுவதையும் ஒரே பதமாக்கி, 'ப்ரவீணமான கருணையால் மிக்கவனே' என்று உரைத்தலுமாம். .... *(2)*

**நிந்திதாசாரகரணம் நிவ்ருத்தம் க்ருத்யகர்மண:,**
**பாபீயாம்ஸம் அமர்யாதம் பாஹி மாம் வரதப்ரபோ! 3**

வரந்தரும் பெருமானே! சாஸ்த்ர நிஷித்தங்களான செயல்களைச் செய்பவனும் சாஸ்த்ர விஹிதங்களான கருமங்களில் விலகியிருப்பவனும் பாபிஷ்டனும் எல்லை கடந்து வர்த்திப்பவனுமான அடியேனைக் காத்தருளவேணும்.

முதல் ச்லோகத்தில் ப்ரணதார்த்திஹர! என்ற விளியை விரிப்பது போன்றுளது இந்தச்லோகம்.

*இதம் குரு இதம் மாகார்ஷீ:* [இதைச்செய்; இதைச்செய்யாதே] என்று சாஸ்த்ரங்கள் விதி நிஷேதரூபங்களாயிறே யிருப்பது. விஹிதங்களைச் செய்தும் நிஷித்தங்களை விலக்கியும் போரவேண்டியிருக்க விபரீதமாக நடந்து பாவங்கள் கூடு பூரித்துக் கிடக்கின்றவடியேனைக் காத்தருளி உன்னுடைய ப்ரணதார்த்தி ஹரத்வத்தை நிலை நிறுத்திக் கொள்ளவேணு மென்றதாயிற்று. .... .... .... (3)

இனி மேல் ச்லோகங்களெல்லாம் அச்யுத! என்னும் விளியை விவரிப்பனவாகும்

**ஸம்ஸாரமருகாந்தாரே துர்வ்யாதிவ்யாக்ரபீஷணே,**
**விஷயக்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதபசாலிநி.** 4

**புத்ரதாரக்ருஹ க்ஷேத்ர ம்ருகத்ருஷ்ணாம்பு புஷ்கலே,**
**க்ருத்யாக்ருத்ய விவேகாந்தம் பரிப்ராந்தமிதஸ்தத:.** 5

**அஜஸ்ரம் ஜாதத்ருஷ்ணார்த்தம் அவஸந்நாங்கமக்ஷமம்,**
**க்ஷீணசக்திபலாரோக்யம் கேவலம் க்லேசஸம்ச்ரயம்.** 6

**ஸம்தப்தம் விவிதைர் து:க்கை: துர்வசைரேவமாதிபி:.**
**தேவராஜ! தாயஸிந்தோ! தேவதேவ! ஜகத்பதே!** 7

**த்வதீக்ஷண ஸுதாஸிந்து வீசிவிக்ஷேபசீகரை:.**
**காருண்யமாருதாநீதை: சீதலைரபிஷிஞ்ச மாம்.** 8

கருணைக்கடலான தேவராஜனே! தேவாதி தேவனே! உலகுக்கோர் முந்தைத் தாய் தந்தையே! கொடிய நோய்களாகிற புலிகளினால் பயங்கரமாயும் சப்தாதி விஷயங்களாகிற சிறு புதர்கள் நிறைந்ததாயும், ஆசையாகிற மரங்கள் அடர்ந்ததாயும், மக்கள் மனைவியர் வீடு நிலம் ஆகிற கானல் நிரம்பினதாயுமிருக்கின்ற ஸம்ஸாரமாகிற கொடிய காட்டில், 'இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத்தகாதது' என்கிற விவேகமின்றிக்கே இங்குமங்கும் சுழன்றுழல்பவனாய், எப்போதும் விடாய்த்தவனாய், உடல் இளைத்தவனாய், அஸமர்த்தனாய், சக்தி பலம் ஆரோக்யம் ஆகிய இவை ஒன்றுமில்லாதவனாய், க்லேசங்களே மிகுந்திருக்கப் பெற்றவனாய், சொல்லமுடியாத இப்படிப்பட்ட பலவகைத் துன்பங்களினால் தாபமுற்றவனாயிருக்கின்ற அடியேனை, காருண்யமாகிற காற்றினால் கொண்டு தள்ளப்பட்டவையும் குளிர்ந்தவையுமான உன்னுடைய கடாக்ஷாம்ருத நதீப்ரவாஹத்திவலைகளினால் நனைத்தருளவேணுமென்கிறார்.

ஐந்து ச்லோகங்களும் சேர்ந்து ஏகாந்வயமாகிறபடியாலே குலகம் எனப்படும். ஸாம்ஸாரிக தாபங்கள் மிகுந்திருக்குமடியேனைக் கடாக்ஷாம்ருத வர்ஷத்தினால் குளிரச்செய்தருளவேணுமென்று பிரார்த்திக்கிறார்.

இவ்விருள் தருமாஞாலமே ஸம்ஸாரமெனப்படுகிறது. இதனை ஒரு கொடிய காடாக ரூபிக்கிறார். காட்டில் புலி முதலிய பயங்கர ஜந்துக்கள் இருக்கும்; ஸம்ஸார நிலத்தில் கொடிய வியாதிகளே அவையாகும். காட்டில், உள்ளேயிழுத்துக்கொள்ளச் சிறு புதர்கள் இருக்கும்; இங்கு சப்தாதி விஷயங்களே அவையாகும். காட்டில் பலவகைப்பட்ட மரங்களிருக்கும்; இங்குப்பலவகைப்பட்ட ஆசைகளே மரங்களாகும். காட்டில் வீணை ப்ரமத்தை யுண்டாக்கவல்ல கானல் மிகுந்திருக்கும்; "தாயே தந்தை யென்றும் தாரமே கிளை மக்களென்றும்" "தந்தை தாய் மக்களே சுற்றமென்றுற்றவர் பற்றிநின்ற பந்தமார் வாழ்க்கை" "கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்" இத்யாதிப்படியேயுள்ள ஆபாஸ பந்துக்களே இங்குக் கானலாகக் கொள்க.

''ஸம்ஸார மருகாந்தாரே'' என்று ஸம்ஸாரத்தை மருகாந்தாரமாகச் சொல்லி யிருக்கும்போது '' த்ருஷாபாதபசாலிநி '' என்னக் கூடுமோ? மரம் செடி கொடி முதலானவை ஒன்று மில்லாத பாலை நிலத்திற்கன்றே மருகாந்தாரமென்று பெயர் —என்று சிலர் சங்கிப்பதுண்டு. இங்குப் பெரியோர் பணிக்கும் ஸமாதானமாவது —பாலை நிலத்தில் நிழல்தரும்படியான மரங்கள் இருக்க ப்ரஸக்தியில்லையாயினும் மொட்டை மரங்கள், மலட்டு மரங்கள் என்று சொல்லக்கூடிய சில வ்ருக்ஷங்கள் விரளமாகவாவது இருக்கக்கூடுமாதலால் அவற்றைத் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்ததாகக் கொள்ளலாமென்று.

தாபாதுரர்களின்மீது ஒரு பாட்டம் மழைபொழிந்தால் ஸகலதாபங்களும் தீர்ந்து குளிர்ச்சி உண்டாகுமாப்போல திருக்கச்சி நம்பிகள் தாமும் ஸாம்ஸாரிக தாபங்களெல்லாம் தணிந்து குளிர்ச்சி உண்டாகுமாறு தேவப்பெருமாளுடைய திருவருள் நோக்க மழை பொழிவை ப்ரார்த்தித்துத் தம்முடைய ஸ்துதியையும் தலைக் கட்டினாராயிற்று. .... .... (4—8)

திருக்கச்சிநம்பிகள் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்

விசதவாக் சிகாமணிகளான

மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# ஸ்ரீ தேவராஜ மங்களம்

[பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய உரையுடன் கூடியது]

தனியன்

**யச் சக்ரே தேவராஜஸ்ய மங்களாசாஸநம் முதா**
**தம் வந்தே ரம்யஜாமாத்ருமுநிம் விசதவாக்வரம்.**

(கருத்து.) ஸ்ரீதேவராஜ மங்களாசாஸந க்ரந்தத்தைத் திருவுள்ள முகந்து அருளிச்செய்தருளின விசவாக் சிகாமணிகளென்று புகழ்பெற்ற மணவாள மாமுனிகளை வணங்குகின்றேனென்கை. .... .... (*)

திவ்யதேச யாத்திரையடைவிலே மாமுனிகள் கச்சிநகர்க்கு எழுந்தருளிச் சில காலம் திருவெஃகாவில் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்யப்ரவசநம் செய்தருளா நிற்கும்போது, சிஷ்யவர்க்கங்களின் ப்ரார்த்தனைக்கிரங்கிப் பேரருளாளப்பெருமாள் விஷயமாக ம்ருதுமதுரமான இந்த ஸ்துதிரத்நத்தை அருளிச் செய்தருளினாரென்று ப்ரஸித்தமாயிருக்கும். இதிற் சில ச்லோகங்கள் யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்திலும் உபாத்தம். இந்தத் தனியன் அப்பிள்ளையருளிச் செய்ததாக ஏடுகளிற் காண்கிறது.

**க்ரந்தாரம்பம்.**

**மங்கலம் வேதஸோ வேதிமேதிநீக்ருஹமேதிநே**
**வரதாய தயாதாம்நே தீரோதாராய மங்களம்.**

* * * தேவப்பெருமான் நான்முகன் செய்த அச்வமேத யாகத்தில் உத்தரவேதியில் திருவவதரித்தருளினு ரென்று புராணங் கூறும். அதற்கிணங்க வேதஸோ வேதீமேதிநீ கிருஹமேதிநே என்கிருர் வேதஸ:—பிரமனுடைய, வேதிமேதிநீ—உத்தர வேதிஸ்தலத்தை, க்ருஹமேதிநே—இருப்பிடமாகக் கொண்டவரான என்றபடி. க்ருஹ மேதிநே என்பது பெருந்தேவி மணவாளன் என்பதையும் தோற்றுவிக்கும். ''கமலாக்ரு ஹமேதிநம்'' என்ருர் தேசிகன். பேரருளாளன் என்கிற திருநாமத்தை தயாதாம்நே என் பதனுல் காட்டியருளினுர் அருளுக்கு இருப்பிடமான என்றபடி. திரோதாராய—தைர் யமும் ஔதார்யமும் உடையவரென்கை. (1)

வாஜிமேதே வபாஹோமே தாதுருத்தரவேதித:,
உதிதாய ஹுதாதக்நேருதாராங்காய மங்களம். 2

பிரமனுடைய அயமேத வேள்வியில் வபையையெடுத்து ஹோமம் பண்ணின வுடனே உத்தரவேதியில் நின்றும் ஹோமகுண்டத்திலிருத்து உதித்தருளினவரும் அழகிய திருமேனியையுடையவருமான பேரருளாளப் பெருமாளுக்குப் பல் லாண்டு. .... .... .... (2)

யஜமாநம் விதிம் வீக்ஷ்ய ஸ்மயமாநமுகச்ரியே,
தயமாநத்ருசே தஸ்மை தேவராஜாய மங்களம். 3

தம்மை ஸாக்ஷாத்கரிக்கும் பொருட்டு வேள்விசெய்த பிரமனை நோக்கிப் புன் முறுவல் செய்துகொண்டு அருள் நோக்கம் தந்தருளின தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. .... .... (3)

வாரிதச்யாமவபுஷே விராஜத்பீதவாஸஸே,
வாரணுசலவாஸாய வாரிஜாக்ஷாய மங்களம். 4

* கருமுகில் போல்வதோர் மேனியையுடையவரும், பீதகவாடை திகழும் திருவரையையுடையவரும், திருவத்திமாமலையைத் தன்னிடமாகக் கொண்டவரும் செந்தாமரைக் கண்ணருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. .... (4)

அத்யாபி ஸர்வபூதாநாம் அபீஷ்டபலதாயிநே
ப்ரணதார்த்திஹராயாஸ்து ப்ரபவே மம மங்களம். 5

நான்முகனுக்கு அபேக்ஷித ஸம்விதாநம் செய்தருளினது போலவே இன்றைக் கும் ஸகலப்ராணிவர்க்கங்களுக்கும் அபேக்ஷிதங்களான பலன்களை அருள்செய்ப வரும், ஆச்ரிதர்களின் அநிஷ்ட நிவ்ருத்திகளையும் செய்தருள்பவரும் எனக்குத் தலை வருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. .... (5)

திவ்யாவயவஸௌந்தர்யதிவ்யாபரணஹேதயே,
தந்தாவளகிரீசாய தேவராஜாய மங்களம். 6

திவ்யமான அவயவ ஸௌந்தர்யத்தை யுடையவரும் திவ்யமான ஆயுத பரணங்களையுடையவரும் ஸ்ரீஹஸ்திகிரி நாதருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு.—தந்தாவள மென்று யானைக்குப்பெயர். பூர்வார்த்தத்தை விசேஷணே பயபதகர்மதாரயமாகக் கொள்க. .... .... .... (6)

புருஷாய புராணுய புண்யகோடி நிவாஸிநே,
புஷ்பிதோதாரகல்பத்ருகமநீயாய மங்களம். 7

அநாதி ஸித்தபுருஷரும், புண்யகோடி விமானத்தில் எழுந்தருளியிருப்பவரும், பூத்து அழகிய் கல்பவ்ருக்ஷம்போல் ஸ்ப்ருஹணீயருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. ஒவ்வொரு திவ்ய தேசத்திலே விமாநத்திற்கு ஒவ்வொரு திருநாமமுண்டு. ஸ்ரீஹஸ்திகிரியிலுள்ளது புண்யகோடி விமாநமென்பதாம், வடமொழியில் த்ரும: என்பது போலவே த்ரு: என்பதும் வ்ருக்ஷவாசகம். கமநீய:—விரும்பத்தக்கவர். (7)

காஞ்சநாசலச்ருங்காக்ர காளமேகாநுஸாரிணே,
ஸுபர்ணம்ஸாவதம்ஸாய ஸுராஜாய மங்களம். 8

* காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போல் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை யுட்கொண்டு அருளிச்செய்தது இந்த ச்லோகம். பொன்மயமானதொரு மலையினுச்சியிலே காளமேகம் திகழ்வதுபோல் பெரிய திருவடியின் திருத்தோளுக்கு அலங்காரமாகின்ற தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. *அத்தியூரான் புள்ளையூர்வான் * என்று பூதத்தாழ்வார் அருளிச்செய்தபடி தேவப்பெருமாளுக்குப்பெரியதிருவடி ஸேவை* வையத்தெவரும் வணங்கவிருப்பதால் மற்ற வாஹநங்களைவிட்டுப் பெரியதிருவடி வாஹநத்தைப்பற்றி இதில் அருளிச்செய்யலாயிற்று. ஸுபர்ண:—கருடன். .... .... (8)

போகாபவர்க்கயோரேகம் வாஞ்சத்ப்யோ தததே த்வயம்,
ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம். 9

* இருள் தருமா ஞாலமாகிய இவ்வுலகத்தில் போகமென்றும் * நலமந்த மில்லதோர் நாடாகிய நித்யவிபூதியில் போகமென்றும் போகம் இருவகைப்படும். ஐஹிகத்தை விரும்புவார் சிலர்; ஆமுஷ்மிகத்தை விரும்புவார் சிலர்; இங்ஙனே ஒரொன்றை விரும்பினாலுங்கூட, தம்முடையஔதார்ய விசேஷத்தாலே * அவன் நாடுநகரமும் நன்குடன் காண நலனிடையூர்திபண்ணி, வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்குந் தருமொரு நாயகமே * என்னும் கணக்கிலே இரண்டையுமளித்தருள்பவர் பேரருளாளப் பெருமாளென்கிறது. .... .... .... (9)

மதங்கஜாத்ரிதுங்காக்ரச்ருங்கச்ருங்காரவர்ஷ்மணே,
மஹாக்ருபாய மத்ரக்ஷாதீக்ஷிதாயாஸ்து மங்களம். 10.

ஸ்ரீஹஸ்திகிரியின் மிகவுயர்ந்த உச்சிக்கு அலங்காரமான திருமேனியையுடையவரும் என்போல்வாரைக் காத்தருள்வதில் தீக்ஷைகொண்டவருமான பேரருளாளப் பெருமாளுக்குப் பல்லாண்டு. *ச்ருங்காரோ கஜபூஷணம்* என்று மேதிநீகோசம் யானையினுடைய பூஷணம்போலவே பூஷண ஸாமாந்யத்தையும் இச்சொல் சொல்லும். ஹஸ்திகிரியாதலால் கஜ பூஷண மென்னும் பொருளையே இங்குக் கொள்ளவுமாம். வர்ஷ்ம—மேனி. .... .... (10

ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே,
அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம். 11

அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து திருக்கச்சிநம்பிகளோடு பரமப்ரீதியுடன் உரர்த்தையாடி யருளின தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. தேவப்பெருமாள் திருக்கச்சி நம்பிகள் மூலமாக உடையவர்க்கு ஆறு வார்த்தை யருளிச் செய்தது ப்ரஸித்தம். அவ்வளவு மாத்திரமேயன்று; நம்பிகளோடு அநவரதமும் வார்த்தையாடினதுண்டு என்கிறது ஸர்வாபிபாஷிணே என்பதனால். அதீத என்பது கர்த்தரிக்தமாகவுள்ளதுபோலவே கர்மணிக்தமாகவு முண்டாதலால் அதிலங்கிதமென்கிற பொருளிலே இங்கு ப்ரயுக்தம். அர்ச்சாவ்யவஸ்தை யாவது—அர்ச்சாவதாரத்தில் யாரோடும் பேசுவதில்லையென்று கொண்ட நியமம். .... (11)

அஸ்து ஶ்ரீஸ்தநகஸ்தூரீ வாஸநாவாஸிதோரஸே,
ஶ்ரீஹஸ்திகிரிநாதாய தேவராஜாய மங்களம். 12

*கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னுவி தங்குமென்றுரையீரே*:என்று ஆண்டாளைப்போலே பாரிக்கவேண்டாமல் பெரிய பிராட்டியார் அநவரதமும் திருமார்போடே அணைந்திருக்கையாலே அவளுடைய திருமுலைத் தடத்தில் சாத்தின கஸ்தூரிக்காப்பின் நறுமணம் கமழாநின்ற திருமார்பையுடையவரான ஸ்ரீஹஸ்திகிரி நாதர்க்குப் பல்லாண்டு. .... (12)

மங்களாசாஸநபரை: மதாசார்யபுரோகமை:,
ஸர்வைச் ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம். 13

பல்லாண்டு பாடுவதையே தொழிலாகக்கொண்ட அஸ்மதாசார்யர் முதலான ஸகல பூர்வாசார்யர்களாலும் போற்றப்பெற்ற பெருமானுக்குப் பல்லாண்டு. முன்னோர்களுடைய முறைமையைப் பின்பற்றியே அடியேனும் இந்தஸ்துதியினால் பல்லாண்டு பாடினேனென்று அருளிச்செய்து தலைக்கட்டினாராயிற்று. .... (13)



மணவாள மாமுனிகளருளிச்செய்த

## ஸ்ரீ தேவராஜமங்களம் முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

தேவப் பெருமாள் விஷயமாக ஆளவந்தாரருளிச் செய்த

# முக்தகம்.

யஸ்ய ப்ரஸாதகலயா பதிர: ச்ருணோதி
பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:,
அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா
தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி!!

(கருத்து) பேரருளாளப் பெருமாளுடைய அநுக்ரஹலேசத்தினால் செவிடனும் செவிபெறுவான்; முடவனும் விரைந்தோடுவான்; ஊமையும் பேசவல்லவனாவான்; குருடனும் காணப்பெறுவான்; மலடியும் மக்கள் பெறுவாள்; இப்படிப்பட்ட அநுக்ரஹம் செய்தருள வல்ல பேரருளாளப் பெருமாளைத் தஞ்சமாகப் பற்றுகின்றேனென்றவாறு.

ஆளவந்தார் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளின காலத்தில் யாதவப்ரகாசர் பக்கலிலே வேதாந்தம் அதிகரித்துக் கொண்டிருந்த உடையவர் விரைவில் ஸித்தாந்த ப்ரவர்த்தகராக ஆகவேணுமென்று தேவப்பெருமாளுடைய திருவடிகளிலே இந்த ச்லோகாநுஸந்தாநபூர்வமாக ப்ரபத்தி பண்ணினாரென்றும், அப்போதாக அவதரித்த ச்லோகம் இது—என்றும் பெரியோர் பணிப்பர்கள். .... *

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்த

# நரஸிம்ஹாஷ்டகம்

(தனியன்)

**ஸுந்தர ஜாமாத்ரு முநே: ப்ரபத்யே சரணம்புஜம்,**
**ஸம்ஸாரார்ணவஸம்மக்ந ஜந்துஸந்தார போதகம்.**

பிறவிக் கடலுள் நின்று துளங்கும் பிராணிகளைக் கரைமரஞ் சேர்ப்பதற்குரிய தோணி போன்றதான அழகிய மணவாளச்சீயருடைய திருவடித்தாமரைகளைத் தஞ்சமாகப் பற்றுகின்றேனென்றவாறு. .... .... *

அவதாரிகை.

திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படியுரை பணித்தவரும் தத்வதீப தீப ப்ரகாசாதி க்ரந்தங்களைத் தந்தருளினவருமான வாதிகேஸரி ஜீயர் திவ்யதேசயாத்திரையடைவிலே பெருமாள் கோயிலுக் கெழுந்தருளியபோது கரிகிரியின் கீழ்க் காட்சி தந்தருளாநின்ற அழகிய சிங்கர் விஷயமாக இந்த அஷ்டகஸ்துதியை யருளிச் செய்தா ரென்பர்.

திருவல்லிக்கேணிக் கெழுந்தருளினபோது அங்கெழுந்தருளியுள்ள தெள்ளிய சிங்கப் பெருமாள் விஷயமாகப் பணித்தது இது, என்பாருமுளர். செவிக்கினிய சந்தத்தில் அமைந்த இந்த ஸ்தோத்ரம் பக்தர்களுக்கு நித்யாநுஸந்தேயமாகக் கடவது. .... .... .... .... .... *

---

ஸ்தோத்ராரம்பம்.

**ஸ்ரீமதகலங்க பரிபூர்ண சசி கோடி ஸ்ரீதர மநோஹர ஸடாபடல காந்த,**
**பாலய க்ருபாலய பவாம்புதிநிமக்நம் தைத்யவரகால நரஸிம்ஹ**
**[நரஸிம்ஹ. (1)**

ஸ்ரீமத் அகலங்க பரிபூர்ண சசி கோடி ஸ்ரீதர மநோஹர ஸடா படல காந்த! க்ருபா ஆலய ! தைத்ய வர கால நர ஸிம்ஹநரஸிம்ஹ! பவஅம்புதிநிமக்நம் (மாம்) பாலய.

அழகியவாயும் களங்க மற்றவையாயுமுள்ள பலவாயிரம் பௌர்ணமீ சந்திரர்களின் சோபையைத் தாங்குகின்ற மநோஹரமானஉளைமயிர்த் திரள்களினுலழகியவரே!, கருணைக்கு இருப்பிடமானவரே!, ஆஸுரவர்க்கங்களுக்கு யமன்போன்ற அழகிய சிங்கப் பெருமாளே! ஸம்ஸாரக் கடலில் வீழ்ந்த அடியேனை ரக்ஷித்தருளவேணும்.

சிங்கத்தின் உளைமயிர்க் கற்றைக்கு ஸடாபடல மென்று பெயர். *அழகியான் தானே அரியுருவன்தானே* என்னும்படி யவதரித்த நரஸிம்ஹ மூர்த்திக்கு அது பரம விலக்ஷணமாயிருக்குமே. களங்கமற்ற பரிபூர்ண சந்திரர்கள் கோடிக்கணக்காக ஏககாலத்திலே தோன்றினுல் எவ்வளவு அழகாயிருக்குமோ அவ்வளவு அழகாய் இருக்கின்றதாம் அந்த ஸடாபடலம். "அகளங்க பரிபூர்ண...." என்றது "அபூதோபமை. சந்த்ரமண்டலம் அகளங்கமாயிருந்தால் பரிபூர்ணமாயிராது; பரிபூர்ணமாயிருந்தால் அகளங்கமாயிராது, *யத் தாதுஸ் ஸௌம்யதா ஸேயம் பூர்ணேந்தோரகளங்கதா* என்ற

கவிவசனத்திலுைம் இது உணரத்தக்கது. [க்ருபாலய] *சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ்ப் புக நின்ற செங்கண்மால்* (திருவாய்மொழி 3—6—6) என்கிறபடியே இரணியன் திறத்திலே சீற்றம் அளவு கடந்து செல்லா நிற்கச் செய்தேயும் ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலே அருளே வடிவெடுத்திருந்த படியைச் சொல்லுகிறது. [தைத்யவரகால!] தைத்யவரனென்று இரணியனை மாத்திரம் விவக்ஷிக்கவுமாம், தைத்யவரர்களென்று ஆஸுரப்ரக்ருதிகளனைவரையும் விவக்ஷிக்கவுமாம். காலன்—ம்ருத்யு. நரஸிம்ஹ நரஸிம்ஹ என்று இரட்டித்துச் சொல்லுகிறது ஆதராதிசயத்தினுல். பிறவிக்கடலுள் நின்று துளங்குமடியேனுக்கு தேவரீருடைய திருவருளல்லது வேறு புகலில்லை யென்றுராயிற்று. .... .... .... .... .... .... (1)

**பாதகமலாவநத பாதகி ஜநாநாம்**
**பாதக தவாநல பதத்ரிவரகேதோ,**
**பாவந பராயண! பவார்த்திஹரயா மாம்**
**பாஹி க்ருபயைவ நரஸிம்ஹ நரஸிம்ஹ.** (2)

பாதகமல அவநத பாதகி ஜநாநாம்
பாதகதவாநல! பதத்ரி வர கேதோ!
பாவந பராயண! நரஸிம்ஹ நரஸிம்ஹ!
பவ ஆர்த்தி ஹரயா க்ருபயா ஏவ மாம்
பாஹி.

(தனது) திருவடித் தாமரைகளில் வணங்கின பாபிஷ்டஜனங்களினுடைய பாபங்களுக்குக் காட்டுத் தீ போன்றவனே!, பக்ஷிராஜனை பெரிய திருவடியைக் கொடியாக வுடையவனே! தன்னைச் சிந்திப்பவர்களுக்குப் பரகதியாயுள்ளவனே! அழகிய சிங்கப் பிரானே! ஸம்ஸாரத் துன்பங்களைப் போக்கவல்ல (உனது) கருணையினுலேயே அடியேனைக் காத்தருள வேணும்.

தன்னடிபணிந்தவர்கள் எத்தனை பாவங்கள் செய்திருந்தாலும் ''போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' என்கிறபடியே அவற்றை உருவழிக்க வல்ல பெருமானே! கருளக் கொடியொன்றுடைய கோவே! தன்னைச்சிந்தனை செய்ய வல்லார்க்கு உபாயமும் உபேயமுமாக இருப்பவனே! ஸாம்ஸாரிக க்லேசங்களையெல்லாம் போக்குமியல்வுடைய திருவருளாலே நித்ய ஸம்ஸாரியான வென்னைக் காத்தருளவேணுமென்றுராயிற்று. க்ருபயைவ* என்கிற ஏவகாரத்தாலே என்பக்கலில் ஒரு கைம்முதல் எதிர் பார்க்கலாகாதென்கிறது. .... .... .... (2)

**துங்கநக பங்க்திதளிதாஸுரவராஸ்ருக்**
**பங்க நவகுங்கும விபங்கிலமஹோர:,**
**பண்டிதநிதாந கமலாலய நமஸ் தே**
**பங்கஜநிஷண்ண நரஸிம்ஹ நரஸிம்ஹ.** (3)

துங்க நக பங்க்தி தளித அஸுரவர
அஸ்ருக் பங்க நவ குங்கும விபங்
கில மஹா உர:! பண்டித நிதாந!
கமலா ஆலய! பங்கஜ நிஷண்ண!
நரஸிம்ஹ நரஸிம்ஹ! தே நம:

நீண்ட திருவுகிர்வரிசைகளினுல் பிளக்கப்பட்டவனை ஹிரண்யாஸுரனுடைய உதிரக்குழம்பாகிற புதுமை மாறுத குங்குமச்சாறுதன்னுல் வ்யாப்தமாயிருக்கிற அகன்ற திருமார்பை யுடையவரே! அறிஞர்கட்கு நிதி போன்றவரே! பெரிய பிராட்டியார்க்கு இருப்பிடமானவரே! ஆஸன பத்மத்திலே எழுந்தருளியிருப்பவரே! நரஸிம்ஹ நரஸிம்ஹ!—; உமக்கு வணக்கமாகுக.

*அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் அவுணன் பொங்கவாகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதன்* என்றும் *போரார்நெடுவேலோன் பொன் பெயரோனுகத்தைக் கூரார்ந்தவள்ளுகிரால் கீண்டு, குடல்மாலை சீரார் திருமார்பின் மேல் கட்டிச்

செங்குருதி சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள் கொட்டி ஆராவெழுந்தானரியுருவாய்* என்றுஞ் சொல்லுகிறபடியே இரணியனென்னும் அசுரர் பெருமானுடைய மார்பைத் திருவுகிர்களால் கீண்டருளுங் காலத்திலே அங்குநின்றும் கொழித்திழிந்த உதிரவெள்ளம் குங்குமச் சாறு படிந்தாற்போலே திருமார்பிலே படிந்திருந்ததாம்; அது சொல்லுகிறது முன்னடிகளால். "மஹோரா: என்கிற முதல் வேற்றுமைச்சொல் ஸம்போதநத்தில் *மஹோர:* என்று கிடக்கிறபடி. *

[பண்டித நிதாந!] அறிவுடையார்கள் *வைத்தமாநிதி* என்றும் *அந்தர்ஹிதோ நிதிரஸி* என்றும் சொல்லும்படியுள்ளவனிறே எம்பெருமான். நிதியானது உள்ளே பதிகிடந்து ஒரு காலவிசேஷத்திலே பாக்யவான்களுக்கு வெளிப்படும்; அப்படியேயிறே நரஸிம்ஹன்படியும். [கமலாலய!] கமலை கேழ்வனே! என்றபடி. நரசிங்க வுருக்கொண்டபோது மூவுலகுமஞ்சிக் கலங்கிப் போகும்படியான சீற்றம் உண்டானது கண்டு அதனைத் தணிக்க ஸ்ரீமஹாலக்ஷ்மி வந்து குடிகொள்ள, லக்ஷ்மீந்ருஸிம்ஹனுன்மை இங்கு நினைக்கத்தக்கது. [பங்கஜ நிஷண்ண!] தண்டாமரை சுமக்கும் பாதப் பெருமானென்றபடி. (3)

**மௌலிஷு விபூஷண மிவாமரவராணும்**
**யோகிஹ்ருதயேஷு ச சிரஸ்ஸு நிகமாநாம்,**
**ராஜதரவிந்தருசிரம் பதயுகம் தே**
**தேஹி மம மூர்த்நி நரஸிம்ஹ நரஸிம்ஹ.** (4)

ரஸிம்ஹ நரஸிம்ஹ! அமரவராணும் மௌலிஷு யோகி ஹ்ருதயேஷு ச நிகமாநாம் சிரஸ்ஸு ச விபூஷணம் இவ ராஜத் அரவிந்த ருசிரம் தே பத யுகம் மம மூர்த்நி தேஹி.

நரஸிம்ஹ நரஸிம்ஹ!— சிறந்த தேவர்களின் முடிகளின் மீதும் யோகிகளின் உள்ளத்திலும் வேதாந்தங்களிலும் சிறந்ததொரு பூஷணம் போன்று விளங்குகின்ற தாமரைபோலழகிய தேவரீருடைய திருவடியிணையை என் சென்னிமீது வைத்தருளவேணும்.

*கோலமாமென் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே* என்றும் *அடிச்சியோந் தலைமிசை நீயணியா யாழியங் கண்ணாவுன் கோலப் பாதம்* என்றும் ஆழ்வார்கள் ப்ரார்த்தித்த கட்டளையிலே ப்ரார்த்திக்கிறாராயிற்று இந்த ச்லோகத்தில். அமரர்களுடைய சென்னிப்பூவாய் விளங்காநிற்பதும், முனிவர்களும் யோகிகளும் உள்ளத்துக் கொண்டு சிந்திக்கப் பெற்றதும் "வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கு" என்கிறபடியே மறைமுடிகளுக்குப் பரமப்ரமேயமாய் விளங்கா நிற்பதுமான தேவரீருடைய திருவடியிணையை என் சென்னிக் கணியாகச் சேர்த்தருள வேணுமென்றாராயிற்று. விபூஷணம் என்பது ஸப்தம்யந்த பதங்களெல்லாவற்றிலும் அந்வயிக்கக்கடவது. .... .... .... (4)

**வாரிஜவிலோசந மதந்திமதசாயாம்**
**க்லேசவிவசீக்ருதஸமஸ்த கரணயாம்,**
**ஏஹி ரமயா ஸஹ சரண்ய விஹகாநாம்**
**நாதமதிருஹ்ய நரஸிம்ஹ நரஸிம்ஹ.** (5.)

வாரிஜ விலோசந சரண்ய நரஸிம்ஹ நரஸிம்ஹ! க்லேச விவசீக்ருத ஸமஸ்த கரணயாம் மத் அந்திம தசாயாம் ரமயா ஸஹ விஹகாநாம் நாதம் அதிருஹ்ய ஏஹி.

செந்தாமரைக் கண்ணரே! அடியேன் போல்வார்க்குத் தஞ்சமானவரே! நரஸிம்ஹ நரஸிம்ஹ!—: (செவி வாய் கண் முதலான) ஸமஸ்த கரணங்களையும் க்லேசத்துக்கு வசப்படுத்துமதான என்னுடைய சரமாவஸ்த்தையிலே பிராட்டியோடு கூடப் பெரிய திருவடியின்மேலேறிக் கொண்டு (அடியேன்பால்) வந்தருளவேணும்.

* எய்ப்பென்னைவந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்* என்கிற கணக்கிலேயருளிச் செய்வது இந்த ச்லோகம். *மேலெழுந்ததோர் வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினை யுள்ளெழ வாங்கி, காலுங்கையும் விதிர்விதிர்த்தேறிக் கண்ணுறக்கமதாவது* என்றும் *மடிவழிவந்து நீர்ப்புலன் சோர வாயிலட்டிய கஞ்சியும் மீண்டே, கடைவழிவாரக் கண்ட மடைப்பக் கண்ணுறக்கமதாவது*என்றும், வாயொருபக்கம் வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக் கண்கள் மிழற்றத் தாயொரு பக்கம் தந்தையொருபக்கம் தாரமுமொருபக்கமலற்ற* என்றுஞ்சொல்லுகிறபடியே அந்திம காலத்தில் நேரும் அவஸ்தைகளுக்கு ஓர் அடைவு இல்லையே; மநோவாக்காயங்களாகிற கரணக்ராமங்களெல்லாம் க்லேசங்களுக்கே வசப்பட்டிருக்கும்படியான அந்த நிலைமையில் காஷ்டபாஷாணஸந்நிபம் அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்*என்ற திருமுகப்பாசுரத்தின்படியே, *பறவையேறு பரம்புருடனுயப் பிராட்டியோடுங் கூட வெழுந்தருளிப் பாவியேனைக் கைக்கொண்டருளவேணுமென்று வேண்டினாராயிற்று.

வாரிஜவிலோசந! என்று விளித்தது *கிண்கிணிவாய்ச் செய்த தாமரைப்பூப் போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழித்தருளவேணுமென்று குறிப்பித்தபடி. .... .... (5)

**ஹாடககிரீடவரஹாரவநமாலா தாரரசநாமகரகுண்டலமணீந்த்ரை:,**
**பூஷிதமசேஷநிலயம் தவ வபுர் மே சேதஸி சகாஸ்து நரஸிம்ஹ**
**[நரஸிம்ஹ. (6)**

நரஸிம்ஹ நரஸிம்ஹ ஹாடக கிரீட வர ஹார வநமாலா தார ரசநா மகரகுண்டல மணீந்த்ரை: பூஷிதம் அசேஷ நிலயம் தவ வபு: மே சேதஸி சகாஸ்து.

அழகிய சிங்கப்பெருமாளே!, பொன்மயமான சிறந்த மகுடமென்ன, வைஜயந்தி யென்னும் வனமாலையென்ன, முத்துமயமான அரைநாணென்ன, திருமகரக் குழைகளென்ன ஆகிய இத் திருவாபரணங்களினால் அலங்கரிக்கப்பட்டதும் எங்கும் வியாபித்ததுமான தேவரீருடைய திருமேனி என்னெஞ்சினுள் விளங்கவேணும்.

*செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல் விரலில் சேர்திகழாழிகளுங் கிண்கிணியும் அரையில் தங்கிய பொன்வடமும் தாளநன்மாதுளையின் பூவொடு பொன்மணியும் மோதிரமுங் கிறியும் மங்கல வைம்படையும் தோள்வளையுங் குழையும் மகரமும் வாளிகளும் சுட்டியுமான திருவாபரணங்களணிந்த திருமேனியே தமது திருவுள்ளத்தில் திகழவேணுமென்று ப்ரார்த்தித்தாராயிற்று.(தாரரசநா)தாரமென்று முத்துக்குப்பெயர். நக்ஷத்ரவடமென்கிற திருவாபரணத்தைச் சொல்லவுமாம். [மணீந்த்ரை:] ரத்நவாசகமான இந்த சப்தம் லக்ஷணயா ரத்நப்ரசுரபூஷண வாசகமாகலாம். [அசேஷ நிலயம்] நிலயசப்தம் நித்யபும்லிங்கமாகையாலே இங்கு பஹுவ்ரீஹியாகக்கடவது. அசேஷத்தையும்நிலயமாகவுடைத்தான என்கை. .... .... (6)

**இந்துரவிபாவகவிலோசந ரமாயா மந்திர மஹாபுஜலஸத்வரரதாங்க,**
**ஸுந்தர சிராய ரமதாம் த்வயி மநோ மே நந்திதஸுரேச நரஸிம்ஹ**
**[நரஸிம்ஹ. (7)**

இந்து ரவி பாவக விலோசந! ரமாயா: மந்திர! மஹாபுஜ லஸத் வர ரதாங்க! ஸுந்தர! நந்தித ஸுரேச நரஸிம்ஹ நரஸிம்ஹ! மே மந: த்வயி சிராய ரமதாம்.

சந்திரன் ஸூரியன் அக்நி ஆகிய இவர்களைக் கண்ணாக வுடையவரே! பெரிய பிராட்டியார்க்குத் திருக்கோயிலாயிருப்பவரே! தடக்கையில் விளங்கும் சிறந்த திருவாழியாழ்வானை யுடையவரே! அழகு பொலிந்தவரே! அமரர்கோனைத் துயர்தீர்த்தவரே! நரஸிம்ஹ நரஸிம்ஹ!—; அடியேனுடைய மனமானது தேவரீரிடத்தில் நெடுங்காலம் உகப்புக்கொண்டிருக்கவேணும்

நரஸிம்ஹாவதாரத்திலே தீப்பொறிபறக்கும் நெற்றிக்கண்ணென்று மூன்றுவ தாகத் தோன்றினபடியால், க்ரமமான இரண்டு திருக்கண்களைச் சந்திரஸூர்யர்களாக வும் மூன்றுவதான அந்த நெற்றிக்கண்ணை அக்நியாகவும் அருளிச் செய்தார் முதல் பாதத்திலே. அந்த நெற்றிக்கண்ணை யவிப்பதற்காகவே பிராட்டிவந்து திருமேனியில் வீற்றிருந்தபடியாலே "ரமாயா மந்திர!" என்றார். மஹாபுஜ லஸத் தரரதாங்க!" என்றும் பாடமுண்டென்பர்; தரமென்று சங்குக்குப் பெயராதலால் சங்குசக்கரமிரண்டை யும் சேரச் சொன்னபடியாகும். .... .... ... .... (7)

மாதவ முகுந்த மதுஸூதந முராரே
வாமந ந்ருஸிம்ஹ சரணம் பவ நதாநாம்,
காமத க்ருணிந் நிகிலகாரண நயேயம்
காலமமரேச நரஸிம்ஹ நரஸிம்ஹ! (8)

மாதவ! முகுந்த! மதுஸூதந! முராரே! வாமந! ந்ருஸிம்ஹ! நதாநாம் சரணம் பவ; காமத க்ருணிந்! நிகில காரண அமரேச! நரஸிம்ஹ நரஸிம்ஹ! காலம் நயேயம்.

திருமாலே! முத்தியளிக்கும் பெருமானே! மதுகைடபர்களை மாய்த்தவனே! (நரகாஸுரவதத்தில்) முரனைக் கொன்றவனே! குறள்கோலப்பிரானே! நரங்கலந்த சிங்கமே! அடிபணிந்தவர்களுக்குத் தஞ்சமாவாய்; அபேக்ஷிதங்களை யெல்லா மளிப்பவனே! தயாளுவே! ஸகலகாரண பூதனே! அமரர் பெருமானே! நரஸிம்ஹ; நரஸிம்ஹ (இங்ஙனே உன் திருநாமங்களை வாயார வாழ்த்திக் கொண்டே) என் வாழ்நாளைப்போக்கக் கடவேன்.

"க்ரோசந் மதுமதந நாராயண ஹரே முராரே கோவிந்தேதி அநிசமபநேஷ்யாமி திவஸாந்" என்று பட்டரருளிச் செய்தகட்டளையிலே அருளிச் செய்தபடி. மூன்றுவது பாதத்திலே (இதி) என்று வருவித்துக் கொள்ளவேணும்.

காலம் நயேயம் என்பதற்கு 'யமனையும் அடக்கியாளக்கடவேன்' என்று பொருள் கூறலாமாயினும் அது அத்துணைச் சிறவாது. க்ருணீ—தயாளு. (க்ருண—தயை; அதனையுடையவன்—க்ருணீ.) .... .... .... (8)

அஷ்டகமிதம் ஸகலபாதகபயக்நம் காமதமசேஷதுரிதாமயரிபுக்நம்,
யः படதி ஸந்ததமசேஷநிலயம் தே கச்சதி பதம் ஸ நரஸிம்ஹ நரஸிம்ஹ. (9)

நரஸிம்ஹ நரஸிம்ஹ! ஸகல பாதக பயக்நம் காமதம் அசேஷ துரித ஆமய ரிபுக்நம் இதம் அஷ்டகம் யः ஸந்ததம் படதி ஸः அசேஷ நிலயம் தே பதம் கச்சதி.

நரஸிம்ஹ நரஸிம்ஹ!—; ஸகலபாபங்களையும் ஸகல பயங்களையும் போக்கடிப்பதும் ஸகலாபேக்ஷிதங்களையு மளிப்பதும் ஸகலவிதமான பாபங்களையும் பிணிகளையும் பகைவர்களையும் நிரஸிப்பதுமான எட்டுச்லோகங்களிலுலமைந்த இந்த ஸ்தோத்திரத்தை யாவனொருவன் எப்போதும் கற்கின்றானோ அவ்விதிகாரி அனைவர்க்கும் ப்ராப்யமான தேவரீருடைய திவ்யஸ்தானத்தை அடைந்திடுவான்.

இதனல் இந்த ஸ்தோத்ரம் கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைகட்டுகிறார். முதல் பாதத்தில் பாதகமென்றது மஹாபாதகங்களை; இரண்டாவது பாதத்தில் துரிதமென்றது உபபாதகங்களை-என்று கொள்ளலாமாகையாலே புநருக்தியில்லை. அநிஷ்டநிவாரணம் இஷ்டப்ராபணம் ஆகிற இரண்டுக்கும் கடவதான இந்த ஸ்தோத்ரத்தை நிச்சலும் பாடுவர் நீள்விசும்பாள்வர் என்று பேறு கூறித் தலைக்கட்டினராயிற்று (9)

வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்த
நரஸிம்ஹாஷ்டகத்திற்கு
ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரை முற்றிற்று.

ஸ்ரீ:

# காஞ்சீ. திவ்யதேச ஸங்க்ரஹ ச்லோகமாலிகை.

ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸந்நிதி விஷயமான

முக்தக ச்லோகங்கள்.

மணவாளமாமுனிகள் திவ்யதேச யாத்திரையடைவில் முதல்பர்யாயமாகப் பெருமாள் கோயிலுக் கெழுந்தருளினபோது அருளிச்செய்தவை.

ஸ்ரீமத் த்வாரவரம் மஹாத்தி பலிபீடாக்ர்யம் பணீந்த்ரஹ்ரதம்
கோபீநாம் ரமணம் வராஹவபுஷம் ஸ்ரீ பட்டநாதம் முநிம்,
ஸ்ரீமந்தம் சடவைரிணம் கலிரிபும் ஸ்ரீ பக்திஸாரம் முநிம்
பூர்ணம் லக்ஷ்மணயோகிநம் முநிவராந் ஆத்யாந் அத த்வாரபௌ.
ஸ்ரீமந்மஜ்ஜநமண்டபம் ஸரஸிஜாம் ஹேதீசபோகீச்வரௌ
ராமம் நீலமணிம் மஹாநஸவரம் தார்க்ஷ்யம் ந்ருஸிம்ஹம் ச்ரியம்,
ஸேநாந்யம் கரிபூதரம் ததுபரி ஸ்ரீ புண்யகோட்யாம் ஹரிம்
தந்மத்யே வரதம் ரமாஸஹசரம் வந்தே ததீயைர் வ்ருதம்.

தேவப்பெருமாள் ஸந்நிதியினுட் புகுந்ததுமுதல் மங்களாசாஸநம் செய்யப்பட்ட ஸகலஸந்நிவேசங்களும் இந்தச்லோகத்தில் அருளிச்செய்யப்பட்டன 1. கோயில் திருவாசல். 2. மஹாபலிபீடம். 3. திருவனந்தபுஷ்கரிணி. 4. வேணுகோபாலன். 5. ஞானப்பிரான். 6. பட்டர்பிரான். (பெரியாழ்வார்). 7. நம்மாழ்வார் 8. கலியன். 9. திருமழிசைப்பிரான். 10. எம்பெருமானுர். 11. முதலாழ்வார்கள் 12. த்வாரபாலகர்கள். 13. அபிஷேக மண்டபமென்று வழங்கப்படுகிற திருமஞ்சன மண்டபம். 14. பெருந்தேவித்தாயார். 15. திருவாழியாழ்வான். 16. திருவனந்தாழ்வான். 17. சக்கரவர்த்தி திருமகன். 18. கரியமாணிக்கப்பெருமாள். 19. திருமடைப்பள்ளி. 20. பெரிய திருவடி. 21. அழகிய சிங்கர். 22. சூடிக்கொடுத்த நாச்சியார். 23. ஸேநாபதியாழ்வான். 24. திருவத்திமாமலே. 25. அதனுச்சியில் புண்யகோடி விமானத்தில் அடியார்கள் புடைசூழ நின்று காட்சிதரும்பெருந்தேவிமணவாளஞன பேரருளாளன். ஆக இவர்களை யெல்லாம் தொழுதபடி சொல்லிற்றுயிற்று இந்த சுலோகத்திஞல். .... .... .... *

ஸ்ரீகாஞ்சீபுரியிலுள்ள அஷ்டாதச திவ்யதேசங்களென்று ப்ரஸித்தமான பதினெட்டு திவ்ய ஸ்தலங்களை மங்களாசாஸநம் செய்தருளின ச்லோகங்கள்.

தேவாதீசந்ருஸிம்ஹபாண்டவமஹாதூதப்ரவாலப்ரபாந்
ஸ்ரீவைகுண்டபதிம் த்ரிவிக்ரமஹரிம் நீரேசமேகேச்வரௌ,
நீலவ்யோமவிபும் மஹோரகஹரிம் ஜ்யோத்ஸ்நேந்து வக்த்ரம் ஹரிம்.
சோரேசம் க்ருதசிந்தபக்தஹ்ருதயாவாஸம் முகுந்தாஹ்வயம்.
காமாவாஸபதிம் ந்ருகேஸரிவரம் தீபப்ரகாசப்ரபும்
ஸ்ரீயுக்தாஷ்டபுஜாஸ்பதேசமநகம் ஸ்ரீமத்யதோக்தக்ரியம்,
இத்யஷ்டாதச திவ்யமங்கலவபுர்தேவாந் ஸரோயேகிநா
ஸாகம் நிஸ்துல்காஞ்ச்யபிக்ய நகரீநாதாந் நமாமஸ் ஸதா.

காஞ்சியில் ஆழ்வார் பாடல்பெருத புராணஸ்தலங்களும் சிலவுண்டு; அவற்றையும் சேர்த்தே "கச்சியில் பதினெட்டு திவ்ய க்ஷேத்ரங்கள்" என்ருெரு மூதுரை வழங்குகின்றது. அந்தப் பதினெட்டு ஸ்தலங்களும் இவ்விரண்டு ச்லோகங்களில் அநுஸந்திக்கப்பட்டிருக்கின்றன. முதலாழ்வார்களில் முதல்வரான பொய்கையாழ்வார் அவதரித்ததும் காஞ்சியிலேயாதலால் அவ்வாழ்வாரோடு சேர்த்து மங்களாசாஸநம் செய்திருக்கிறபடி.

1. தேவப்பெருமாள். 2. அழகிய சிங்கர். 3. பாண்டவதூதர். 4. பவழவண்ணர். 5. வைகுண்டநாதன் (பரமேச்சுரவிண்ணகரம்). 6. உலகளந்த பெருமாள். 7. நீரகத்தான். 8. காரகத்தான். 9. கார்வானத்துள்ளான். 10. ஊரகத்தான். 11. நிலாத்திங்கள் துண்டத்தான். 12. கள்வர். 13. உள்ளுவாருள்ளத்தான். 14. முகுந்தப் பெருமாள். 15. வேளுக்கை, ஆளழகிய சிங்கர். 16. விளக்கொளியெம்பெருமான். 17. அட்டபுயகரத்தான். 18. சொன்னவண்ணஞ் செய்தபெருமாள் (திருவெஃகா) ஆகப் பதினெண்பெருமான்களையும் பொய்கையாழ்வாரையும் எஞ்ஞான்றும் இறைஞ்சுகின்ருே மென்றதாயிற்று. .... ... *

காஞ்சி திவ்யதேச ஸங்க்ரஹ ச்லோகமாலிகை

முற்றிற்று.

மணவாளமாமுனிகள் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்ய ஸ்வாமி

தேவப்பெருமாளுடைய பெரிய திருவடி மஹோத்ஸவ

விஷயமாகப் பணித்த

# தேவாதிராஜ பஞ்சகம்.

அவதாரிகை.

"தக்கானைக் கடிகைத் தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக் கனியை யடைத்துய்ந்துபோனேனே" என்று திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம்பெற்ற திருக்கடிகையென்னும் சோளஸிம்ஹபுரத்தில் மஹா வித்வச்சிகாமணியா யெழுந்தருளியிருந்த தொட்டயாசார்யஸ்வாமி ஸம்வத்ஸரந்தோறும் தேவப்பெருமாளுடைய வையங்கண்ட வைகாசித் திருநாளுக்குக் கச்சிப்பதியேற வெழுந்தருளி அத்தாணிச் சேவகம் செய்து மகிழ்வது வழக்கம். ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருள ஸௌகர்யமற்று, மூன்ருநாள் பெரியதிருவடி ஸேவைக்காவது எழுந்தருளவேணுமென்றுபாரித்திருக்கையில் அதுதனக்கும் க்ஷமரன்றிக்கே அன்று பின்மாலை யெழுந்து தக்கான்திருக்குளத்திலே அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு "அத்தியூரான் புள்ளையூர்வான்" என்கிற பூதத்தாழ்வார் பாசுரத்தையே சிந்தித்து வாயார வேத்தியிருக்கையில் இப்பெரியாருடைய பரம பக்திக்கு உகந்த பேரருளாளன் கச்சி நகரில் காட்சி தந்தருள்வதுபோலவே அங்கு இவர்க்கு ஸேவை ஸாதித்தருள, அப்போது அநுபவபரீவாஹரூபமாக அவதரித்தது இந்த தேவாதிராஜ பஞ்சகம். இந்த ஐந்து ச்லோகங்களிலும் பெரிய திருவடி வாஹனத்தின் பெருமை யொன்றே பேசப்பட்டுள்ளது. .... (*)

## க்ரந்தாரம்பம்

ப்ரத்யூஷே வரத: ப்ரஸந்நவதந: ப்ராப்தாபிமுக்யாந் ஜநாந்
ஆபத்தாஞ்ஜலிமஸ்தகாந் அவிரலாந் ஆபாலமாநந்தயந்
மந்தோட்டாயிதசாமரோ மணிமயச்வேதாதபத்ரச் சநை:
அந்தர்கோபுரமாவிராஸ பகவாந் ஆருடபக்ஷீச்வர:. (1)

ப்ரத்யூஷே ப்ரஸந்நவதந: பகவாந் வரத: ப்ராப்த ஆபிமுக்யாந் ஆபத்த அஞ்ஜலி மஸ்தகாந் அவிரலாந் ஜநாந் ஆபாலம் ஆநந்தயந் ஆருட பக்ஷீச்வர: மந்த உட்டாயிதசாமர: மணிமய ச்வேத ஆதபத்ர: சநை: அந்தர் கோபுரம் ஆவிராஸ.

ஸுப்ரபாத காலத்தில் ஸுப்ரஸந்நமான திருமுக மண்டலத்தையுடைய பேரருளாளப் பெருமாள் அபிமுகர்களாயும் *மத்தகத்திடைக் கைகளைக் கூப்பினவர்களாயும் இடைவெளி யில்லாமல் நெருங்கியிருப்பவர்களாயுமுள்ள ஜனங்களை சிறுவர் முதற்கொண்டு ஸந்தோஷப் படுத்துமவராய் பெரிய திருவடியை வாஹனமாகக் கொண்டவராய் மெதுவாக வீசப்பட்ட சாமரங்களை யுடையவராய் ரத்னமயமான வெண்கொற்றக் குடையையுடையவராய் மெல்ல மெல்ல திருக் கோபுரத்தினுள் தோன்றியருளினர்.

தேவப்பெருமாளுடைய பெரிய திருவடித் திருநாளை ப்ரதம பரிஸ்பந்தமே பிடித்து அநுபவிக்கிறார். அருணோதய வேளையில் அபிமத ஜநதர்சநாநந்த வேகத்தாலே அர்ச்சாவதாரஸமாதியைக் கடந்து விம்மி வெளிவிழுகின்ற அவ்யக்தமதுரமந்த ஹாஸ விலாஸத்தோடு கூடின திருமுக மண்டலம் பொலிந்த தேவப்பெருமாள் "சிரஸ்யஞ்ஜலிமாதாய" என்றும் "மத்தகத்திடைக் கைகளைக்கூப்பி" என்றுஞ் சொல்லுகிறபடியே உச்சிமிசைக் கரம்வைத்துத் தொழுமவர்களாய் அஹமஹமிகயா வந்து நெருக்குவாரிடையே அகப்பட்டுத் துடிப்பவர்களான அடியார்களைச் சிறியார் பெரியாரென்கிற வாசியின்றிக்கே [ஜநிதர்மாக்களை யெல்லாம்] உகப்பியா நின்றுகொண்டு "காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல்" என்கிறபடியே பறவையேறு பரம்புருடனாய் திருவெண்கொற்றக்குடை பிடிக்குமழகும் சாமரை வீசுமழகும் பொலிய கோபுரஸேவைதந்தருளுமாறு எழுந்தருளின அழகு என்னே! என்று ஈடுபடுகிறார். .... .... .... .... (1)

முக்தாதபத்ரயுகளோபயசாமராந்தர்
வித்யோதமாநவிநதாதநயாதிருடம்,
பக்தாபயப்ரதகராம்புஜமம்புஜாக்ஷம்
நித்யம் நமாமி வரதம் ரமணீயவேஷம். (2)

முக்தாதபத்ர யுகல உபய சாமர அந்த: வித்யோதமாந விநதா தநய அதிருடம் பக்த அபயப்ரத கராம்புஜம் அம்புஜாக்ஷம் ரமணிய வேஷம் வரதம் நித்யம் நமாமி.

இரண்டு முத்துக்குடைகளென்ன இரண்டு சாமரங்களென்ன இவற்றினுள்ளே விளங்கா நின்ற வைநதேயனை பெரிய திருவடியின் மீது ஏறி வீற்றிருப்பவனும் அடியார்களுக்கு அபயமளிக்கும் திருக்கைத் தாமரையை யுடையவனும் செந்தாமரைக் கண்ணனும் மநோஹரமானதிவ்யாலங்காரங்களையுடையனுமான பேரருளாளனை இடையறுது வணங்குகின்றேன். (2)

கேசித் தத்வவிசோதநே பசுபதௌ பாரம்யமாஹு: பரே
வ்யாஜஹ்ரு: கமலாஸநே நயவிதாம் அந்யே ஹரௌ ஸாதரம்,
இத்யேவம் சலசேதஸாம் கரத்ருதம் பாதாரவிந்தம் ஹரே:
தத்வம் தர்சயதீவ ஸம்ப்ரதி ந்ருணாம் தார்க்ஷ்ய: ச்ருதீநாம் நிதி:. (3)

தத்வவிசோதநே நயவிதாம் கேசித் பசுபதௌ பாரம்யம் ஆஹுஃ, பரே கமலாஸநே பாரம்யம் வ்யாஜஹ்ருஃ, அந்யே ஸாதரம் ஹரௌ பாரம்யம் ஆஹுஃ இதி ஏவம் சலசேதஸாம் ந்ருணும் ச்ருதீநாம் நிதிஃ தார்க்ஷ்யஃ ஸம்ப்ரதி கரத்ருதம் ஹரேஃ பாதார விந்தம் தத்வம் தர்சயதி இவ.

பரதத்வமின்னதென்று ஆராயுமளவில் சாஸ்த்ர மறிந்தவர்களுக்குள்ளே சிலமதஸ்தர்கள் ருத்ரனிடத்தில் பரத்வத்தைக் கூறினர்; வேறுசிலர் நான்முகக் கடவுளிடத்தில் பரத்வமுள்ளதாகப் பகர்ந்தார்கள்; மற்றையோர்கள் ஆதரத்தோடுகூட ஸ்ரீமந் நாராயணனிடத்தில் பரத்வமுள்ளதாகச் சொன்னுர்கள்; (இப்படி பலரும் பலவாருகச் சொல்லுகின்ருர்களே; ஒருவிதமான நிஷ்கர்ஷமில்லையே!) என்று தளும்பின நெஞ்சையுடையரான மனிசர்க்கு(தெளிவுபிறப்பிக்க வேண்டி) வேதங்களுக்கு நிதியான பெரியதிருவடியானவர் இப்போது [இத்திருநன்னுளிலே] தம்முடைய கைத்தலத்திலே தாங்கப் பட்ட எம்பெருமானுடைய திருவடித் தாமரையை பரதத்துவமாகக் காட்டுகின்ருர் போலும்.

பெரிய திருவடி பேரருளாளனுடைய திருவடித் தாமரையிணையைத் தன் கைத்தலத்திலே ஏந்திக்கொண்டு வருவதை நோக்கி ஒரு உத்ப்ரேக்ஷை பண்ணுகிருர் இந்த ச்லோகத்தில். ஸம்யங்ந்யாயாநுக்ருஹீத ப்ரமாண பராமர்சத்தாலும் ஸதாசார்ய ஸேவையாலும் ஸந்தேஹ விபர்யயமறப் பரதத்வத்தை நிஷ்கர்ஷித்துணர வல்லமையின்றிக்கே சஞ்சல புத்திகளாயுள்ளவர்களுக்கு ஒரு தெளிவைப் பிறப்பிக்க வெண்ணின வேதாத்மாவான விஹகேச்வரன் " ஸ்ரீமந்நாராயணனுடைய இந்தத் திருவடித் தாமரையே காணீர் பரதத்வம்!" என்று கரஸ்தமாக்கிக் காட்டுகிருப் போலுள்ளது என்ருராயிற்று. ஒரு பக்ஷி காட்டிவிட்டால் இதையே தத்துவமாக விச்வஸிக்க விரகுண்டோவென்கிற சங்கைக்கு இடமில்லாதபடி " ச்ருதீநாம் நிதிஃ" என்று கருத்மானுக்கு விசேஷணமிட்டார். "வேதாத்மா விஹகேச்வரஃ" என்று ஆளவந்தாருமருளிச் செய்தார். *ஸுபர்ணேஸி கருத்மாந் த்ரிவ்ருத்தே சிரः* இத்யாதி வேதவாக்யமும் இங்கு அநுஸந்தேயம். .... .... .... .... (3)

யத் வேதமௌலிகணவேத்யமவேத்யமந்யைः
யத் ப்ரஹ்மருத்ர ஸுரநாயகமௌலிவந்த்யம்,
தத் பத்மநாபபதபத்மமிதம் மநுஷ்யைः
ஸேவ்யம் பவத்பிரிதி தர்சயதீவ தார்க்ஷ்யः. (4)

யத் பத்மநாப பதபத்மம் வேத மௌலி கணவேத்யம் அந்யைஃ அவேத்யம் ப்ரஹ்ம ருத்ர ஸுரநாயக மௌலி வந்த்யம் தத் இதம் பவத்பிஃ ஸேவ்யம் இதி தார்க்ஷ்யஃ தர்சயதி இவ.

(ஓ வைதிக ஜனங்களே!) எம்பெருமானுடையதான எந்தத் திருவடியானது வேதாந்தங்களுக்கே அறியக் கூடியதோ (வைதிகர்களல்லாத) மற்றையோர்க்கு அறியக்கூடாததோ, யாதொரு திருவடியானது பிரமன், சிவன், இந்திரன் ஆகிய இவர்கள் முடிதாழ்த்தி வணங்கக் கூடியதோ அப்படிப்பட்ட இந்தத் திருவடியானது உங்களால் ஸேவிக்கத் தகுந்தது என்று கருத்மான் (கையிலேந்திக்) காட்டுகின்ருன்போலும்.

ப்ரத்யக்கோபுரஸம்முகே திநமுகே பக்ஷீந்த்ரஸம்வாஹிதம்,
ந்ருத்யச்சாமரகோரகம் நிருபமச்சத்ரத்வயீபாஸுரம்,
ஸாநந்தம் த்விஜமண்டலம் விதததம் ஸந்நாஹசிஹ்நாரவைः
காந்தம் புண்யக்ருதோ பஜந்தி வரதம் காஞ்ச்யாம் த்ருதீயோத்
[ஸவே. (5)

காஞ்ச்யாம் த்ருதீய உத்ஸவே திந
முகே பக்ஷீந்த்ர ஸம்வாஹிதம் ந்ருத்
யத் சாமர கோரகம் நிருபமச் சத்ர

த்வயீ பாஸுரம் ஸந்நாஹ சிஹ்ந
ஆரவைஃ த்விஜ மண்டலம் ஸாநந்தம்
விததநம் காந்தம் வரதம் புண்யக்

ருதஃ ப்ரத்யக் கோபுர ஸம்முகே
பஜந்தி.

திருக்கச்சிமாநகரில் மூன்றுவது உத்ஸவ நன்னுளில் ஸுப்ரபாத வேளையில் பெரிய திருவடியினுல் தாங்கப் பட்டவரும் சாமரமுகுளம் வீசப்பெற்றவரும் ஒப்பற்ற இரண்டு திருக்குடைகளினிடையே விளங்கா நிற்பவரும் புறப்பாடு ஸித்தமாயிற்றென்று தெரிவிக்கிற திருச்சின்ன வொலியினுல் மறையவர் திரளை மகிழச்செய்பவரும் மிக அழகுபொருந்தியவருமான பேரருளாளப் பெருமாளை பாக்யசாலிகள் மேலைத் திருக்கோபுர வாசலில் ஸேவிக்கப்பெறுகிருர்கள்.

" தந்யா : பச்யந்தி மே நாதம் " என்று பிராட்டி வருந்திச் சொன்னதுபோல இங்கும் "புண்யக்ருதோ பஜந்தி" என்று தம் இழவுதோற்றச் சொல்லியிருக்கையாலே இந்த மஹோத்ஸவஸேவை தமக்கு ப்ராப்தமாகப் பெருதகாலத்திலே பணித்தது இந்த ச்லோகபஞ்சகமென்று விளங்குகின்றது. .... .... (5)

சோளஸிம்ஹபுரம் தொட்டயாசார்யர் பணித்த

ஸ்ரீ தேவராஜபஞ்சகத்திற்கு

ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசாரியர் இயற்றிய உரை முற்றிற்று.

---

ஸ்ரீஃ

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

**நம்மாழ்வார், எம்பெருமானுர், மணவாளமாமுனிகள் விஷயமாக**

**நித்யாநுஸந்தேயமாய் முன்னேர்கள் பணித்தருளின**

**சிறிய ஸ்தோத்ரங்கள் உரையுடன் வெளியிடப்படுகின்றன.**

**நம்மாழ்வார் விஷயமான ஸ்துதிகள்.**

# 1. பராங்குசாஷ்டகம்.

கூரத்தாழ்வான் முதலான பூருவாசாரியர்கள் பலர் ஆழ்வார் விஷயமாகப்பணித்தருளின ச்லோகங்களில் எட்டுச்லோகரத்னங்களைத் திரட்டி பராங்குசாஷ்டக மென்று பெயரிட்டு நித்யாநுஸந்தேயமாக நியமித்தருளினர் முன்னேர். நாடோறும் திருவாராதந ஸமாப்தியில் திருமாளிகைதோறும் இது அநுஸந்திக்கப்பட்டு வருகிறது. இதில், *த்ரைவித்யவ்ருத்த, *பக்திப்ரபாவ* என்னுமிரண்டு ச்லோகங்கள் கூரத்தாழ்வானுடைய ஸ்ரீவைகுண்ட ஸ்தவத்தின் தொடக்கத்திலுள்ளவை. *ருஷிம் ஜுஷாமஹே* என்கிற ச்லோகம் பட்டருடைய ஸ்ரீரங்கராஜஸ்தவத்திலுள்ளது. *யத்கோஸஹஸ்ரம் * பந்யு: ச்ரியஃ *சடகோபமுநிம் *வகுளாபரணம்* என்கிற நான்கு ச்லோகங்கள் பூருவர்களினுடைய முக்தகங்கள். *நமஜ்ஜநஸ்ய* என்னும் ச்லோகம் ஜீயர் நாயனுர் அருளிச்செய்த நக்ஷத்திரமாலிகையிலுள்ளது. ஆக இந்த எட்டுச்லோகங்களும் பராங்குசாஷ்டக * மென்று போற்றப்படுவது. .... .... ....

த்ரைவித்யவ்ருத்தஜநமூர்த்தவிபூஷணம் யத்
ஸம்பச்ச ஸாத்விகஜநஸ்ய யதேவ நித்யம்,
யத் வா சரண்யமசரண்யஜநஸ்ய புண்யம்
தத் ஸம்ச்ரயேம வகுலாபரணாங்க்ரியுக்மம். 1

யத் த்ரைவித்ய வ்ருத்தஜந மூர்த்த விபூஷணம், யதேவ நித்யம் ஸாத் விக ஜநஸ்ய ஸம்பத் ச, யந் வா அசரண்ய ஜநஸ்ய சரண்யம், தத் புண்யம் வகுளாபரண அங்க்ரி யுக்மம் ஸம்ச்ரயேம.

யாதொரு நம்மாழ்வார் திருவடியிணையானது பரம வைதிகர்களுடைய முடிக்கு அலங்காரமாயிருக்கின்றதோ, யாதொரு திருவடியிணையே ஸர்வகாலமும் ஸாத்விகர்களுக்கு ஸகலைச்வர்யமுமாக இருக்கின்றதோ, யாதொரு திருவடியிணையே புகலொன்றில்லாதவர்களுக்குத் தஞ்சமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட பரமபாவனமான நம்மாழ்வாரது திருவடியிணையை ஆச்ரயிக்கக் கடவோம்.

* * * ஆளவந்தார் *மாதா பிதா யுவதய: * என்கிற ச்லோகத்தில் நம்மாழ்வாருடைய திருவடிகளைத்தமக்கு ஸர்வஸ்வமாகத் துதித்து அத்திருவடிகளையே *ப்ரணமாமி மூர்த்நா * என்று தலையால் வணங்குவதாக அருளிச்செய்தபடியால் அதைத் திருவுள்ளம் பற்றி முதல்பாதமருளிச்செய்தது. * தனத்தாலு மேதுங்குறைவிலேன் எந்தைசடகோபன் பாதங்கள் யாமுடைய பற்று * என்றதை நோக்கி இரண்டாவது பாதம் பணித்தது. * ஸர்வ லோகசரண்யனை எம்பெருமானும் கைவிடப்பட்டவர்களுக்கு ஆழ்வார்திருவடிகளே தஞ்சமென்கிறது மூன்றுவது பாதம். இந்த ச்லோகமும் அடுத்த ச்லோகமும் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தின் முதலிரண்டு ச்லோகங்களாதலால் அந்த ஸ்தவவியாக்கியானத்தில் நமது விபுலமானவுரை காணத்தக்கது. (1)

**பக்திப்ரபாவபவதத்புதபாவபந்த**
**ஸந்துக்ஷிதப்ரணயஸாரரஸௌகபூர்ண:,**
**வேதார்த்தரத்நநிதிரச்யுததிவ்யதாம**
**ஜீயாத் பராங்குசபயோதிரஸீமபூமா. (2)**

பக்திப்ரபாவ பவத் அத்புத பாவ பந்த ஸந்துக்ஷித ப்ரணயஸார ரஸௌக பூர்ண:, வேதார்த்த ரத்நநிதி:, அச்யுததிவ்ய தாம, அஸீம பூமா, பராங்குசபயோதி: ஜீயாத்.

பக்தியின் கனத்தாலுண்டாகிய ஆச்சரியமான அபிப்ராய விசேஷங்களினுல் வளர்க்கப்பட்ட சிறந்த ப்ரணயமாகிற தீர்த்த ப்ரவாஹத்தாலே [நவரஸ ஸமூஹத்தாலே] நிறைந்ததாயும், வேதப்பொருளாகிற நவரத்னங்களுக்கு நிதியாயும், எம்பெருமானுக்கு திவ்யமான ஸ்தானமாயும் அளவில்லாத பெருமையையுடையதாயுமிருக்கிற நம்மாழ்வாராகிற கடல் நெடுநாள் வாழவேணும்.

*பக்தாம்ருதம்* என்கிற தனியனில் *நமாம்யஹம் த்ராவிடவேதஸாகரம்* என்று திருவாய்மொழியைக் கடலாகக் கூறினர் முன்னோர். இங்கு ஆழ்வார்தம்மையே கடலாகக் கூறுகிறது. அங்ஙனம் கூறுவதற்குள்ள உபபத்திகள் நான்குவிசேஷணங்களினுல் மூதலிக்கப்படுகின்றன. *நதீநாம் ஸாகரோ கதி:* என்கிறபடியே பலநதிகளும்வந்து தன்னிடத்தே சேர்வதனுல் பலவகைப்பட்ட ரஸங்களினுல் நிரம்பியிருக்கும் கடல். ஆழ்வாரோவென்னில், பக்தியின் கனத்தினுல் தோன்றிய அற்புதமான அபிப்ராயவிசேஷங்கள் கொண்டு பலபல படியாகப் பேசும்முகத்தால் நவரஸங்களும் பொதிந்திருப்பர். [அந்த நவரஸபூர்த்தியை திருவிருத்தம் முதலான ஸ்ரீஸூக்திகள் காட்டும்.] கடல் ரத்நாகரம்; ஆழ்வார் வேதப்பொருள்களாகிற ரத்னங்களுக்குப் பிறப்பிடம். கடல் எம்பெருமானுறையுமிடம். ஆழ்வாரும் * ஒண்சங்கதைவாளாழியானொருவனடியேனுள்ளானே* என்கிறபடியே தம்முள் எம்பெருமானைத் தாங்கி நிற்பவர். கடல் அளவுகடந்த பெருமையையுடையது; அது ஆகார வைபுல்யம். ஆழ்வார் அளவிறந்த குணங்களினுல் பெருமைவாய்ந்தவர். ஆக இப்படிகளாலே கடலென்னத் தகுந்த ஆழ்வார் வாழ்க. .... .... .... .... (2)

ருஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணு தத்த்வமிவோதிதம்,
ஸஹஸ்ரசாகாம் யோத்ராக்ஷீத் த்ராமிடீம் ப்ரஹ்மஸம்ஹிதாம். 3

யஃ ஸஹஸ்ரசாகாம் த்ரமிடீம் ப்ரஹ்ம ஸம்ஹிதாம் அத்ராக்ஷீத், க்ருஷ்ண த்ருஷ்ணு தத்வமிவ உதிதம் தம் ருஷிம் ஜுஷாமஹே.

யாவரொருமுனிவர் ஆயிரம் பாசுரங்களையுடைய தான த்ராவிடப்ரஹ்ம ஸம்ஹிதையை ஸாக்ஷாத்கரித்தாரோ, க்ருஷ்ணபக்தியே வடிவெடுத்து அவ தரித்த தென்னலாம்படியான அந்த சடகோபமுனிவரை ஸேவிக்கிறோம்.

* * * ஸாமவேதத்திற்கு ஸஹஸ்ரசாகைகள் உள்ளனவாக ப்ரஸித்தி; அப்படியே ஆயிரம் சாகைகளென்னலாம்படியான ஆயிரம் பாசுரங்களையுடையது ஸாமவேதஸாரமான திருவாய்மொழி. அதனை ஸாக்ஷாத்கரித்தவரும் க்ருஷ்ண த்ருஷ்ணையே வடிவெடுத்ததென்னலாம்படி க்ருஷ்ணபக்தி மிகுந்தவருமான ஸ்ரீசடகோப மஹர்ஷியை ஸேவிக்கிறோமென்கை. ஸ்ரீரங்கராஜஸ்தவதத்தில் இது ஆறுவது ச்லோகமாதலால் அவ்விடத்து நமது வியாக்யானத்தில் விரிவுரை காண்க. .... (3)

யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாராயணோ வஸதி யத்ர ஸசங்கசக்ர:,
யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ரா:
தஸ்மை நமோ வகுலபூஷணபாஸ்கராய. 4

யத் கோ ஸஹஸ்ரம் பும்ஸாம் தமாம்ஸி அபஹந்தி, யத்ர நாராயணஃ ஸசங்கசக்ரஃ வஸதி, ச்ருதிகதம் யத் மண்டலம் விப்ராஃ ப்ரணமந்தி; தஸ்மை வகுலபூஷண பாஸ்கராய நமஃ.

ஸூர்யனுடைய ஆயிரம் கிரணங்கள் வெளியிருளைப் போக்குவதுபோல யாவரொரு ஆழ்வாருடைய ஆயிரம் பாசுரங்கள் ஸகல சேதநர்களுடையவும் அகவிருளைத் தொலைக்கின்றனவோ, ஸூர்யனிடத்தில் நாராயணன் சங்கு சக்கரங்களோடு கூடி விளங்குவதுபோல அப்பெருமான் யாவரொரு ஆழ்வாரிடத்தில் அவ்விதமாகவே உறைகின்றானோ, வேதப்ரதிபாத்யமான ஸூர்ய மண்டலத்தை அந்தணர்கள் வணங்குவது போல யாவரொரு ஆழ்வாருடைய திவ்ய ஸ்தலம் செவிப்பட்டவுடனே பரம பாகவதர்கள் கையெடுத்துக் கும்பிடுகிறார்களோ அப்படிப்பட்ட நம்மாழ்வாராகிற ஸூர்யனுக்கு வணக்கமாகுக.

* * * இந்த ச்லோகத்தினால் ஆழ்வார் விலக்ஷணஸூர்யனாக ரூபிக்கப் படுகிறார். இவ்விடத்தில் "ஆதித்யராமதிவாகர அச்யுதபாநுக்களுக்குப் போகாத வுள்ளிருள் நீங்கி சோஷியாத பிறவிக்கடல்வற்றி விகஸியாத போதிற் கமலமலர்ந்தது வகுளபூஷண பாஸ்கரோதயத்திலே" என்கிற ஆசார்ய ஹ்ருதய சூர்ணையை [வியாக்கியானத்துடன்] அநுஸந்திப்பது. ஸூர்யன் புறவிருளைப் போக்கவல்லன்; வகுளபூஷணபாஸ்கரர் அகவிருளையுமொழிக்க வல்லவர்; ஸூர்யன் *த்யேயஸ் ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்டஃ, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதசங்கசக்ர:* என்கிறபடியே திவ்யாபரண திவ்யாயுத பூஷிதனான நாராயணனைத் தன்பால் கொண்டவன். வகுளபூஷணபாஸ்கரரும் *கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ்சிவந்து கனிந்து உள்ளே வெண்பலிலகு சுடரிலகுவிலகு மகர குண்டலத்தன், கொண்டல்வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன் குனிசார்ங்கன், ஒண்சங்கதை வாளாழியானொருவனடியேனுள்ளானே* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின்படியே அப்படிப்பட்ட எம்பெருமானைத் தம்மிடத்தே கொண்டவர்.

இனி மூன்றுவதுபாதத்தில் சிலேடை. ச்ருதிகதம் என்பதற்கு ஸூர்ய மண்டல பக்ஷத்தில் வேதப்ரதிபாத்யமென்று பொருள். *ந்ருசே விச்வாய ஸூர்யம்* இத்யாதி வேதவாக்கியங்களினுல் கூறப்படுகிற ஸூர்யமண்டலத்தை அந்தணர்கள் முச்சந்தியும் ஸந்த்யாவந்தன ப்ரகரணத்தில் வணங்குகின்றார்கள். ஆழ்வார்பக்ஷத்தில், ச்ருதி என்பதற்குக் காது என்று பொருள். ஆழ்வாருடைய மண்டலமாவது திருவழுதிவளநாடு; அல்லது திருக்குருகூர். அந்தத் திருநாமம் யாராவது சொல்லக் காதில் விழுந்தவாறே *விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா:* என்னப்பட்ட பாகவதர்களனைவரும் கைகூப்பி வணங்குவர்களிறே. ஆக இவ்வகைகளால் பாஸ்கரனென்னத்தக்க ஆழ்வாரை வணங்குவோமென்றதாயிற்று. .... .... .... (4)

பத்யுச் ச்ரிய: ப்ரஸாதேந ப்ராப்தஸார்வஜ்ஞ்யஸம்பதம்,
ப்ரபந்நஜநகூடஸ்தம் ப்ரபத்யே ஸ்ரீபராங்குசம். 5

ச்ரிய: பத்யு: ப்ரஸாதேந ப்ராப்த ஸார்வஜ்ஞ்ய ஸம்பதம் ப்ரபந்ந ஜந கூடஸ்தம் ஸ்ரீபராங்குசம் ப்ரபத்யே.

திருமால் திருவருளால் ஸர்வஜ்ஞத்வமாகிற ஸம்பத்தைப் பெற்றவரும் ப்ரபந்ந ஜனங்களுக்குத் தலைவருமான நம்மாழ்வாரைத் தஞ்சமாகப் பற்றுகிறேன்.

*மயர்வற மதிநல மருளினன் யவனவன்* என்று தம் திருவாக்காலே தாமேயருளிச் செய்யலாம்படி திருமாலருளால் ஸர்வஜ்ஞத்வம் பெற்று அதனுல் ப்ரபந்நஜந கூடஸ்தரான நம்மாழ்வாரைப் பணிகின்றேனென்கை. ''விப்ரர்க்கு கோத்ரசரண ஸூத்ரகூடஸ்தர் பராசர பாராசர்ய போதாயநாதிகள்; ப்ரபந்நஜந கூடஸ்தர் பராங்குச பரகால யதிவராதிகள்'' என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணை இங்கு அநுஸந்தேயம். .... .... .... .... .... (5)

சடகோபமுநிம் வந்தே சடாநாம் புத்திதூஷகம்,
அஜ்ஞாநாம் ஜ்ஞாநஜநகம் திந்த்ரிணீ மூலஸம்ச்ரயம். 6

சடாநாம் புத்திதூஷகம் அஜ்ஞாநாம் ஜ்ஞாநஜநகம் திந்த்ரிணீ மூல ஸம்ச்ரயம் சடகோபமுநிம் வந்தே.

குடிலபுத்திகளுடைய துர்ப்புத்தியைத் தொலைப்பவரும் அறிவில்லாதவர்களுக்கு நல்லறிவை நல்குமவரும் திருப்புளியாழ்வாரடியிலே வீற்றிருப்பவருமான நம்மாழ்வாரை வணங்குகின்றேன்.

* * * தீமனத்தவர்களுடைய தீமனத்தைக் கெடுத்து, அறிவிலிகளுக்கு மருவித்தொழும் மனமேதந்து திருப்புளியாழ்வாரடியில் வாழ்ச்சியையே தமக்கு நிரூபகமாகக் கொண்ட ஆழ்வாரைத் தொழுகிறேனென்கை. .... .... (6)

வகுலாபரணம் வந்தே ஜகதாபரணம் முநிம்,
யச் ச்ருதேருத்தரம் பாகம் சக்ரே த்ராவிடபாஷயா. 7

ய: ச்ருதே: உத்தரம் பாகம் த்ராவிட பாஷயா சக்ரே, (தம்) ஜகதாபரணம் வகுலாபரணம் முநிம் வந்தே.

யாவரொரு ஆழ்வார் வேதத்தின் உத்தரகாண்டமாகிய உபநிஷத்தைத் தமிழ்மொழியினுல் வெளியிட்டருளினரோ, உலகுக்கெல்லாம் அலங்காரபூதரான அந்த நம்மாழ்வாரை வணங்குகின்றேன். .... (8)

இந்த பராங்குசாஷ்டகத்தில் எட்டாவது ச்லோகமாக *நமஜ்ஜநஸ்ய* என்கிற ச்லோகம் அநுஸந்திக்கப்பட்டுவருகிறது; அது நக்ஷத்ரமாலிகையில் ஒன்பதாவது ச்லோகமாதலால் இதற்கடுத்தபடியாகவுள்ள அந்தஸ்தோத்ரத்தினுரையில் அதற்குப் பொருள் கண்டு கொள்வது. அந்தச்லோகம் வருமாறு:—

நமஜ்ஜநஸ்ய சித்த பித்தி பக்திசித்ரதூலிகா
பவாஹிவீர்ய பஞ்ஜநே நரேந்த்ரமந்த்ரயந்த்ரணா,
ப்ரபந்நலோககைரவப்ரஸந்நசாருசந்த்ரிகா
சடாரிஹஸ்தமுத்ரிகா ஹடாத் துநோது மே தம:.

இந்த ச்லோகத்திற்கு முன்னே,

வகுளாலங்க்ருதம் ஸ்ரீமத் சடகோப பதத்வயம்,
அஸ்மத்குலதநம் போக்யம் அஸ்து மே மூர்த்நி பூஷணம்.

என்கிற ச்லோகம் சிலரால் அநுஸந்திக்கப்படுவதுண்டு. அதன் பொருளாவது—மகிழ மலர்களினால் அலங்கரிக்கப்பட்டதும் எமது குலச்செல்வமும் பரமபோக்யமுமான ஆழ்வார் திருவடியிணையானது என்சென்னிக்கு அலங்காரமாயிடுக-என்று.

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய

ஸ்ரீ பராங்குசாஷ்டகவுரை

முற்றிற்று.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

மணவாளமாமுனிகளின் பூர்வாச்ரமத் திருப்பேரனாராய்
ஆசார்ய பௌத்ரரென்றே ப்ரஸித்திபெற்ற
ஜீயர் நாயனார் அருளிச்செய்த
நம்மாழ்வார் விஷயமான ஸ்துதி.

# 2, நக்ஷத்ரமாலிகை.

(உரையாசிரியர்—ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர்.)

அவதாரிகை.

நம்மாழ்வார் விஷயமாகத் திருவவதரித்த இந்த ஸ்துதியானது ஸம்ஸ்க்ருத வாங்மயத்தில் நிகரற்று விளங்குமது. சப்தபுஷ்டியாலும் அர்த்த புஷ்டியாலும் இப்ரபந்தத்திற்கு இப்பிரபந்தமே ஒப்பானது என்னலாம். முத்ராலங்காரரீதியில் ச்லோகந்தோறும் இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் வரிசையாக அமைத்திருப்பதனால் இது நக்ஷத்ரமாலிகை யென்று திருநாமம் சாத்தப்பெற்றது.

இந்த ஸ்தோத்ரம் அக்ஷராந்தாதியாக அமைந்ததென்று அறியத்தக்கது.

அதாவது, முன்னின்ற ச்லோகத்தின் முடிந்த அக்ஷரமே அடுத்துவரும் ச்லோகத்தின் முதலக்ஷரமாக வைத்து இயற்றப்பட்டதென்கை. இது தவிர மிகச்சிறந்த மற்றோரதிசயமும் இதுதன்னிலுண்டு; அதாவது—மாலையைத் தொடுக்குமவர்கள் சிறிய அளவில் தொடங்கி மேன்மேல் க்ரமேண பெருக்கடித்துக்கொண்டுபோய் நடுப்பாதியில் மிகப்பெரிய அளவாகக் காட்டி அங்கிருந்து படிப்படியாகச் சிறுக்கிக் கொண்டுபோவர்களன்றோ. அதுவேபோல் இந்தமாலிகையானது முதலில் எட்டெழுத்துள்ள பாதங்கொண்ட அநுஷ்டுப்பில் ஆரம்பிக்கப்பட்டு, பதின்மூன்றுவது ச்லோகமளவும் க்ரமேண ஒவ்வோரெழுத்தாக ஏற்றிக்கொண்டுபோய்,

| | |
|---|---|
| ச்லோகம். | 1. 2. 3. 4. 5. 6. 7. 8. 9. 10. 11. 12. 13. |
| பாதாக்ஷரம். | 8. 9. 10. 11. 12. 13. 14. 15. 16. 17. 18. 19. 20. |

இப்படி பதின்மூன்று ச்லோகங்களை க்ரமேண அபிவ்ருத்தமாக்கிக்கொண்டுபோய் நன்னடுவிலுள்ளதான பதினான்காவது ச்லோக மொன்றைமாத்திரம் இருபத்தோ ரெழுத்துக்கள் கொண்ட பாதமுடைய [ஸ்ரக்தரா] வ்ருத்தத்திலமைத்து, அடுத்த பதி னைந்தாவதுச்லோகம் முதல்-

| | |
|---|---|
| ச்லோகம். | 15. 16. 17. 18. 19. 20. 21. 22. 23. 24. 25. 26. 27. |
| பாதாக்ஷரம். | 20. 19. 18. 17. 16. 15. 14. 13. 12. 11. 10. 9. 8. |

இப்படி பதின்மூன்று ச்லோகங்களை அடைவே சிறுக்கடித்துக் கொண்டுபோய் ஒழுங் குபட முடித்திருக்கு மழகு மிக வியக்கத்தக்கது. மாலிகைக்கு நடுநாயகமாயிருக்கின்ற பதினான்காவது ச்லோகத்தைத் தனிப்படவைத்து மற்றச்லோகங்களை இரண்டுதண் டையாகக் கையிலெடுத்துப்பார்த்தால் அளவு சிறிதும் ஏற்றத்தாழ்வுறாமல் மிக வொத்திருக்கும். இரண்டு தண்டைகளாகச் சேர்க்கிறபோது முதல் ச்லோகமும் (27ஆம்)முடிவு ச்லோகமும் ஒன்றுசேருமாதலால் அவையிரண்டும் ஒரேயளவான வ்ருத்தமாயிருக்கும். இரண்டாவது ச்லோகமும் இருபத்தாறுவது ச்லோகமும் ஒன்று சேருமாதலால் அவையிரண்டும் ஒரேயளவான வ்ருத்தமாயிருக்கும். மூன்றும் ச்லோக மும் இருபத்தைந்தாம் ச்லோகமும் ஒன்று சேருமாதலால் அவையிரண்டும் ஒரேயள வான வ்ருத்தமாயிருக்கும். ............... பதின்மூன்றும் ச்லோகமும் பதினைந்தாம் ச்லோகமும் ஒன்று சேருமாதலால் அவையிரண்டும் ஒரேயளவான வ்ருத்தமாயிருக் கும் என்கிற இந்த வைலக்ஷண்யத்தை ரஸிகர்கள் கண்டு களிப்பது.

இந்தஸ்துதியின் பெருமைக்கீடாக மிகவிரிவான வியாக்கியான மொன்று இயற்றித் தெலுங்கு லிபியில் முப்பத்தைந்தாண்டுகட்கு முன் வெளியிட்டுள்ளோம். இப்போது ஸம்க்ஷிப்தமானவுரை இயற்றப்படுகிறது. .... .... (*)

இந்நூலின் தனியன்

**அஸ்மாஸு வத்ஸலதயா க்ருபயா ச பூயஸ்**
**ஸ்வேச்சாவதீர்ணமிவ ஸௌம்யவரம் முநீந்த்ரம்,**
**ஆசார்யபௌத்ரமபிராமவரர்பிதா நம்**
**அஸ்மத்குரும் பரமகாருணிகம் நமாமி.**

கருத்து:--நம்மிடத்தில் வாத்ஸல்யத்தினாலும் பரம க்ருபையினாலும் மணவாள மாமுனிகள் தாமே மீண்டும் நித்யவிபூதியில் நின்றும் இந்த லீலாவிபூதியிலே தம் திரு வுள்ள மடியாக வந்து அவதரித்தருளினரோ வென்று சங்கிக்கவேண்டும்படி அவர் தம்மோடொத்த ஜ்ஞாநாநுஷ்டானங்களையுடையராய் அவருடைய திருப்பேரனா ராய்ப் பரமகாருணிகராய் அஸ்மதாசார்யரான அபிராமவராசார்யரென்று வட மொழியிலும் ஜீயர்நாயனாரென்று தென்மொழியிலும் வழங்கப்பெற்ற ஆசிரியரை வணங்குகின்றே னென்கை. .... .... .... .... (*)

தனியன் உரை முற்றிற்று.

---

## க்ரந்தாரம்பம்.

**ஸ்ரீமாந் பராங்குசமுநிர் ஜீயாத் யத்ஜ்ஞாநமுத்ரயா,**
**நேந்த்ரியாச்வயுஜோ ந்ருணும் நித்யம் விஷயவீதய: (1)**

### பதவுரை.

யத்ஜ்ஞான முத்ரயா விஷயவீதய: ந்ருணும் இந்த்ரிய அச்வ யுஜ: ந (பவந்தி) (ஸ:) ஸ்ரீமாந் பராங்குச முநி: ஜீயாத்.

யாவரொரு நம்மாழ்வாருடைய ஞான முத்திரையி ஞல் விஷயாந்தரக்ராமங்களானவை மனிதர்களி னுடைய இந்திரியங்களாகிற குதிரைகளின் சேர்க்கை யைப் பெறுகின்றன வில்லையோ அப்படிப்பட்ட பெருமைவாய்ந்த ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ மலிந்த நம்மாழ் வார் வாழ்ந்திடுக.

நம்மாழ்வாருடைய ஞானமுத்திரையை ஸேவிக்கும் மனிசருடைய இந்திரியங் களாகிற குதிரைகள் ஒருகாலும் சப்தாதிவிஷய வீதிகளிற் செல்லமாட்டா; ஞானம் திருந்தி அந்த ஞானமுத்திரையையே கண்ணுரக்கண்டுகொண்டு களித்திருப் பர்களென்றபடி. இப்படி தம்முடைய திருஞானமுத்திரையினுல் ஸம்ஸாரிகளையு மீடுபடுத்த வல்லவரான ஆழ்வார் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்தருள வேண்டு மென்று மங்களாசாஸநம் செய்தாராயிற்று.

மூன்ருவது பாதத்தில் அச்விநீநக்ஷத்ரம் முத்ராலங்காரரீதியில் ஸூசிதமா யிற்று. ஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை:'' என்பர் ஆலங்காரிகர்கள். அச்வயுங் நக்ஷத்ரமென்று வேதவழக்காதலால் அங்ஙனே ப்ரயோகிக்கப்பட்ட தென்க. .... .... .... .... (1)

**யதுரஸி பரணீயா ஸ்ரக் விகஸிதவகுலாநந்தா.**
**ஸ ஜயதி மஹிமா நாதோ முரரிபுபதஸக்தோ ந:. (2)**

யத் உரஸி பரணீயா ஸ்ரக் விகஸித வகுள ஆநந்தா, ஸ: முரரிபு பத ஸக்த: மஹிமா ந: நாத: ஜயதி.

யாவரொரு நம்மாழ்வாருடைய திருமார்பிலே அணி ந்து கொள்ளத் தக்கதான மாலையானது மலர்ந்த மகிழம்பூக்களினுல் கட்டப்பட்டதோ, அப்படிப்பட்ட வராய், எம்பெருமான் திருவடிகளில் ப்ராவண்ய முடையராய் மஹிமைதானே வடிவெடுத்தவராய் ப்ரபந்நஜனகூடஸ்தரான நம்மாழ்வார் ஸர்வோத் கர்ஷசாலியாக வாழ்கின்ருர்.

ஆழ்வார் தமது திருமார்பில் மகிழமாலையையணிந்துகொண்டு பகவத் பக் தாக்ரேஸரராய் ப்ரபந்நஜநகூடஸ்தராய் விளங்காநின்ருரென்றதாயிற்று. ''மஹி மவாந்'' என்று கூறவேண்டு மிடத்து மஹிமா என்றே கூறினது *தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத்* என்ற ப்ரஹ்மஸூத்ரக் கட்டளையிலே நிர்வஹிக்கத்தக்கது. இதில் முதல்பாதத்திலே பரணீ நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... (2)

**நந்தா நந்தாங்க்ரி நலிநயுக்மே கர்த்தா லோகார்த்தி கபலநாநாம்**
**பத்ராய த்ராவிடநிகமாநாம் த்ரஷ்டா புஷ்டாய வகுலப்ருத் ஸ்யாத். 3**

அநந்த அங்க்ரி நளிநயுக்மே நந்தா, லோக ஆர்த்தி கபளநாநாம் கர்த்தா, த்ராவிட நிகமாநாம் த்ரஷ்டா வகுள ப்ருத் புஷ்டாய பத்ராய ஸ்யாத்.

எம்பெருமானுடைய திருவடித் தாமரையிணையில் வணங்குவதே தொழிலாயிருப்பவரும் உலகத்தவர் களின் ஆர்த்திகளை யெல்லாம் கபளீகரிப்பவரும் தமிழ் வேதமாகிய திவ்யப் பிரபந்தங்களை ஸாக்ஷாத் கரித்தவரும் மகிழ்மாலை மார்பினருமான நம்மாழ் வார் நமக்கு மிகுந்த மங்களங்களை யளிப்பவராக ஆகவேணும்.

* துயரறு சுடரடி தொழுதெழென்மனனே * யென்று எம்பெருமானுடைய திருவடிகளையே தொழுமியல்வினராய் நம்போல்வாருடைய துயரங்களைத் தொலைத் தருள்பவராய், * நாதனுக்கு நாலாயிரமுரைத்தான் வாழியே * என்கிறபடியே தமிழ்மறைகளாகிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களையும் தாம் ஸாக்ஷாத்கரித்து வெளியிட்டருளினவரான நம்மாழ்வார் நமக்கு மிகுந்த நன்மைகளையளித்தருள வேணுமென்றதாயிற்று.

இதில் இரண்டாவது பாதத்தில் கார்த்திக மென்று நக்ஷத்ரஸூசநம். ''த்ராவிட நிகமாநாம் த்ரஷ்டா, புஷ்டாய பத்ராய ஸ்யாத்'' என்று அந்வயம். (3)

**ஸ்யாதேவ ஸா மே பணிதிச் சடாரேர்ஃ**
**யயோதிதோச்சைஸ் ஸரணிர் ஜநாநாம்,**
**ஆரோஹிணீ நாப்யவரோஹிணீ ஹி**
**வேதோதிதா து த்வயமப்யுபைதி.** 4

யயா உதிதா உச்சைஸ்ஸரணிஃ ஜநாநாம் ஆரோஹிணீ, அவரோஹிணீ அபி ந-வேதோதிதா ஸரணிஸ் து த்வயம் அப்யுபைதி ; சடாரேஃ ஸா பணிதிஃ ஏவ மே ஸ்யாத்.

யாதொரு நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தியினால் தெரிவிக்கப்பட்ட உயர்ந்த மார்க்கமானது நம்போன்ற ப்ரபந்ந ஜனங்களுக்கு உயர ஏற்றுமதுவேயன்றி கீழே யிறக்குமதாகவுமல்லாததோ ; வடமொழி வேதத்தினால் தெரிவிக்கப்பட்ட வழியோ வென்னில் ; உயர் கதியில் சேர்ப்பதும் அதோகதியில் தள்ளுவதுமான இரண்டு படியையும் ஏற்கின்றதன்றோ; (அப்படியன்றிக்கே உயர்கதிக்கே ஸாதநமாகின்ற) நம்மாழ்வாருடைய அவ்வருளிச் செயலே எனக்கு வாசோவிதேயமாகக் கடவது.

வேதத்திற்காட்டிலும் ஆழ்வாரருளிச் செயல்களுக்குண்டான ஏற்றத்தை இந்த ச்லோகத்தாலும் மேல் ச்லோகத்தாலுமருளிச்செய்கிறார். ''த்ரைகுண்ய விஷயா வேதாஃ'' என்று கீதையிற் சொன்னபடி முக்குணங்கட்கும் வசப்பட்ட மனிசரை நோக்கியவதரித்த வடமொழி வேதமானது அதிகாராநுகுணமாக முக்திஸாதநங்களையும் ஒருங்கே காட்டியிருக்கையாலே முமுக்ஷு புபுக்ஷு ஸாதாரணமாயிருக்கும்; அருளிச்செயல் அங்ஙனன்றிக்கே மோக்ஷைகஹேதுவான ஸாரதமசாஸ்த்ரமாகையாலே முமுக்ஷுக்களான உத்தமாதிகாரிகளுக்கே உபஜீவ்யமாயிருக்கும் என்றதாயிற்று. இதில் மூன்றாவது பாதத்தில் ரோஹிணீ நக்ஷத்ரம் ஸூசிதம். ... (4)

**திலகமாஹ ந காசிதபி ச்ருதௌ த்ரிஜகதாம்ருகசீர்ஷஸமுத்திதா,**
**ஸ்புடதரம் வகுளாபரணீயவாக் புருஷமாதிமசேஷபதைரபி.** 5

ச்ருதௌ அசீர்ஷ ஸமுத்திதா காசித் அபி ருக் த்ரிஜகதாம் திலகம் ந ஆஹ; வகுளாபரணீய வாக் அசேஷபதைஃ அபி ஆதிம் புருஷம் ஸ்புடதரம் ஆஹ

வேதந்தன்னில் தலையான வேதாந்தத்திலுள்ளதன்றிக்கே கர்மகாண்டத்திலுள்ளதான ஒரு வாக்யமும் மூவுலகுக்கும் திலக பூதனான எம்பெருமானைச் சொல்லிற்றில்லை; நம்மாழ்வாரருளிச் செயலோ வென்னில் எல்லாப்பதங்களினாலும் ஆதிபுருஷனான எம்பெருமானையே மிகவிளக்கமாகத் தெரிவிக்கிறது.

***ஆழ்வார் திருவிருத்தத்தில் "திருமாலவன்கவி யாது கற்றேன்'' என்று ப்ரதிஜ்ஞை செய்தபடியே *மாற்றங்கள் ஆய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல்* என்றும்* உரியசொல்லாலிசை மாலைகளேத்தியுள்ளப் பெற்றேற்கு* என்றும் எம்பெருமானையே விஷயமாகக்கொண்டு அமைத்தருளின அருளிச்செயலின் பெருமை வடமொழி வேதத்திற்கு எங்ஙனே பொருந்தும்? அம்மறையானது கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் பாகுபாடுற்று ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத்பாகத்தினுல் மாத்திரமே பகவத் ஸ்வரூபரூபகுணவிபூதிகளை ப்ரதிபாதிக்கின்றதேயன்றி கர்மகாண்டத்தினுல் அவற்றை ப்ரதிபாதிக்க வில்லையன்றோ. அருளிச்செயல் அங்ஙனன்றிக்கே ஸகலபதங்களாலும் ஸாக்ஷாத்தாகவும் ஸுஸ்பஷ்டமாகவும் எம்பெருமானையே ப்ரதிபாதிக்கையாகிற ஏற்றம் பெற்றது என்றாராயிற்று.

*வேதைச் ச ஸர்வைரஹமேவ வேத்ய: *என்கிற பகவதுக்தியோடும் *வேத்யோ வேதைச் ச ஸர்வைரஹமிதி பகவந்! ஸ்வேந ச வ்யாசகர்த்த* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியோடும் முரண்பாடு சங்கியாமைக்காக ஸ்புடதரம் என்றிட்டபடி.

இதில் இரண்டாவது பாதத்தில் ம்ருகசீர்ஷ நக்ஷத்ரம் ஸூசிதம். ''அசீர்ஷஸமுத்பவா'' என்றும் பாடமுண்டு; பொருள் ஒன்றே. சீர்ஷம்—தலை : வேதத்தின் தலையென்று வேதாந்தத்தைச் சொன்னபடி. "ச்ருதி சிரஸி'' என்றாரிறே ஸ்வாமி தாமும். .... .... .... (5)

**பித்ராதிஸ் ஸகலவிதோபி பந்துவர்க்கோ**
**யஸ்யாஸீத் ஸரஸிஜவாஸிநீஸஹாய:,**
**ஆவிஸ்ஸ்யுர் கநகருணரஸாவஸேகை**
**ரார்த்ராமே வகுலப்ருத: கடாக்ஷபாதா:.** 6

| | |
|---|---|
| யஸ்ய பித்ராதிஃ ஸகல விதஃ அபி பந்துவர்க்கஃ ஸரஸிஜ வாஸிநீ ஸஹாயஂ ஆஸீத், (தஸ்ய) வகுலப்ருதஃ கந கருணரஸ அவஸேகைஃ ஆர்த்ரா கடாக்ஷ பாதாஃ மே ஆவிஸ்ஸ்யுஃ. | யாவரொரு நம்மாழ்வார்க்குத் தந்தை தாய் முதலான ஸகலவிதமான பந்துவர்க்கமும் திருமகள் கொழுநனன எம்பெருமானே ஆயினனே, அந்த நம்மாழ்வாருடைய இடையறாத கருணரஸப் பெருக்கினல் குளிர்ந்த திருக்கண்ணோக்கங்களானவை என் பொருட்டு ஆகவேணும். [அவ்வாழ்வார் என்னையே குளிரக்கடாக்ஷித்தருளவேணு மென்றபடி] |

* * * சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையுமவரேயினியாவாரே* என்று எம்பெருமானையே ஸகலவிதபந்துவுமாகக் கொண்ட ஆழ்வாருடைய அருள்வெள்ளம் ததும்பிய திருக்கண்ணோக்கங்கள் அடியேன்பால் பெருகவேணுமென்று வேண்டினராயிற்று. இதில் நான்காவது பாதத்தில் ஆர்த்ரா நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... (6)

**தாமாச்ரயாமி கருணம் வகுலாபிராமாம்**
**யாஸௌ புநர்வஸுமதீவலயேவதீர்ண,**
**ப்ரஜ்ஞாத்ருசோந்மிஷிதயா ப்ரதிதாநுபாவா**
**ஜ்யோதி: பரம் யதநிதம் ததிதம் சகார.** 7

யா அஸௌ வஸுமதீ வலயே புந:அவதீர்ணு ஸதீ ப்ரதித அநுபாவா உந்மிஷிதயா ப்ரஜ்ஞாத்ருசா யத் அநிதம் பரம் ஜ்யோதி: தத் இதம் சகார, தாம் வகுல அபிராமாம் கருணும் ஆச்ரயாமி.

(நம்மாழ்வாரென்கிற) யாதொரு கருணாமூர்த்தி யானது பூ மண்டலத்தில் திருவவதரித்ததாகி எங்கும் ப்ரஸித்தி பெற்ற பெருமையையுடைய நன்ருக மலர்ந்த ஞானக்கண்ணினுல் ஒருவர் கண்ணுக்கு மெட்டாமலிருந்ததொரு பரஞ்சோதியை ஸாக்ஷாத்கரித்ததோ, மகிழ்மாலையினுல் அழகு பெற்ற அந்த கருணா மூர்த்தியைப் பணிகின்றேன்.

* * * அருள்கொண்டாடு மடியவரின்புற, அருளினன் அவ்வருமறையின் பொருள், அருள்கொண்டாயிரமின் தமிழ் பாடினனருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே* என்ற மதுரகவியார் பாசுரத்தையுட்கொண்டு ஆழ்வார் அருளே வடிவெடுத்தவரென்கிருரிதில். 'கருணுவந்தம்' என்ருே 'கருணுசாலிநம்' என்ருே கூருமல் கருணும் என்றே ஆழ்வாரைக் கூறினது, அவருடைய கருணை அப்ரமேயமென்று காட்டினபடி. இப்படி பரமகாருணிகரான ஆழ்வார் இவ்விருள் தருமாஞாலத்தில் அவதரித்து, *என்றேனும் கட்கண்ணல்காணுதவவ்வுருவை நெஞ்சென்னுமுட்கண்ணேல் காணுமுணர்ந்து* (பெரியதிருவந்தாதி) என்று தாமேயருளிச் செய்தபடி உட்கண்ணினுல் பரஞ்சுடரான பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தபடியினுலே இவரே நமக்கு ஆச்ரயணீயர் என்ருராயிற்று. "யத் பரம் ஜ்யோதி: அநிதம் தத் யா கருணா இதம் சகார, தாம் ஆச்ரயாமி'' என்று அந்வயமாகக் கடவது. ''இதம: ப்ரத்யக்ஷ கதம் ஸமீபதரவர்த்திச ஏததோ ரூபம், அதஸஸ்து விப்ரக்ருஷ்டம் ததிதி பரோக்ஷே விஜாநீயாத்.'' என்பது சாஸ்த்ரஜ்ஞஸமயமாதலால் இதம் என்று ப்ரத்யக்ஷவிஷயமானதைச் சொல்லுகிறது; அநிதம் என்று பரோக்ஷமானதைச் சொல்லுகிறது. *கண்காணநிற்கில் ஆணையிட்டு விலக்குவர்களென்று கண்ணுக்குத் தோற்ருதபடி நிற்கும் பரஞ்சோதியைக் கண்ணாரக்கண்டுகளித்தவரிறே ஆழ்வார். இதில் இரண்டாவது பாதத்தில் புநர்வஸு நக்ஷத்ரம் ஸூசிதம். (7)

.... .... ....

ரசிதவதி ரமாயா நாயகஸ்யாங்க்ரிபுஷ்யத்
ப்ரணயரஸஸுதாப்திஸ்ரோதஸி ஸ்வைரகாஹம்,
ப்ரபவதி கலிகர்மப்ராவ்ருஷேண்யாம்புவாஹே 8
வகுலதரமுநீந்த்ரே தாபவார்த்தா கதம் ந:!

ரமாயா: நாயகஸ்ய அங்க்ரி புஷ்யத் ப்ரணயரஸ ஸுதாப்தி ஸ்ரோதஸி ஸ்வைர காஹம் ரசிதவதி கலிகர்ம ப்ராவ்ருஷேண்ய அம்புவாஹே வகுல தர முநீந்த்ரே ப்ரபவதி ஸதி ந: தாப வார்த்தா கதம்?

திருமகள் கொழுநனன எம்பெருமானுடைய திருவடிகளில் வளர்கின்ற அன்பாகிற அமுத வெள்ளத்திலே யதேஷ்டமான அவகாஹநத்தைச் செய்து கலிஸந்தாபத்தைப் போக்கவல்ல கார்முகிலாய் இராநின்ற நம்மாழ்வார் நமக்கு இறைவராயிருக்கும்போது நமக்குத் தாபமென்கிற பேச்சுக்கு இடமுண்டோ?

* கண்டவாற்ருல் தனதேயுலகென நின்ருன்தன்னை வண்டமிழ்நூற்கநோற்றேன் அடியார்க்கின்பமாரியே* என்று தாமேயருளிச்செய்யலாம்படி கார்காலத்தெழுகின்ற கார்முகிலாயிருப்பவர் ஆழ்வார். உலகில் மேகமானது கடலிலேபுக்கு நீரை முகந்துகொண்டு வருவதாகச் சொல்லப்படுகிறது; "ஆழியுட்புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி" என்ருள் ஆண்டாளும். ஆழ்வாராகிற இக்காளமேகம் எந்தக்கடலிலே அவகாஹித்ததென்னில்; [ரமாயா: நாயகஸ்ய அங்க்ரிபுஷ்யத் ப்ரணயரஸஸுதாப்தி ஸ்ரோதஸி ஸ்வைரகாஹம் ரசிதவதி] * காதல் கடல் புரையவிளைவித்த காரமர்மேனி* என்றும் *காதல் கடலில் மிகப்பெரிதால்* என்றும் தாமே யருளிச்செய்தபடி திருமால் விஷயமான காதல் ஒரு கடல் போன்றதாயிற்று; அதில் யதேஷ்டமாக அவகாஹிக்கப் பெற்றதுஇக்காளமேகம், உப்புக்கடலிலேபடியும் மேகம்போலன்றிக்கே அமுதக்கடலிலே

படிந்த மேகமென்கிறது ஸுதாப்திஸ்ரோதஸி என்பதனுல். * பக்தி: ச்ருங்காரவ்ருத்த்யா பரிணமதி * என்கிறபடியே ஆழ்வாருடைய பக்தியானது நாயகீஸமாதியாலே அநுபவிக்கவும் அமைந்ததனுல் ''ப்ரணயரஸஸுதாப்தி'' என்றது. உலகில் காளமேகம் சரீரத்தில் தோன்றும் ஸாதாரணதாபத்தையே போக்கவல்லது; ஆழ்வாராகிற காளமேகம் கலிஸந்தாபத்தையும் போக்கவல்லது என்று வாசிதோற்றப்பேசுகிருர் [கலிகர்மப்ராவ்ருஷேண்யாம்புவாஹே] என்று. வர்ஷாகாலத்தில் தோன்றுமது ப்ராவ்ருஷேண்யமெனப்படும். இப்படிப்பட்ட ஆழ்வாருடைய நிழலிலே வர்த்திக்கும் நமக்கு ஒரு நாளும் தாபமில்லை யென்ருராயிற்று. இந்த ச்லோகத்தில் முதல்பாதத்தில் புஷ்ய நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... .... .... (8)

நமஜ்ஜநஸ்ய சித்தபித்திபக்திசித்ரதூலிகா
பவாஹிவீர்யபஞ்ஜநே நரேந்த்ரமந்த்ரயந்த்ரணு,
ப்ரபந்நலோககைரவப்ரஸந்நசாருசந்த்ரிகா
சடாரிஹஸ்தமுத்ரிகா ஹடாத் துநோது மே தம:. 9

| | |
|---|---|
| நமத் ஜநஸ்ய சித்த பித்தி பக்தி சித்ர தூலிகா, பவஅஹி வீர்ய பஞ்ஜநே நரேந்த்ர மந்த்ர யந்த்ரணு, ப்ரபந்ந லோக கைரவ ப்ரஸந்நசாரு சந்த்ரிகா, சடாரி ஹஸ்த முத்ரிகா மே தம: ஹடாத் துநோது. | தம்மை வணங்குமவர்களுடைய ஹ்ருதயமாகிற சுவரிலே பக்தியாகிற சித்திரத்தை யெழுதுங் கருவியாயும், ஸம்ஸாரமாகிற ஸர்ப்பத்தினுடைய வீரியத்தைத் தணிக்கும் விஷயத்தில் விஷவைத்யனுடைய மந்த்ரப்ரயோகச் சிடிகை போன்றதாயும், ப்ரபந்நஜநங்களாகிற ஆம்பல் மலர்களை விகஸிப்பிக்கவல்ல அழகிய நிலாப்போன்றதாயுமிருக்கிற நம்மாழ்வாருடைய திருக்கைத்தலமுத்திரையானது என்னுடைய அகவிருளை எப்படியாவது தொலைத்தருளவேணும். |

ஆழ்வாருடய ஸ்ரீ ஹஸ்தமுத்ரையை வருணிப்பது இந்த ச்லோகம். அடியார்களின் நெஞ்சாகிற சுவரிலே பகவத்பக்தியாகிற ஓவியத்தை யெழுதும் கருவியோ இது! என்னலாயிருந்தது. ஆழ்வார் * ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாது வாகையால் அந்த ஸம்ஸார ஸர்ப்பத்தின் வீர்யத்தைத் தொலைக்கவல்ல விஷவைத்ய மந்த்ர ப்ரயோக ப்ரணுளியோ இது என்னலாயிருந்தது; ப்ரபந்நஜநங்களாகிற ஆம்பலோடையை அலர்த்தவல்ல நிலவுதானே இது ! என்னலாயிருந்தது. ஆக, பக்த ஜனங்களின் ஹ்ருதயத்திலே பக்தியை ஊட்டவல்லதாயும் ஸம்ஸாரஸ்ப்ருஹையை அறுக்க வல்லதாயும் ப்ரபந்நர்களைப் பரமானந்த பரவசராக்க வல்லதாயு மிராநின்ற ஆழ்வாருடைய ஸ்ரீ ஹஸ்தமுத்ரையானது நம்முடைய அகவிருளை அகற்றவேணும் என்ருராயிற்று. ஹடாத் என்றதனுல் நமது தமஸ்ஸு போக்கவரிது என்னுமிடம் ஸூசிதம். ''ஹடாத்கரோது'' என்பது சிலருடைய பாடம். [தூலிகா—எழுதுகோல். நரேந்த்ர :—விஷவைத்யன்']

இதில் இரண்டாவது பாதத்தில் ''பவாஹி'' என்றவிடத்தில் அஹி பதத்தினுல் ஆச்ரேஷா நக்ஷத்ரம் ஸூசிதம். ''ஆச்ரேஷா நக்ஷத்ரம் ஸர்ப்பா தேவதா'' என்பது வேத வாக்யம். தேவதையைச் சொல்லும்முகத்தால் நக்ஷத்ரத்தை ஸூசிப்பிக்கிற புடையுமுண்டு. மேலே அநூராதாநக்ஷத்ரத்தையும் அதன் தேவதையைச் சொல்லும் மித்ரசப்தத்தினுல் (ச்லோ. 17ல்) ஸூசிப்பித்திருக்கிறபடியும் இங்கே நினைக்கத் தக்கது. .... .... .... (9)

மநஸ்ஸ்படிகதர்ப்பணப்ரதிபலத்பரப்ரஹ்மண:
ப்ரதர்சநமிவாசரந் ப்ரதிதபோதமுத்ராங்கித:,
ஸதாம் அபயசம்ஸிநா பவபயாபிதப்தாத்மநா-
மகாநி சமயேத நச் சடரிபோரவாம: கர:. 10

மநஸ் ஸ்படிக தர்ப்பண ப்ரதிபலத் பரப்ரஹ்மணः ப்ரதர்சநம் ஆசரந் இவ(ஸ்திதः) ப்ரதித போதமுத்ரா அங்கிதः பவபய அபிதப்த ஆத்மநாம் ஸதாம் அபயசம்ஸிதா சடரிபோः அவரமः கரः நः அகாநி சமயேத.

தமது திருவுள்ளமாகிற ஸ்படிகக்கண்ணுடியிலே ப்ரதிபலித்துத் தோன்றுகிற பரப்ரஹ்மத்தைக் காட்டா நின்றது போலிருப்பதும் புகழ்பெற்ற ஞான முத்திரையினுல் அடையாளம் பெற்றதும் ஸம்ஸார பீதியினுல் தபிக்கின்றநெஞ்சினரான ஸாத்விகர்களுக்கு அபயமளிக்கவல்லதுமான நம்மாழ்வாருடைய வலத்திருக்கையானது நம்முடைய பாவங்களைத் தொலைக்கக் கடவது.

கீழ்ச்லோகத்தில் ஹஸ்தமுத்திரையை வருணித்தார்; இந்தச்லோகத்தில் முத்ராஞ்சிதமான ஸ்ரீஹஸ்தத்தை வருணிக்கிருர். அபயமுத்ரையோடு கூடின திருக்கரமானது ஹ்ருதயத்திற்கு நேராக இருப்பதனுல் ஹ்ருதயமாகிற ஸ்படிகக் கண்ணுடியில் ப்ரதிபலித்துத் தோன்றுநின்ற எம்பெருமானை எடுத்துக் காட்டுகின்றது போலும்! என்னலாம்படியுள்ளது. ஸம்ஸார வெக்காயத்தாலே அஞ்சிக் கிடக்கின்ற பரம ஸாத்விகர்களுக்கு அபயமளிக்கின்ற தென்னலாம்படியுமுள்ளது. அப்படிப்பட்ட ஆழ்வாரது திருக்கைத்தலம் நமது ப்ரபல விரோதிகளான பாபங்களைப் போக்கியருளவேணு மென்றதாயிற்று.

ஆழ்வார் திருக்கரத்திலே அபயமுத்ரையிருந்தாலன்ரே "ஸதாம் அபய சம்ஸிதா" என்னலாம்; "ப்ரதித போத முத்ராங்கித:" என்கிற விசேஷணத்தினுல் ஞான முத்திரை யுள்ளதாகச் சொல்லிவைத்து அபயமுத்ரையின் கார்யத்தை எங்ஙனே கூறலாமென்று சங்கிக்கவேண்டா; ஞானமுத்ரையின் ஸந்நிவேசந்தானே அபயமுத்ரை போலவும் காணக்கூடியதாகையாலே சொல்லக் குறையில்லை.

இதில் நான்காவது பாதத்தில் முதலிரண்டு அக்ஷரங்களினுல் (மகா) நக்ஷத்ரம் ஸூசிதம். நக்ஷத்ரத்தைக் கூறுமடைவில் (மகா) என்று கவர்க்கத்விதீயமாகச் சிலர் மயங்கி இந்தச்லோகத்தில் அவ்வக்ஷரமில்லையேயென்று சங்கிப்பதுண்டு; வேதத்தில் கவர்க்கசதுர்த்தமாகவே நக்ஷத்ரநாமம் பலவிடங்களிலும் ஓதப்பட்டிருப்பதால் அதுவே சுத்தமான சொல்வடிவம்; அதுவேயாயிற்று இங்குமுள்ளது. .... (10)

**ரமயது சடசத்ருரத்யுந்நதாசாரயுக்தைர்ஜநை:**
**அவநதபதபத்மயுக்மோநுகம்பாம்ருதாம்போநிதி:,**
**பஹுவிதக்ருதபூர்வபல்குந்யகாசாரசிந்தாகுலம்**
**ஹ்ருதயம் அஸத்ருசாத்மபாதாரவிந்தாநுஷங்காந் மம. 11**

அத்யுந்நத ஆசார யுக்தைः ஜநைः அவநத பத பத்ம யுக்மः அநுகம்பா அம்ருத அம்போநிதிः சடசத்ருः பஹுவித-க்ருத பூர்வ-பல்குந்யகாசார-சிந்தா ஆகுலம் மம ஹ்ருதயம் அஸத்ருச ஆத்ம பாதாரவிந்த அநுஷங்காத் ரமயது.

மிகச்சிறந்த அனுஷ்ட்டான முள்ள ஸாத்விக ஜநங்களால் வணங்கப்பட்ட திருவடித் தாமரையிணையை யுடையவரும் கருணையாகிற அமுதத் திற்குக் கடலாயிருப்பவருமான நம்மாழ்வார் முற்பிறவிகளிலே செய்த பலவகைப்பட்ட இழிதொழில்களைப் பற்றின கவலையினுல் கலங்கியிருக்கின்ற எனது மனத்தை ஒப்பற்ற தமது திருவடித்தாமரைகளின் ஸம்பந்தத்தினுல் கலக்கம் நீங்கிக் களிக்கச்செய்திடுக.

ஆழ்வார் தமதுதிருவடிஸம்பந்தத்தினுல் என்னுள்ளத்தை உகப்பித்தருளவேணுமென்கிருரிதில். ஆழ்வார் திருவடிஸம்பந்தமடியேனுக்கிருப்பதனுல் மனம் தேறியிருக்கிறேனென்று தெரிவித்தவாறு. ஆழ்வார்தாம் எப்படிப்பட்டவரென்னः பூர்வார்த்தத்திலிரண்டு விசேஷணங்களினுல் அவர்பெருமை சொல்லுகிறது:

[அத்யுந்நதாசாரயுக்தைர் ஜநை: அவநத பதபத்ம யுக்ம:] *அறுதொழிலந்தணர் வணங்குந் தன்மையன் *என்று எம்பெருமானுக்குச் சொல்லும் பெருமை ஆழ்வார்க்கு முண்டு. *மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே* என்று ஸ்ரீமதுரகவிகள் போல்வாரான அந்தணாளர்களிறே திருவடிவாரத்தில் படுகாடு கிடந்தது. [அநுகம்பாம்ருதாம்போநிதி:] *அருள்கண்டீ ரிவ்வுலகினில் மிக்கதே* என்னும்படியாக அருட்கடலானவர். இப்படிப்பட்ட ஆருவார் [மம ஹ்ருதயம் ரமயது.] இப்போது போலவே எஞ்ஞான்றும் என்னுள்ளத்தில் நின்று கூத்தாடவேணுமென்கை. தம்முடைய ஹ்ருதயத்திற்கு விசேஷணமிடுகிருர் [பஹுவித-க்ருதபூர்வ-பல்கு-ந்யகாசார சிந்தாகுலம்] என்று. இப்பிறவியிலும் பலவகையான தீவினைகளைச் செய்து அவற்றின் பயன் என்னுகைப் புகுகிறதோ வென்று தடுமாறிக்கிடக்கின்ற எனது ஹ்ருதயத்திற்கு அஞ்சேலென்று அருள் செய்யவேணு மென்கை. பல்கு என்றது அஸாரம் என்றபடி. ந்யகாசார என்றது-நீச மான நடத்தை யென்றபடி. ''ந்யக் நீச கர்வ ஹ்ரஸ்வாஸ் ஸ்யு:'' என்பது அமரகோசம்.

கலங்கின ஹ்ருதயம் தேறுவதற்கு ஒரு பற்றுசு வேணுமே, அதுதன்னைச் சொல்லுகிருர்[அஸத்ருசாத்ம பாதாரவிந்தாநுஷங்காத்] என்று. தம் திருவடித்தாமரைகளிலே சேரப் பெற்றது என்கிற காரணங் கொண்டு அபயமளிக்கவேணு மென்முராயிற்று. அஸத்ருச என்னும் விசேஷணம் பாதாரவிந்தத்திலும் அந்வயிக்கலாம், அநுஷங்கத்திலும் அந்வயிக்கலாம். கருத்து ஒன்றே. இந்த ச்லோகத்தில் மூன்ருவது பாதத்தில் பூர்வபல்குநீ நக்ஷத்திரஸூசிதம். .... .... .... (11)

**மக்நம் மாநஸ மாஸ்ம பூச் சடரிபோரவ்யாஜஸித்தா தயா**
**நௌகா காசந நாவிகோபி ஸ புநஸ் ஸந்தாரகக்ராமணீ:,**
**ஏதேநோத்தர பல்குநீரஸபரிக்லிஷ்டோபபோகோர்மிகம்**
**துக்காவர்த்ததுரந்தபாரகமநம் ஸம்ஸாரவாராகரம்.**

ஹே மாநஸ மக்நம் மாஸ்ம பூ:, சடரிபோ:
அவ்யாஜ ஸித்தா காசந தயா-நௌகா ;
ஸந்தாரகக்ராமணீ: நாவிக: அபி ஸ: புந:,
பல்கு-நீரஸ-பரிக்லிஷ்ட உபபோக ஊர்
மிகம் து:க்க ஆவர்த்த துரந்த பார கமநம்
ஸம்ஸார வாராகரம் ஏதேந உத்தர.

வாராய் மட நெஞ்சே! (ஸம்ஸாரஸாகரத்தில் ஆழ்ந்து வருந்திக்கிடவாதே; (இதைக் கடப்பதற்கு நல்விரகு சொல்லுகேன் கேளாய்;) நம்மாழ்வாருடைய நிர்ஹேதுகமானதொரு திருவருளானது (பிறவிக்கடலுக்குப்) படகாகும்; அக்கரை சேர்ப்பவர்களில் தலைவராகி அவ்வோடத்தை யோட்டுபவரும் அவ்வாழ்வாரேயாவர்; அற்பங்களாய் சுவையற்றவைகளாய் பலவகை க்லேசங்கள் பொருந்தியவையாயிருக்கிற விஷய போகங்களாகிற அலைகளையுடையதும் பலவகைத் துன்பங்களாகிற சுழிகளையுடையதும் கரையேற முடியாததுமான பிறவியென்னுங்கடலை இவ்வாருவாராகிய நாவிகனைக்கொண்டு கடந்து செல்வாயாக.

கீழ்ச்லோகத்தில் ''சிந்தாகுலம் மம ஹ்ருதயம்'' என்றவர்தாமே தம் ஹ்ருதயத்திற்கு அபயமளிக்கிருர் இந்த ச்லோகத்தில். நெஞ்சே! பிறவிக்கடலுள் நின்று துளங்கும் நமக்கு உய்யவிரகேதென்று தரைப்பட்டுக்கிடவாதே; ஆழ்வாருடைய நிர்ஹேதுகக்ருபையே அந்தக் கடலைக் கடத்தும் தோணியாகும். அந்தத்தோணியை நடத்துபவரும் ஆழ்வாரேயாவர். அவரையே பற்றி ஸம்ஸாரஸாகரத்தை எளிதில் கடந்து பரமானந்தம் பெறுவாயென்று தம்முடைய நெஞ்சுக்கு ஆச்வாஸமருளுகிருர். ஆழ்வார் திருவடிகளைப் பற்றினவர்களுக்கு ஸம்ஸார ஸாகரம் முழந்தாளளவாகுமென்று தெரிவித்தபடி.

இதில் மூன்ருவது பாதத்தில் உத்தரபல்குநீ நக்ஷத்ரம் ஸூசிதம். உத்தர என்பது தனிப்பதமான க்ரியாபதம். பல்கு-நீரஸ-பரிக்லிஷ்டோபபோகோர்மிகம் என்று ஸம்ஸார ஸாகரத்தின் தண்மை சொல்லுகிறது. .... .... (12)

ரத்நதீபிகாயமாநஹஸ்தமுத்ரிகாக்ருதத்ரயீகிரீந்த்ர
கந்தராந்தராலகாடரூடரூடிமந்நிதாநஸூசநேந,
த்ராவிடாகமோபகீதிமூலஸேகசீதவீதநித்ரபத்ர
திவ்யதிந்த்ரிணீஸமீபகேந நாதவாநஹம் பராங்குசேந. 13

ரத்நதீபிகாயமாந ஹஸ்த முத்ரிகா க்ருத த்ரயீ கிரீந்த்ர கந்தர அந்தரால காட ரூட ரூடிமத் நிதாந ஸூசநேந த்ராவிடாகம உபகீதி மூலஸேக சீத வீதநித்ர பத்ர திவ்ய திந்த்ரிணீ ஸமீப கேந பராங்குசேந அஹம் நாதவாந்.

மணிவிளக்குப்போன்ற ஸ்ரீஹஸ்த முத்திரையினுல் வேதங்களாகிற மலைமுழஞ்சுகளினுள்ளே திடமாக அழுந்திக்கிடக்கின்ற பேர்க்கவும் பேராத நிதியை ஸூசிப்பிக்கின்றவரும் வேர்ப்பற்றில் திருவாய்மொழியின் இசைபாடுவதாகிய தீர்த்தாபிஷேகத்தினுல் குளிர்ந்து உறங்காத இலைகளையுடையதான திருப்புளியடியிலே வீற்றிருப்பவருமான நம்மாழ்வாரையே அடியேன் ஸ்வாமியாக வுடையேன்.

ஆழ்வாரே எனக்கு நாதரென்கிருர். பராங்குசேந நாதவாந் என்றது பராங்குசராகிற நாதனையுடையே னென்றபடி, "தாந்யேந தநவாந்" என்றவிடத்திற்போலே அபேதப் பொருளில் வந்த த்ருதீயை யென்றுணர்க. ஆழ்வார் எப்படிப்பட்டவரென்ன, அவர்க்கு இரண்டு விசேஷணங்களிடுகிருர். பூர்வார்த்தம் முழுவதும் ஒரு விசேஷணம்; ஸமஸ்தபதம். ஆழ்வாருடைய திருக்கைத்தல முத்திரையானது ரத்நதீபம் போன்றது; அதுசெய்வதென்னென்னில்; வேதங்களாகிற மலைமுழஞ்சுகளிலே பதிந்துகிடக்கும் நிதியான பரம்பொருளைக் காட்டாநின்றதாம்.

[த்ராவிடாகமோபகீதீத்யாதி.] ஆழ்வார் அவதரித்தவுடனே திருப்புளியாழ்வாரடியிலே போந்து லோகயாத்ரை யொன்றுமறியாமே அங்கேயே வீடு பெறுமளவும் வீற்றிருந்தாராகையாலே 'திவ்ய திந்த்ரிணீஸமீபகேந' என்கிறது. அந்தத் திருப்புளியாழ்வார் எப்படிப்பட்டவரென்னில், உறங்காப்புளி யென்ருெரு ப்ரஸித்தியுண்டே; ஒருபோதும் இலைமூடுவதில்லை யென்பதுபற்றி [வீதநித்ரபத்ர] என்று விசேஷணமிட்டபடி. இன்னமும், தண்ணீர்பாய்ச்சிக் குளிர்ச்சி யுண்டாக்க வேண்டாதே, * தீர்த்தங்களாயிரம் * என்னப்பட்ட திருவாய்மொழியாகிற தீர்த்தம் பாய்ந்தே குளிர்ச்சி பெற்றிருக்கிறபடி. ஆக, இப்பெருமை வாய்ந்த திருப்புளியாழ்வாரடியிலே வீற்றிருக்குமாழ்வாரே அடியேற்கு நாதரென்றதாயிற்று. இந்த ச்லோகத்தில் முதல் பாதத்தில் ஹஸ்தநக்ஷத்ரம் ஸூசிதம். .... .... .... (13)

நத்யா நத்யாககாரீ க்ஷணமபி சிதசித்த்ராயகாமேயகாமே
ச்சந்தச்சந்தஸ்வரூபே மஹஸி கமலயா பாஸமாநே அஸமாநே
ச்ரேய: ச்ரேயஸ்விஸங்கை: பரிசயஸரபி: கைஸராணும் ஸராணும்
பாதாத் பாதாத் பவாப்தௌ சடரிபுரிஹ நோ வீக்ஷணேந க்ஷணேந. 14

சித் அசித் த்ராயக அமேய காமே ச்சந்தஸ்சந்த ஸ்வரூபே கமலயா பாஸமாநே அஸமாநே மஹஸி க்ஷணம் அபி நத்யா: நத்யாககாரீ, ச்ரேயஸ்வி ஸங்கை: ச்ரேய: கைஸராணும் ஸரா

சேதநா சேனங்களை யெல்லாம் ரக்ஷிக்கவல்ல அப்ரமேயமான ஸங்கல்பத்தையுடையதும் வேதங்களின் தாத்பர்யமே வடிவெடுத்ததும் பிராட்டியோடு கூடி விளங்கா நிற்பதும் ஒப்பற்றதுமான (எம்பெருமானென்னுமொரு தேஜோவிசேஷத்திலே இறைப்பொழுதும் நமஸ்காரத்தை விடாமலிருப்பவரும், ச்ரேயஸ்ஸைப் பெற்றுள்ள ஸாத்விகர்களின் திரள்

றும் பரிசய ஸூரபிः சடரிபு க்ஷணேந விக்ஷணேந இஹ நः பவாப்தௌ பாதாத் பாதாத். களினுல் ஆச்ரயிக்கத்தகுந்தவரும் மகிழம்பூ மாலைக ளணிந்து கொண்டிருப்பதனுல் பரிமள ப்ரசுரருமான நம்மாழ்வார் ஒரு நொடிப்பொழுது கடாக்ஷித்தருளி இவ்வுலகிலுள்ள நம்மைப் பிறவிக்கடலில் விழுந்து போவதில் நின்றும் காத்தருளக்கடவர்.

இந்த ச்லோகம் அஷ்டப்ராஸ மென்கிற சப்த சித்ரம் பொலிய அமைந்துள்ளது. ஏகவிதமான ப்ராஸமன்றிக்கே பிந்நபிந்ந ப்ராஸமாக அமைந்திருக்கின்றது. ஒவ்வொரு பாதத்திலும் முதலிலும் முடிவிலும் அது காண்க. சேதநா சேதந ஸம்ரக்ஷண விசக்ஷண ஸங்கல்ப சாலியும் வேத தாத்பர்ய ஸ்வரூபியும் லக்ஷ்மீஸநாதமுமான அப்ரதிம ஜ்யோதிர்மய பரப்ரஹ்மத்தை இடைவீடின்றித் தொழுதுகொண்டிருப்பவரும், ச்ரேயஸ்விகளான பரமைகாந்திகளாலே ஆச்ரயிக்கத் தகுந்தவரும், மகிழ்மாலைகள் மணங்கமழப்பெற்றவருமான ஆழ்வார் ஒருகால் நம்மைக் கடாக்ஷித்தருளி, பிறவிக்கடலில் வீழ்ந்து நாம் துவளாதபடி காத்தருள வேணுமென்றுராயிற்று.

நத்யாககாரீ என்பது ஸமஸ்தபதம். நசப்தேந ஸமாஸ மென்றுணர்க; விடாதவர் என்று பொருள். எதை விடாதவரென்னில்; நத்யா:—இது கர்மணி ஷஷ்டீ. நதியை [அதாவது நமஸ்காரத்தை] என்றபடி. யாரிடத்தில் நமஸ்காரத்தை விடாதவரென்னில் சிதசித் என்று தொடங்கி அது சொல்லுகிறது. எம்பெருமானை மஹஸ்ஸென்கிற சொல்லாலே மறைத்துச் சொல்லி யிருப்பது, * குழுமித் தேவர் குழாங்கள் கை தொழச் சோதி வெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு * என்கிற ஆழ்வாரருளிச் செயலைப்பற்ற. * அப்ரமேயம் ஹி தத் தேஜः * என்றிறே மாரீசனும் சொன்னது. [ச்ரேயஸ்விஸங்கைः ச்ரேயः] ஸ்ரீ மதுரகவிகள் போல்வாரும் ஸ்ரீமந்நாதமுனிகள் போல்வாரும் பணியநின்றவரென்றபடி. ச்ரேய:—ச்ரயிதும் யோக்யः என்கை. ஆச்ரயிக்கத் தகுந்தவரென்றபடி.

கைஸராணும் என்றது தத்திதவ்ருத்தி; கேஸரமென்றும் வகுளமென்றும் பர்யாயம். கேஸரஸம்பந்திகளைக் கைஸரமென்கிறது. பாதாத் பாதாத் என்ற இரண்டில் ஒன்று ஸுபந்தம், ஒன்று திஙந்தம். பாதः—விழுவது; அதில் நின்று மென்றபடி. பாதாத்—பாது என்றபடி. 'பா ரக்ஷணே' என்கிற தாதுவில் லோட் ப்ரதமபுருஷைகவசநம்.

இதில் முதல்பாதத்தில் 'சிதசித்த்ராயக' என்றவிடத்தில் சித்ராநக்ஷத்ரம் ஸூசிதம். இந்த மாலிகா ஸ்துதியில் இந்த ச்லோகம் நடுநாயகமாகையாலே மற்றெல்லா ச்லோகங்களிற் காட்டிலும் இஃதொன்றே அதிகாக்ஷர வ்ருத்தத்தில் அமைக்கப்பட்ட தென்றுணர்க். .... .... .... .... (14)

**நப்ரபத்திவர்த்மந: ப்ரவர்த்தநாபதா நவாஸநாநுஸாரி**
**நவ்யபேதஸர்வதாஜலாசயாந்வயம் கதம் ஸமம் ஸரோஜம்,**
**ஸ்வாதிகாமியோகிப்ருந்தசித்தபத்மபத்தஸௌஹ்ருதாநுரக்த**
**ரூபயோச் சடாரிபாதயோர் யுகேந ஸந்நதார்த்திபஞ்ஜநேந. 15**

ஸந்நத ஆர்த்தி பஞ்ஜநேந ஸ்வ அதிகாமி யோகிப்ருந்த சித்தபத்ம பத்த ஸௌஹ்ருத அநுரக்த ரூபயோः சடாரி பாதயோ: யுகேந நப்ரபத்திவர்த்மநः ப்ரவர்த்தந அபதாந வாஸநா அநுஸாரி நவ்யபேதஸர்வதாஜலாசய அந்வயம் ஸரோஜம் கதம் ஸமம்? அடிபணிந்தாருடைய ஆர்த்திகளையெல்லாம் அகற்றுமதான, தம்மைமிகவும் விரும்புகின்ற யோகிஸமூஹத்தின் ஹ்ருதயபுண்டரீகத்தில் அன்புடையவைகளாய் (அதனுல) மிகச்சிவந்திருக்கின்ற நம்மாழ்வார் திருவடிகளின் இணையோடு, ப்ரபத்திமார்க்கத்தை ப்ரவர்த்திப்பித்தலாகிற சரிதையின் வாஸனையையுமறியாததும் ஜலாசய ஸம்பந்தத்தை ஒருகாலும் விடாமல் எப்போதும் ஜடாசயஸம்பந்தத்தையே கொண்டிருப்பதுமான தாமரைப் பூவானது எப்படி ஒப்புமை பெற்றதாகும்?

இந்த ச்லோகம் முதலாக இருபத்தாறும் ச்லோகமளவும் ஆழ்வாருடைய திவ்யாவயவ ஸௌந்தர்யவர்ணனத்திலே யூன்றிச் செல்லுகிறுர். திருவடி தொடங்கித் திருமுடியீருக வருணிக்கிறுராயிற்று. ஆழ்வாருடைய திருவடிகளோடு தாமரை ஒருபடியாலுமொர்வ்வா தென்கிறுர் இந்த ச்லோகத்தினுல். பூர்வார்த்தத்தில் தாமரைக்கு இரண்டு விசேஷணங்கள்- அவை, ஸாம்யம் அஸம்பாவிதம் என்பதை மூதலிப்பவை. ப்ரபத்திமார்க்க ப்ரவர்த்தந துரந்தரங்களான ஆழ்வார் திருவடிகளோடு அந்த மார்க்கத்தின் வாஸனையே யறியாத தாமரை எப்படி ஸமாநமாகும்? ஜடாசயாந்வயலேசமுமில்லாத ஆழ்வார் திருவடிகளோடு அல்லும் பகலும் ஜடாசயாந்வயமே யுள்ளதான தாமரை எப்படி ஸமாநமாகும் ? இவ்விடத்தில் ச்லேஷ முள்ளது. வடமொழியில் லடயோரபேத:—லகாரத்திற்கும் டகாரத்திற்கும் வாசியில்லையென்பர். இது பெரும்பாலும் ச்லேஷஸ்தலத்திலேயே கார்யகரமாகும். தாமரைப் பக்ஷத்தில் லகாரமாகவும் திருவடி பக்ஷத்தில் டகாரமாகவும் கொள்ளவேணும். தாமரையானது ஜலாசயத்தில் [நீர் நிலையில்] அந்வயம் க்ஷணகாலமு மொழியப் பெறுதது. ஆழ்வார் திருவடியானது ஜடமான ஆசயத்தையுடையவர்களோடு அந்வயலேசமு மற்றது. தாமரைப்பக்ஷத்தில் ஜலாசய சப்தம் நீர்நிலைக்கு வாசகமாக ஸுப்ரஸித்தம். ஆழ்வார் பக்ஷத்தில் அது பஹுவ்ரீஹியால் மந்தமான புத்தியை யுடையவர்களென்று நீசர்களைச் சொல்லுகிறது. அப்படிப்பட்டவர்களோடு அந்வய மற்றது ஆழ்வார் திருவடி என்றது ஸ்ரீமதுரகவிகள் போல்வாரான உதாரஹ்ருதயர்களாலே சிந்திக்கப்படுமது என்றபடி.

*[ஸ்வாதிகாமீத்யாதி.]* பூர்வார்த்தத்தில் இரண்டு விசேஷணங்கள் ஸரோஜத்தில் அந்வயிக்கும் படியாக ப்ரதமாந்தமாகவும், உத்தரார்த்தத்தில் சடாரிபாதங்களில் அந்வயிக்கும் படியாக ஒருவிசேஷணம் ஷஷ்டீவிபக்தியாகவும், மற்ரெரு விசேஷணம் (பாத) யுகளத்தில் அந்வயிக்கும் படியாக த்ருதீயாவிபக்தியாகவும் ப்ரயுக்தமாயிருந்தாலும் எல்லாவிசேஷணங்களும் சேர்ந்து ஆழ்வார் திருவடிகளின் பெருமையை விளக்குவனவாகக் கொள்ளவேணும். பூர்வார்த்தத்தில் (ந) இரண்டும் ஸரோஜ பக்ஷத்தில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும் ; ஆழ்வார் திருவடி பக்ஷத்தில் அதைத்தவிர்த்து அநுஸந்திக்க வேண்டும். (அப்படியே, உத்தரார்த்தத்தில்) ஸ்வாதிகாமீத்யாதி விசேஷணத்தையும் ஸந்நதார்த்திபஞ்ஜநே என்கிற விசேஷணத்தில் ஆழ்வார் திருவடிபக்ஷத்தில் உள்ளபடியே அந்வயித்துக் கொள்ளவேணும். ஸரோஜபக்ஷத்தில் ந சப்தம் சேர்த்து அநுஸந்தித்துக் கொள்ளவேணும். ஆழ்வார் திருவடியானது தன்னைமிகவிரும்பும் யோகிகளின் அநுராகபரிதமான திருவுள்ளத்தில் அன்புடன் உறைந்திருந்து அவ்வநுராகம் பெற்றுச் சிவந்திருப்பது ; தாமரையோ வெறும் சிவப்புடையதேயன்றி இப்படிப்பட்ட ராகமுடையதன்றே. ஆழ்வார் திருவடியானது தன்னைவணங்கினுருடைய ஆர்த்திகளையெல்லாம் தொலைக்கவல்லது; தாமரைக்கு இவ்வதிசயமில்லையே. ஆகவே ஒருபடியாலும் தாமரை ஆழ்வார் திருவடியோடு உவமைபெறவுரியதன்று என்று நன்கு நிரூபித்தாராயிற்று. ஸுந்தர பாஹுஸ்தவத்தில் * அதிர்க்கமப்ரேமதுகம் க்ஷணேஜ்ஜ்வலம் நசோரமந்த:கரணஸ்ய பச்யதாம், அநுப்ஜமப்ஜம் நு கதம் நிதர்சநம் வநாத்ரிநாதஸ்ய விசாலயோர் த்ருசோ:* என்ற ச்லோகம் இங்கு ஒருபுடை நினைக்கத்தக்கது. இதில் மூன்றும்பாதத்தின் முதலில் ஸ்வாதிநக்ஷத்ரம் ஸூசிதம். .... .... .... .... .... (15)

நத்வா யாம் குஸுமாயுதேஷு திருசிவ்யாகாதமாதந்வதீம்
சேமுஷ்யா மஹதாமஹாயி தருணீஜங்காஸுஜங்காலதா,
விஸ்தீர்ண ச்சவிசாகயா சடஜிதோ வ்ருத்தாநுபூர்வீஜுஷா
ஜங்காகல்பதருச்ரியா ஸுரபிதம் சிந்தாவநம் மாமகம். 16

குஸுமாயுத இஷுதி ருசி வ்யாகா தம் ஆதந்வதீம் யாம் நத்வா மஹ தாம் சேமுஷ்யா தருணீ ஜங்காஸு ஜங்காலதா அஹாயி; (தயா) விஸ் தீர்ணச் சவி சாகயா வ்ருத்த ஆநு பூர்வீ ஜுஷா சடஜித: ஜங்கா கல் பதரு ச்ரியா மாமகம் சிந்தாவநம் ஸுரபிதம்.

மன்மதனுடைய அம்பறுத்தூணியினழகையும் வென்றிருக்குமதான யாதொரு (ஆழ்வாரது) கணைக் காலழகை ஸேவித்து மஹான்களின் புத்தியினுல் யுவ திகளின் கணைக்கால்களை நோக்கியோடுகை விடப் பட்டதோ, அப்படிப்பட்ட பெருமைவாய்ந்ததும் பரந்த தேஜ:புஞ்ஜங்களாகிற சாகைகளையுடையதும் உருண்டவடிவு நன்கமைந்திருக்கப்பெற்றதுமான நம் மாழ்வாருடைய திருக்கணைக்காலாகிற கற்பகத்தரு வினழகினுல் என்னுடைச் சிந்தையாகிற பொழி லானது நறுமணம் மிக்கதாயிற்று.

ஆழ்வாருடைய திருக்கணைக்காலிலே யீடுபட்டுப் பேசுகிருர். ஸ்ரீசடகோப ஜங்கையாகிற கல்பவ்ருக்ஷம் என்னுள்ளமாகிற சோலையிலே கமழ்கின்றதென்கிருர். இந்த ஜங்கையைப் பரமப்ரீதிபூர்வமாகச் சிந்திப்பதனுல் ஸகலார்த்தங்களும் கைபுகு மென்பது பரமதாத்பர்யம். அந்த ஜங்கை எப்படிப்பட்டதென்னில், மன்மத னுடைய அம்பறுத்தூணியின் அழகையும் வென்று விளங்காநின்றதாயிற்று. அப் படி விலக்ஷணமான அழகுபொலிந்த இந்த ஜங்கையிலே கண்வைக்கும் மஹான்கள் விஷயாந்தரவ்யாஸங்கத்தை நெஞ்சாலும் நினையார்களென்பது இரண்டாவது பாதத்தினுல். [தருணீ ஜங்காஸு ஜங்காலதா அஹாயி] இது கர்மணிப்ரயோகம். வேகமாக வோடுகிறவர்களை ஜங்காலர் என்பது. ஜங்காலதா என்றது வேகமாகவோடுந்தன்மை என்றபடி. அது விடப்பட்டது என்றதனுல்—ஆழ்வாருடைய ஜங்கையை ஸேவித்த மஹான்களின் சேமுஷி [மதி] யானது யுவதிகளின் ஜங்கைகளை நோக்கியோடுவதை விட்டிட்டு இங்கேயே ஆழங்காற்படுகிறபடியைச் சொல்லிற்றுகும். ஆழ்வாருடைய ஜங்கையை கல்பதருவாக ரூபணம் செய்ததற்கேற்ப, அந்த ஜங்கையில்நின்றும் கிளர்கின்ற காந்தியை சாகைகளாக ரூபித்தபடி. [விஸ்தீர்ணச்சவிசாகயா] என்று சாகையென்று பரம்பரையையும் சொல்லும். காந்திபரம்பரைகள் பரம்பியிருக் கின்றனவென்கை. வ்ருக்ஷமானது வ்ருத்தாகாரமாயிருக்குமே; சடகோபஜங்கா கல்பதருவும் வ்ருத்தாநுபூர்வீவிசிஷ்டமாயிருக்கிறதென்கிருர்; நல்ல நடத்தை யுடையதென்றபடி. ஆக இப்படிப்பட்ட ஜங்காகல்பதருஸ்ரீயாலே என்னுள்ளம் நாறுநறும்பொழிலாயிற்று என்று கூறினுராயிற்று. .... (16)

இதில் மூன்ருவது பாதத்தில் விசாகாநக்ஷத்ரம் ஸூசிதம்.

கநதவயவலோலசோபாவதாதாபகாஸ்ரோதஸஸ்
ஸமுதிதகுருபுத்புதாகாரஸந்தேஹஸந்தாயிநோ:,
ககுததிகதமித்ரபாவம் ஸ்வபாவாத் யுகம் ஜாநுநோ:
மம ஹ்ருதி சடவைரிநாம்நோ முநீந்த்ரஸ்ய ஸந்தீவ்யது. 17

கநத் அவயவ லோல சோபா அவ தாத ஆபகா ஸ்ரோதஸ: ஸமுதித குரு புத்புத ஆகார ஸந்தேஹ ஸந்தாயி நோ: சடவைரிநாம்ந: முநீந்த்ரஸ்ய ஜாநுநோ: ஸ்வபாவாத் ககுத் அதி கத மித்ரபாவம் யுகம் மம ஹ்ருதி ஸந்தீவ்யது.

அழகுமிக்க திவ்யாவயவங்களில் தளதளென்ற சோபையாகிற நிர்மலநதியின் வெள்ளத்தில் நின்றும் உண்டான பெரிய நீர்க்குமிழியின் வடிவுதானே இவை! என்கிற ஸந்தேஹத்தைத்தருகின்ற நம்மாழ் வாரது திருமுழந்தாள்களின் இயற்கையாகவே எருது களின் முசுப்போடு தோழமைபெற்றிருக்கின்ற இணை யானது என்னுள்ளத்திலேயே விளங்கவேணும்.

ஆழ்வாருடைய திருமுழந்தாளிணை தம்முள்ளத்துள்ளே யுறையவேணுமென் கிருர். ஜாநுநோ: யுகம் என்று, ஒன்று ஷஷ்டீவிபக்தியாகவும் ஒன்று ப்ரதமாவிபக்தி யாகவுமுள்ளது. இதற்குச் சேர ஒரு விசேஷணம் ஷஷ்டீவிபக்தியாகவும் மற்ருெரு

விசேஷணம் ப்ரதமாவிபக்தியாகவுமுள்ளது. கநதவயவ... ஸந்தாயிநோ: என்கிற விசேஷணம் ஜாநுநோ: என்பதில் அந்வயிக்கிறது: கருததிகத மித்ரபாவம் என்கிற விசேஷணம் யுகம் என்பதில் அந்வயிக்கிறது. இப்படி வாசநிகமான அந்வய பேத மிருந்தாலும் இரண்டு விசேஷணங்களினுல் தேறுகிற சிறப்பு திருமுழந்தாள்களுக்கேயா யிருக்கும். ஆழ்வாருடைய திருமேனியில் வெள்ளங்கோத்துப் பெருகுகின்றதாம் காந்திப்ரவாஹம்; அதுதன்னிலே யுண்டான இரண்டு புத்புதங்களோ இவை! என்னலாம்படி யிருக்கிறதாம் திருமுழந்தாள்முட்டி. இன்னமும், இயற்கையாகவே எருத்தின் முசுப்பை யொத்திருக்கின்றதாம். அப்படிப்பட்ட திருமுழந்தாளிணை என்னுள்ளத்தினுள் ஸ்வைரவிஹாரம்செய்க வென்ருராயிற்று.

முதல் பாதத்தில் ''லோலதாபா'' லோலசோபா" என்று இரண்டுபாடங்களுள்ளன. பொருள் ஒன்றே. சத்ர் ப்ரத்யயாந்தமான லோலத் என்கிற சொல்வடிவமுண்டோ வென்று சிலர் ஸந்தேஹிப்பதுண்டு, ஆழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ''லோலத் பிரிந்த்ரியஹயை:' என்றருளிச் செய்திருக்கையாலே சங்காவகாச மில்லை.

இதில் மூன்ருவது பாதத்தில் மித்ர பதத்தினுல் அநுராதா நக்ஷத்திரம் ஸூசிதம்; 'அநூராதா நக்ஷத்ரம் மித்ரோ தேவதா'' என்பது வேதம். கீழ் ஒன்பதாவது ச்லோகத்தில் ஆச்ரேஷா நக்ஷத்ரம் இப்புடையிலேயேயன்ரே ஸூசிதமாயிற்று. .... (17)

**துலாஸரணிஸீமநி ப்ரதிதரூபயா ஹஸ்திநாம்**
**கரேண கரபேண வா கதளிகாப்ரகாண்டேந வா,**
**ததோபரி ச பச்யதாம் நயநபந்தநஜ்யேஷ்டயா**
**சமத்க்ருதிமதீ மதிச் சடரிபூருலக்ஷ்ம்யா மம. 18**

ஹஸ்திநாம் கரேண கரபேண வா கதளிகாப்ரகாண்டேந வா துலாஸரணி ஸீமநி ப்ரதிதரூபயா ததோபரி பச்யதாம் நயநபந்தநஜ்யேஷ்டயா ச சடரிபு ஊரு லக்ஷ்மயா மம மதி: சமத்க்ருதிமதீ

யானைகளின் துதிக்கையோடும் கரபமென்கிற புறங்கையினேடும் சிறந்த வாழைத்தண்டினேடும் ஒப்பிடுகையின் பரமகாஷ்டையிலே புகழ்பெற்ற வுருவத்தை யுடையதும் அதற்கு மேலும் பார்ப்பவர்களின் கண்களைப் பிணிப்புண்ணப் பண்ணுமதில் தலைமை பெற்றதுமான ஆழ்வாரது திருத்துடைகளின் அழகினுல் என்னெஞ்சகம் அழகுபொலியப் பெற்றது.

ஆழ்வாருடைய திருத்துடைகள் என்னெஞ்சுக்கு அணியாக விளங்குகின்றன வென்கிருர்.

துடையினழகைப் பேசுமவர்கள் "கந்தளிதகதளீ காண்ட கரிகரகரபங்களை வென்று அடிபருத்து நுனி சிறுத்து மதமதென்று மாம்ஸளங்களாய் விளங்குகின்ற'' என்று பேசுவர்களாதலால் அந்த வுபமானப் பொருள்களைப் பூர்வார்த்தத்தில் எடுத்துக்காட்டியுள்ளார். வா என்றது சகாரார்த்தக மென்னலாம். ''ஹஸ்திநாம் கரேண, கரபேண ச, கதளிகா ப்ரகாண்டேந ச துலாஸரணி ஸீமநி ப்ரதிதரூபயா சடரீபூருலக்ஷ்ம்யா'' என்று அந்வயிப்பது. கரப மென்பது கையின் வெளிப்புறம்; ''மணிபந்தாதாகநிஷ்டம் கரஸ்ய கரபோ பஹி:'' என்பது அமரகோசம். மணிக்கட்டிலிருந்து சுண்டுவிரலளவுமுள்ள புறம்பு பாகம் கரப மெனப்படும். அடிபருத்து நுனி சிறுத்திருக்கு மிருப்புக்கு அதனைத் துடையோடு உவமை கூறுவர் கவிகள்.

ஊருலக்ஷ்மிக்கு இரண்டாவது விசேஷணம்''உபரிசபச்யதாம் நயநபந்தநஜ்யேஷ்ட்யா'' என்பது. ஆழ்வார் வீற்றிருக்கையாலே திருத்துடைகளின் கீழழகு ஸேவிக்கப் போகாதே: மேலழகு ஸேவித்த மாத்திரத்திலும் ஸேவிப்பாருடைய கண்களைப் பிணிப்புண்ணச் செய்யுமாயிற்று திருத்துடைகள், ஆக விப்படிப்பட்ட துடையழகு என்னெஞ்சிலே வீற்றிருக்கின்றதென்ருராயிற்று. இதில் மூன்ருவது பாதத்தில் ஜ்யேஷ்டா நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... .... (18)

மஹ: ப்ரரோஹமஞ்ஜரீமநோஜ்ஞரத்நமேகலா
கலாபபுஷ்பிதா கடீதடீபடீ சடத்விஷ:,
உரஸ்ஸ்ரவத்ப்ரபாஜரீநிபாதநிம்நநாபிகா
அவடோத்தபேநமண்டலீவிதர்க்கமூலமேவ ந:. 19

சடத்விஷ: மஹ: ப்ரரோஹ மஞ்சரீ மநோஜ்ஞ ரத்நமேகலா கலாப புஷ்பிதா கடீ தடீ படீ ந: உரஸ்ஸ்ரவத் ப்ரபாஜரீ நிபாத நிம்ந நாபிகாஅவட உத்த பேந மண்டலீ விதர்க்கமூலம் ஏவ.

நம்மாழ்வாருடைய தேஜ: புஞ்ஜ மஞ்ஜரிகளாலே மநோஹரமான மணிமேகலாகலாபம் பூத்திருக்கப் பெற்ற திருவரைப் பீதகவாடையானது அதில் ஈடுபாடுள்ள நமக்கு திருமார்பினின்று பெருகுகின்ற காந்தி வெள்ளம் விழுந்து பள்ளமான திருநாபித் தலத்திலுண்டான நுரையின் திரளோ வென்கிற சங்கையையே தோற்றுவிக்கிறது.

ஆழ்வாருடைய திருவரையில் சாத்தின பீதகவாடையை யனுபவிக்கிருரிதில். சட த்விஷ: கடீதடீபடீ பேநமண்டலீவிதர்க்க மூலமேவ ந: என்கிருர். ஆழ்வார்திருவரையில் பீதகவாடை யொன்று உண்மையில் இல்லே; திருமார்பில் வெள்ளங்கோத்துப் புறப்படும் காந்திப்ரவாஹம் விழுந்து பள்ளமான திருநாபியில் தோன்றின நுரைத்திரள்தானே அரையில் பீதகவாடையணிந்திருப்பதுபோல் தோன்றுகிறதென்று உத்ப்ரேக்ஷிக்கலாம்படியுள்ள தென்றவாறு. விதர்க்க மாவது உத்ப்ரேக்ஷை, அதற்கு மூலமாயிருத்தலாவது ஹேதுவாயிருக்கை. ஆடை மெல்லியதாயும் வெண்ணிறமாயுமிருத்தல் பற்றி நுரையாக உத்ப்ரேக்ஷித்தல் பொருந்தும்.

இதில் நான்காவது பாதத்தில் மூலநக்ஷத்ரம் ஸூசிதம். .... ....*(19)*

நயநஸூபகநாபீமுத்திசந்தீ சடாரே:
ஸரஇதி பரிபாஷா டௌகதே ஸார்த்தகத்வம்,
ஸததமிதரதா ந: ஸம்ஹதா நேத்ரமீநா:
கதமிஹ விஹரேயு: கௌதுகோத்ரேகயுக்தா:. 20

சடாரே: நயநஸூபக நாபிம் உத்திசந்தீ ஸர: இதி பரிபாஷா ஸார்த்தகத்வம் டௌகதே; இதரதா ந: நேத்ர மீநா: ஸம்ஹதாஸ் ஸந்த: கௌதுக உத்ரேக யுக்தா: இஹ கதம் விஹரேயு:?

நம்மாழ்வாருடைய, கண்ணுக்கழகிய திருநாபியைப் பற்றியுண்டான ''இதுவொரு குளம்'' என்கிற ப்ரவாதமானது உண்மைத் தன்மையை அடைகின்றது; அப்படியல்லாவிடின் நம்முடைய கண்களாகிற மீன்களானவை திரண்டுகொண்டு மிக்க குதூஹலத்தோடு கூடினவைகளாய் இந்தத் திருநாபியிலே எப்படி விளையாடும்?

ஆழ்வாருடைய திருநாபியிலீடுபட்டுப் பேசுகிருர். ஆழ்ந்திருப்பதுபற்றி நாபியைத் தடாகமென்று கவிகள் கூறுவதுண்டே; அந்தக்கூற்று ஆழ்வாருடைய திருநாபி விஷயத்தில் மிகப்பொருந்துமென்று விலக்ஷணமானவொரு ஹேதுவைக் கொண்டு மூதலிக்கிருர். மீன்கள் துள்ளி விளையாடுமிடமன்றோ தடாகம்; நம்முடைய கண்களாகிற மீன்கள் ஆழ்வாருடைய திருநாபியிலேயே யீடுபட்டு அங்கேயே விஹரிப்பதனுல் இதை தடாகமென வழங்குவது நன்கு பொருந்தியதாயிற்று என்றவாறு.

இதில் இரண்டாவது பாதத்தில் ''பரிபாஷா டௌகதே'' என்ற விடத்தில் அஷாடா நக்ஷத்ரம் ஸூசிதம். பூர்வாஷாடா நக்ஷத்ரத்தைக் கொள்க. .... *(20)*

தாம் மத்யதேசஸுஷமாமவலோகயாமி
ரோமாவலீத்ரிவளிகாருசிராம் சடாரே:,
ரேகோத்தரா யதுபமாமதிகாபிலாஷா
டௌகேதவா யதி நவா வடபத்ரசோபா. 21

ரேகாஉத்தரா வடபத்ர சோபா அதிக அபிலாஷாஸ தீயத்உபமாம் டௌகேத,வா யதிவா ந டௌகேத, தாம் சடாரே: ரோமாவலீ த்ரிவலிகா ருசிராம் மத்ய தேச ஸுஷமாம் அவலோகயாமி

ரேகைகளினுல் சிறந்து விளங்குகின்ற ஆலிலையினழகானது மிகுந்த விருப்பமுடையதாய் யாதொரு இடையழகோடு ஒப்புமையைப் பெறுமோ அல்லது பெருதோ, அப்படிப்பட்டதான நம்மாழ்வாருடைய ரோமாவளியினுலும் மும்மடிப்பினுலும் அழகு பொலிந்த இடையினழகை(இடைவிடாது) ஸேவிக்கின்றேன்.

ஆழ்வாருடைய இடையினழகிலீடுபட்டுப் பேசுகிருர். உத்தம புருஷர்களின் நாபிப்ராந்த ப்ரதேசமானது ஸூக்ஷ்மமான ரோமராஜியினுலும் மூன்று மடிப்பாகிற த்ரிவலியினுலும் அலங்க்ருதமாயிருக்குமாதலால் ஆழ்வாருடைய மத்யப்ரதேசமும் அங்ஙனேயமைந்து அழகு பொலிந்திருக்கும்படியைக்கூறி அதனைப் பணிகின்றேனென்கிருர் பூர்வார்த்தத்தில். இந்த அவயவ ஸந்நிவேசம் ரேகாங்கிதத்வ ப்ரயுக்தமாக ஆலிலையோடு ஒப்பிட்டுச் சொல்லப்படுவதுண்டு கவி ஸமயத்தில்: ஆனுல் அந்தவொப்பு ப்ரக்ருதத்தில் பொருந்துமோ பொருந்தாதோ அறியோம் என்று ஒரு சமத்காரமாகச் சொல்லுகிருர் உத்தரார்த்தத்தில்.

இதில் மூன்ருவது பாதத்தின் முடிவிலும் நான்காவது பாதத்தின் முதலிலுமாக அஷாடா நக்ஷத்ரம் ஸூசிதம். இது உத்தராஷாடாவைச் சொன்னபடி. பூர்வம் உத்தரம் என்கிற விசேஷணங்கள் இடப்படவேணுமென்னும் நியமமில்லை. பூர்வத்தில் சொன்னது பூர்வாஷாடா; உத்தரத்தில் சொன்னது உத்தராஷாடா என்று கொள்ளக்கடவது. வேதத்தில் இரண்டு நக்ஷத்ரங்களையும் அஷாடா என்றே ஓதியிருப்பதுணர்க. .... .... .... .... (21)

பாஸா ந வ்யதிபிதுரீபவந்தி ப்ருங்கா:
ஹாரஸ்தாதுரஸி ஹரிந்மணேச் சடாரே:,
ஆருடா வகுளமயீம் ஸ்ரஜம் ஸுகந்திம்
சப்தேந ச்ரவணஸுகேந யாந்தி பேதம். 22

சடாரே: வகுளமயீம் ஸுகந்திம் ஸ்ரஜம் ஆருடா: ப்ருங்கா: பாஸா உரஸி ஹாரஸ்தாத் ஹரிந்மணே: ந வ்யதிபிதுரீபவந்தி, ச்ரவண ஸுகேந சப்தேந பேதம் யாந்தி

நம்மாழ்வாருடைய மகிழம் பூக்களினுலான பரிமள ப்ரசுரமான மாலையிலேறியுள்ள வண்டுகள் தமது ஒளியினுல், திருமார்பில் ஹாரத்திலிருக்கின்ற மரகதப் பச்சையிற் காட்டிலும் வேற்றுமை பெறுகின்றனவல்ல; (ஆனுலும்) செவிக்கினிய இசையினுல் (இவை வண்டுகளென்னலாம்படி) வேற்றுமையெய்துகின்றன.

ஆழ்வார் திருமார்பிலணிந்திருக்கும் மரகதப் பச்சை யொன்றை யநுபவித்துப் பேசுகிருர்.—என்று அவதாரிகை யிடுவதா? திருமார்பிலணிந்த வகுளமாலையிற் படிந்த வண்டினழகை யநுபவித்துப் பேசுகிருர்—என்று அவதாரிகையிடுவதா? என்றறிகிறிலோம். இரண்டும் இங்கு அநுபாவ்யமாயிருக்கிறபடி. மகிழ்மாலை மார்பினரான ஆழ்வாருடைய வகுளமாலையிற் படிந்த வண்டுகளைப் பார்த்தால், இவை மார்பிலணிந்த மரகதப் பச்சையோ! என்னலாயிருந்தது. மார்பிலணிந்த மரகதப் பச்சையைப் பார்த்தால், இது மகிழ்மாலையிற்படிந்த வண்டினமோ!

என்னலாம்படி யிருந்தது. இரண்டுக்கும் வாசி தெரிவரிது. ஆனாலும், வகுளமாலை யில் மதுவைப்பருகி வண்டினங்கள் செவிக்கினிதாக முரல்கின்றமையால் இவை வண்டினங்களென்று அறியப்பெறும். அப்படி முரலாமலிருப்பது ஹரிந்மணியென்று அறியப்பெறும் என்றருளாயிற்று. இத்தால் மார்பிலணிந்த மணிச்சுடரும் வகுளமாலை யின் மதுஸம்ருத்தியும் மநோஹரமென்று பணித்ததாயிற்று.

இதில் மூன்றாவது பாதத்தில் ஸுகந்தாம் என்று சிலர் பாடமோதுவது தவறு ஸுகந்திம் என்பதே சுத்தபாடம். வியாகரணத்திற்குச் சேருமது.

இதில் நான்காவது பாதத்தில் ச்ரவண நக்ஷத்ரம் ஸூசிதம். .... (22)

**தமவத: குருதே மதநோத்ததாந் ஸுகடயத்யபுதாந் புதநிஷ்டயா,**
**ப்ரதிதமுத்ரமநித்ரஸரோருஹப்ரணயி பாணிதலம் சடஜிந்முநே: 23**

சடஜிந்முநே: ப்ரதிதமுத்ரம் அநித்ர ஸரோருஹ ப்ரணயி பாணிதலம் மதந உத்ததாந் தமவத: குருதே, அபுதாந் புதநிஷ்டயா ஸுகடயதி.

நம்மாழ்வாருடைய விளக்கமுற்ற திருமுத்திரையை யுடையதும் ஒருகாலும் மூடிக்கொள்ளுதலில்லாத தாமரை மலரோடு தோழமைகொண்டதுமான திருக் கைத்தலமானது காமவெறி கொண்டவர்களை அடக்கமுற்றவர்களாகச் செய்கின்றது; விவேகமற்ற வர்களை விவேகவுறுதியோடு நன்கு கூட்டுகின்றது.

ஆழ்வாருடைய திருக்கைத்தலத்தில் ஈடுபட்டுப் பேசுகிறார். அடக்கமற்றவர் களுக்கு அடக்கத்தையுண்டாக்குவதும் விவேகமற்றவர்களுக்கு விவேகத்தையுண் டாக்குவதும் ஆழ்வாருடைய ஜ்ஞாநமுத்ரா விபூஷிதமாய் விகஸித கமலோபமமான திருக்கைத்தலத்தின்பணி என்றருளாயிற்று. இந்த ஞானமுத்திரையை ஸேவித்த வாறே சம தமாதி குணஸம்பத்தைப் பெறுவோமென்பது பரமதாத்பர்யம்.

இதில் இரண்டாவது பாதத்தில் தநிஷ்டா நக்ஷத்ரம் [அவிட்டம்] ஸூசிதம். (23)

**நேஹ ஸம்ஸரணரோகஸம்ஹ்ருதிர் ஜாயதே சதபிஷக்சிகித்ஸயா,**
**அந்தரேண சடவைரிகந்தராலம்பமாநவகுலஸ்ரஜாம் ரஜ:. 24**

இஹ சடவைரி கந்தரா லம்பமாந வகுள ஸ்ரஜாம் ரஜ: அந்தரேண சத பிஷக் சிகித்ஸயா ஸம்ஸரண ரோக ஸம்ஹ்ருதி: ந ஜாயதே.

இவ்வுலகில், நம்மாழ்வாருடைய திருக்கழுத்தில் தொங்குகிற வகுளமாலைகளின் துகளைவிட்டு நூறு மருத்துவர்கள் சிகித்ஸை பண்ணினாலும் பிறவிப்பிணி தீர்தலென்பது உண்டாகவே மாட்டாது.

ஆழ்வாருடைய திருக்கழுத்தில் தொங்குகின்ற வகுளமாலைகளின் சுண்ண மொழிய வேறொன்றும் நமது பிறவிப் பிணியைத் தீர்க்கவல்ல மருந்தாகமாட்டாது. *மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணா* என்றும் *வைத்யோ நாராயணோ ஹரி:* என்றும் சொல்லப்பட்ட ஸ்ரீமந்நாராயணனுட்பட எத்தனை மருத்துவர்கள் சிகித்ஸை பண் ணினாலும், *புநரபி ஜநநம் புநரபி மரணம் புநரபி ஜநநீஜடரே சயநம்* என்னும் படியான பிற வித்துயர் நீங்க கில்லாது;ஆழ்வாருடைய வகுளமாலையின் ஏகதேசமே பிறவித்துய ரைப் போக்கவல்ல அருமருந்து என்றருளாயிற்று.

திருவாய்மொழியில்* தீர்ப்பாரையாமினியில் பிணியொழிக்கும் மருந்து பேசு மிடத்து ''கவளக் கடாக்களிறட்ட பிரான்திருநாமத்தால் தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின் தணியுமே'' என்று முந்துறச் சொல்லி, உடனே ''மாயன் தமரடி நீறு கொண்டு அணிய முயலில் மற்றில்லைகண்டீர் இவ்வணங்குக்கே'' என்று பாகவத ஸ்ரீபாதரேணுவே ஒப்பற்ற மருந்து என்று ஆழ்வாருளிச் செய்ததனால் அதனையடி யொற்றியே இந்த ச்லோகமருளிச் செய்ததாகக் கொள்ளலாம்.

இதில் இரண்டாவது பாதத்தில் சதபிஷங் நக்ஷத்ரம் ஸூசிதம். ....(24)

**ஜந்மத்வம்ஸம் திசதி ஜநா நாம் வக்த்ரம் தீப்ரோஷ்டபதமநோஜ்ஞம்,**
**மந்தஸ்மேரம் மதுரகடாக்ஷம் ஸுப்ரூரேகம் ஸுபககபோலம். 25**

தீப்ர ஓஷ்டபத மநோஜ்ஞம் மந்த ஸ்மேரம் மதுர கடாக்ஷம் ஸுப்ரூ ரேகம் ஸுபக கபோலம் வக்த்ரம் ஜநாநாம் ஜந்மத்வம்ஸம் திசதி.

ஒளிபெற்று விளங்குகின்ற ஓஷ்டப்ரதேசத்தினு லழகியதும் புன்முறுவலையுடையதும் இனிமையான கடாக்ஷத்தை யுடையதும் அழகிய புருவக்கொடியை யுடையதும் அழகிய திருக்கபோலங்களை யுடையது மான (ஆழ்வாரது) திருமுகமண்டலமானது ஸம்ஸாரி ஜனங்களுக்கு ஸம்ஸார நாசத்தை யளிக்கின்றது.

ஆழ்வாருடைய திருமுக மண்டலத்திலீடுபட்டுப் பேசுகிருர். அழகிய திருவுதடுகளையுடையதும் புன்முறுவல் பொருந்தியதும் கடாக்ஷாம்ருத தாரையைப் பெருக்குவதும் விற்புருவக்கொடி வாய்ந்ததும் கபோல ஸௌபாக்ய முடையதுமான ஆழ்வார் திருமுகமண்டலமானது ஸேவிக்கும் ஜனங்களுக்கு மாறிமாறிப் பல பிறப்பும் பிறக்கும் பரிசைப் போக்குகின்றது-முக்தி ஸாம்ராஜ்ய மளிக்கின்றது என்றுராயிற்று.

இதில் இரண்டாவது பாதத்தில் ப்ரோஷ்டபத மென்னும் பூரட்டாதி நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... .... (25)

**லஸதி ஹி பஜதாம் பத்ரோத்தரபதகரணுரூடம்,**
**சடரிபுமகுடம் பாஸா பரிஹ்ருத துரிதத்வாந்தம். 26**

பஜதாம் பத்ரோத்தர பத கரண ஆரூடம் பாஸா பரிஹ்ருத துரித த்வாந்தம் சடரிபு மகுடம் லஸதி.

பக்த ஜனங்களுக்கு ச்ரேயஸ்கரமான சிறந்த பதவியை யளிப்பதற்காகத் திருமுடிமீது ஏறியிருப்பதும் ஒளியினுல் தீவினை யிருளைத் தொலைக்கவல்லதுமான நம்மாழ்வாருடைய திருவபிஷேகமானது விளங்கா நின்றது.

ஆழ்வாருடைய மணிமகுடத்திலீடுபட்டுப் பேசுகிருர் [பஜதாம் பத்ரோத்தர பதகரணுரூடம்], கருணுரூடம் என்றுசிலர் ஓதுவது மறுக்கவும் மறக்கவும் தக்கது. கரணுரூடமென்பதே சுத்தபாடம். கரணுர்த்தம் ஆரூடம்-கரணுரூடம் என்க. பக்தர்களுக்கு ச்ரேயஸ்கரமான பதவியை விளைவிப்பதற்காகவே மகுடம் ஆழ்வாருடைய திருமுடியிலேறி வீற்றிருக்கின்றதாம். இன்னமும் [பாஸா பரிஹ்ருத துரிதத்வாந்தம்] தன்னுெளியினுல் பக்த ஜனங்களின் பாபங்களாகிற விருளைப் பாறவடிக்குமது. இப்படிப்பட்ட திருமகுடம் நிரதிசயதீப்தியுக்தமாக விளங்குகின்ற தென்றுராயிற்று.

இதில் உத்தராபாத்ரா நக்ஷத்ரம் ஸூசிதம். .... .... (26)

**அந்தரேண சடாராதிம் கஸ் ஸம்ஸா ரேவதீஹ நः,**
**ததஹம் ஹ்ருதயே நித்யம் நிதகே தத்வபுச்ச்ரியம்: 27**

இஹ ஸம்ஸாரே சடாராதிம் அந்தரேண கः நः அவதி? தத் அஹம் தத்வபுःச்ரியம் ஹ்ருதயே நித்யம் நிதகே.

இவ்விருள் தருமா ஞாலத்தில் நம்மாழ்வாரைத் தவிர்த்து வேறு யார் நம்மை ரக்ஷிக்கவல்லவர்? வேறு யாருமில்லாமையினுல் அடியேன் அவரது திருமேனியழகையே நெஞ்சினுள் நிச்சலும் உறையவைக்கின்றேன்.

இந்த ஸம்ஸாரமண்டலத்தில் ஆழ்வாரைத்தவிர்த்து வேறு யார் நம்மைக் காக்கவல்லார்? அவரே நமக்குப் பரமரக்ஷகர். ஆகவே அவருடைய வடிவழகையே எஞ்ஞான்றுமுள்ளத்துள் சிந்தனை செய்யாநின்றேனென்று நிகமித்தருளினாராயிற்று,

இதில் இரண்டாவது பாதத்தில் ரேவதீ நக்ஷத்ரம் ஸூசிதம். .... (27)

(தனித் தொங்கல்.)

**வாசிகீ வரிவஸ்யா மே தாரகாமாலிகாத்மிகா,**
**பராங்குசபதாப்ஜேந பரிஷ்காரவதீ பவேத்.**

தாரகாமாலிகாத்மிகா மே வாசிகீ வரிவஸ்யா பராங்குச பதாப்ஜேந பரிஷ்காரவதீ பவேத். நக்ஷத்ரமாலிகையாகிற எனது வாசிக கைங்கரியமானது நம்மாழ்வாரது திருவடித்தாமரையினால் பரிஷ்க்ருதமாகக்கடவது.

நக்ஷத்ரமாலிகை யென்கிற திருநாமத்தினால் என்வாக்காலமைக்கப்பட்ட இந்த மாலையை நம்மாழ்வாருடைய திருவடித்தாமரையிலே சாத்தி அழகு பெறுவித்துக்கொண்டேனென்பது உட்கருத்து. பூவானது பூவோடே சேர்ந்தவாறே மிகவும் அழகுபெறுமிறே. இந்த ஸ்துதியோ நக்ஷத்ரமாலிகையாகையாலே பூவாயிற்று. இது சேர்ந்தவிடமோ ஆழ்வார் திருவடியெனும் தாமரைமலர். ஆகவே இதனழகு சொல்ல வேணுமோ வென்கை.

இந்த ஸ்தோத்ரமருளிச் செய்தவரே இதுவுமருளிச் செய்தது. எனது வாசிகமான அடிமையாகிய இந்த ஸ்துதியை ஆழ்வார் திருவடிகளிலே ஸமர்ப்பித்து ஸுபரிஷ்க்ருதமாக்கிக் கொண்டேனென்று கூறினாராயிற்று. .... .... *

ஆழ்வார் திருவடிகளே சரணம், ஜீயர் நாயனார் திருவடிகளே சரணம்.

ஜீயர் நாயனார் அருளிச்செய்த

நக்ஷத்ரமாலிகைக்கு

ஸ்ரீகாஞ்சி. ப்ர. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரை

முற்றிற்று.

நம்மாழ்வார் விஷயமான ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி (ஸ்தோத்ரரத்நத்தில் ஐந்தாவது ச்லோகம்.)

**மாதாபிதா யுவதயஸ் தநயா விபூதி:**
**ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம்,**
**ஆத்யஸ்ய நః குலபதேர் வகுளாபிராமம்**
**ஸ்ரீமத் ததங்க்ரி யுகளம் ப்ரணமாமி மூர்த்நா.**

மத் அத்வயாநாம் நியமேந மாதா பிதா யுவதய: தநயா: விபூதி: ஸர்வம் யத் ஏவ, ந: ஆத்யஸ்ய குல பதே: வகுள அபிராமம் ஸ்ரீமத் தத் அங்க்ரி யுகளம் மூர்த்நா ப்ரணமாமி.

என்னைச் சேர்ந்தவர்களுக்கு எப்பொழுதும் தாய் தந்தை, மாதர், மக்கள், செல்வம்(மற்றுமுள்ள) எல்லாமும் யாதொரு ஆழ்வார் திருவடியேயோ, நமக்குக் குலகூடஸ்தராகிய ஆழ்வாருடைய மகிழமலர்களினுல் அழகாயும் நித்யோஜ்ஜ்வலமாயுமிருக்கிற அந்தத் திருவடியிணையைத் தலையால் வணங்குகின்றேன்.

இந்த ச்லோகத்தின் விரிவுரை நமது ஸ்தோத்ர ரத்ந வியாக்கியானத்தில் காண்க.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ:

நித்யாநுஸந்தேய ஸ்தோத்ரமாலையில்

எம்பெருமானுர் விஷயமான ஸ்தோத்ரங்கள்.

# 1 தாடீபஞ்சகம்

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய உரையுடன்.

1/11 - 27-10-07 - சனி - 2:00

## அவதாரிகை.

ஐந்து ச்லோகங்கள் கொண்ட இந்த ஸ்துதி கூரத்தாழ்வானருளிச்செய்ததென்பர் சிலர்; ஆழ்வான் ஆண்டான் எம்பார் முதலான ஐவர் [ஒவ்வொருவர் ஒவ்வொரு ச்லோகமாக] அருளிச்செய்த ஸ்துதியிது என்பர் வேறுசிலர். உண்மை எதுவாயினும் கர்ணாம்ருதமாக அமைந்த இந்த ஸ்தோத்ரம் பக்தர்களுக்கு நெடுங்காலமாக நித்யாநுஸந்தானத்தில் வந்திருப்பதால் இதன் பொருள் விவரிக்கப்படுகிறதிங்கு. எம்பெருமானுருடைய வெற்றிச் செல்வத்தைப் பேசுகின்ற ஐந்து ச்லோகங்கள் கொண்ட இந்த ஸ்துதிக்கு நாடீபஞ்சக மென்கிற திருநாமம் மிகப் பொருத்தமானது. .... .... .... .... .... (*)

பாஷண்டத்ருமஷண்டதாவதஹநச் சார்வாகசைலாசநி:
பௌத்தத்வாந்தநிராஸவாஸரபதிர் ஜைநேபகண்டீரவ:,
மாயாவாதிபுஜங்கபங்ககருடஸ் த்ரைவித்யசூடாமணி:
ஸ்ரீரங்கேசஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி:. 1

பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹந: சார்வாக சைல அசநி: பௌத்தத் வாந்த நிராஸ வாஸரபதி: ஜைந இப கண்டீரவ: மாயாவாதி புஜங்க பங்க கருட: த்ரைவித்ய சூடாமணி: ஸ்ரீரங் கேச ஜயத்வஜ: அயம் ராமாநுஜ: முநி: விஜயதே.

பாஷண்டர்களாகிற வ்ருக்ஷஸமூஹங்களுக்குக் காட்டுத்தீப்போன்றவரும், சார்வாக மதஸ்தர்களாகிற மலைகளுக்கு இடிபோன்றவரும், பௌத்தர்களாகிற இருளுக்கு இரவிபோன்றவரும், ஜைநர்களாகிற யானைகளுக்குச் சிங்கம்போன்றவரும், மாயாவாதிகளாகிற ஸர்ப்பங்களுக்குக் கருடன்போன்றவரும், பரமவைதிகர்களுக்குச்சிரோமணியானவரும்,ஸ்ரீரங்க நாதனுடைய ஸர்வாதிசயங்களையும் சேமித்தருளின வருமான இந்த ஸ்ரீராமாநுஜமுனிவர் ஸர்வோத்கர்ஷசாலியாக விளங்குகின்றார்.

(பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹந:) ஸ்ரீராமாநுஜ முநிக்கு ஏழு விசேஷணங்கள் இடப்படுகின்றனவிதில். *அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே* என்றும் * நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன * என்றும் * தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் தாழ்சடையோன் சொல்கற்ற சோம்பரும் சூனியவாதரும் நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே பொற்கற்பகம் எம்மிராமாநுசமுனி போந்தபின்னே * என்றும் சொல்லுகிறபடியே ஸகல துர்மதங்களையும் வேரோடு களைந்தொழித்தவர் என்கிற பெருமை இந்த ச்லோகத்தினுல் சொல்லப்படுகிறது. பரம நாஸ்திகர்கள் பாஷண்டரெனப்படுகிறார்கள். அவர்கள் பேர்க்கவும் பேராதபடி வேரூன்றிக்கிடந்தார்கள் ; அன்னவர்களுக்கு ஸ்வாமிதாம் காட்டுத்தீப்போன்றவரென்கிறது முதல்விசேஷணத்தினுல். காட்டுத்தீ கதுவினுல் எப்படிப் பட்ட மரங்களும் ஒருநொடிப்பொழுதில் எப்படி அவிந்தொழியுமோ ; அப்படியே அவர்களையெல்லாம் அவலீலையாகத் தொலைத்தவர் என்றதாயிற்று.

[சார்வாக சைலாசநி:] கீழே பாஷண்டர்களென்று ஸாமாந்யசப்தத்தாலே சொல்லப்பட்டவர்கள் இனி விசேஷசப்தங்களாலே விவரிக்கப்படுகிறார்கள். சார்வாகர், பௌத்தர், ஜைநர், மாயாவாதிகள் என்று இங்கே விசிஷ்ய எடுத்துக்கூறப்படுமவர்கள், முதலிலே பாஷண்டர்களென்று சொல்லப்பட்டவர்களின் விவரண பூதர்களென்னவுமாம், சார்வாகாதிகளைப்போலே பாஷண்டர்கள் தனிப்பட்ட வகுப்பினரென்னவுமாம். ''ப்ரத்யக்ஷமேகம் சார்வாகா:'' என்கிறபடியே கண்ணால்கண்டதொன்றே ப்ரமாணமென்கிற சார்வாகமதஸ்தர்களாகிற மலைகளுக்கு அசநிபோன்றவர் ஸ்வாமி. வேறொன்றாலும் மாய்க்கமுடியாத மலைகளும் அசநியினால் க்ஷணேந மாய்ந்து போமிறே. முற்காலத்தில் இந்திரன் அசநியினால் மலைகளையெல்லாம் அறுத்தொழித்தானென்பதுண்டே.

(பௌத்தத்வாந்த நிராஸ வாஸரபதி:) பௌத்தர்களாகிற இருளுக்குக் கதிரவன் போன்றவர் ஸ்வாமி! * கதிரவன் குணதிசைச் சிகரம்வந்தணைந்தான் * என்றவாறே *கனவிருளகன்றது * என்னவேண்டியதன்றோ. ஸூர்யோதயமானவாறே இருள்களெல்லாம் சிதைந்தோடுமாபோலே ஸ்வாமி திருவவதரித்தவன்றே பௌத்தமதம் தொலைந்தொழிந்தது என்க.

(ஜைநேபகண்டீரவ:) ஜைநர்களாகிற மதயானைகளை மாய்ப்பதில் சீரியசிங்கமொத்தவர் ஸ்வாமி. சிங்கம் வாழ்கிற காட்டிலே யானைகள் தலைகாட்டமாட்டாதாப்போலே ஸ்வாமி ஸஞ்சரித்தருளுமிடத்தே ஜைநர்கள் தலைகாட்டமாட்டாதே பதுங்கிக்கிடந்தனர் என்றவாறு. * வலிமிக்க சீயமிராமாநுசன்* என்றார் அமுதனாரும்.

(மாயாவாதி புஜங்கபங்க கருட:) *த்ருச்யம் மித்யா த்ருஷ்டிகர்த்தாச மித்யா தோஷோ மித்யா * என்றும் '' ப்ரபஞ்சமெல்லாம் மாயாவிலஸிதம்'' என்றும்

சொல்லித் திரிகிற மாயாவாதிகளாகிற ஸர்ப்பங்களைப் பங்கம் செய்யும் விஷயத்தில் கருடனையொத்தவர் ஸ்வாமி. கருத்மானுடைய நிழல்பட்டாலும் அரவங்கள் மாய்ந்து போமாப்போலே ஸ்வாமியின் நிழல்பட்டாலும் மடிந்துபோவர்கள் மாயாவாதிகள் என்றபடி.

(த்ரைவித்ய சூடாமணி:) ருக் யஜுஸ் ஸாமங்களாகிற மூன்று வேதங்களையும் பரம ப்ரமாணமாகக்கொண்டு அவற்றிலே போதுபோக்குமவர்கள் த்ரைவித்யர்களெனப்படுவார்கள் ; அப்படிப்பட்ட பரமைகாந்திகளுக்குச் சிரோபூஷணமாக விளங்குமவர் ஸ்வாமி. பரம வைதிகர்கள் குலாவும் பெருமானென்கை.

(ஸ்ரீரங்கேச ஜயத்வஜ:) * தென்னரங்கர் செல்வம் முற்றுந் திருத்திவைத்தான் வாழியே * என்றும் * மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள் * என்றும் சொல்லுகிறபடியே ஸ்ரீரங்கஸ்ரீயை அநுதினம் அநுபத்ரவமாகச் சேமித்தருளின மஹாநுபாவராகையாலே ஸ்ரீரங்கேச ஜயத்வஜ மென்று விருதுசாத்தப் பெற்றவர் ஸ்வாமி. ஆக இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த எம்பெருமானார் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்தருளா நின்றார் என்றதாயிற்று. .... .... (1

**பாஷண்ட ஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:**
**ப்ரச்சந்நபௌத்த மகராலய மந்ததண்டா:,**
**வேதாந்த ஸாரஸுகதர்சந தீபதண்டா:**
**ராமாநுஜஸ்ய விலஸந்தி முநேஸ் த்ரிதண்டா:. 2**

பாஷண்ட ஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:, ப்ரச்சந்ந பௌத்த மகராலய மந்ததண்டா:, வேதாந்தஸாரஸுக தர்சந தீபதண்டா: ராமாநுஜஸ்ய முநே: த்ரிதண்டா:விலஸந்தி

பாஷண்டத் திரள்களாகிற மலைகளைக் கண்டிப்பதில் வஜ்ரதண்டம் போன்றவையும், வைதிகமதஸ்தர்களென்று சொல்லிக் கொள்ளுகிற ப்ரச்சந்நபௌத்தர்களாகிற கடல்களைக்கலக்குவதற்குரிய மத்துத்தடிகள் போன்றவையும்.வேதாந்த ஸாரப் பொருள்களை எளிதாகக் காட்டும் தீபதண்டங்கள் போன்றவையுமான எம்பெருமானாரது த்ரிதண்டங்கள் அழகியவாய் விளங்குகின்றன.

இந்த ச்லோகத்தினாலும் அடுத்த ச்லோகத்தினாலும் எம்பெருமானார் முன் கையிலேந்திய முக்கோல்தன்னழகு பேசப்படுகிறது. திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்திலே *சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்றுதண்ட ரொன்றினர்* என்றருளிச் செய்தபடியே த்ரிதண்டபரிமண்டிதராகவன்றோ ஸ்வாமி தாம் ஸேவை ஸாதித்தது. அந்த த்ரிதண்டத்தின் பெருமை எப்படிப்பட்ட தென்னில்; (பாஷண்ட ஷண்ட கிரிகண்டந வஜ்ரதண்டா:) பாஷண்ட ஷண்டங்களாகிற பெருமலைகளைக் கண்டித் தொழிப்பதிலே வஜ்ரதண்டங்கள் போன்றவையாம். எம்பெருமானார் பக்கலிலே சொல்லவேண்டிய பெருமையையே த்ரிதண்டத்தின் மேலேற்றிச் சொல்லுகிறது. இன்னமும் எப்படிப்பட்டவை யென்னில் ;

(ப்ரச்சந்ந பௌத்த மகராலய மந்ததண்டா:) சங்கரபாக்கரயாதவபாட்ட ப்ரபாகராதிகள் ப்ரச்சந்ந பௌத்தர்களெனப்படுகிறார்கள் ; பௌத்தர்கள் வெளிப்படையாக வேதங்களை அப்ரமாண மென்று பிதற்றிப் போந்தார்கள் ; மற்றையோர்கள் அங்ஙனன்றிக்கே வேதங்களை ப்ரமாணமாக இசைந்துவைத்தும் தத்வஹிதபுருஷார்த்தங்களின் உண்மைஸ்வரூப விளக்கத்தில் மாழாந்தொழிந்தார்களாதலால் இவர்களையும் ஒருபடி பௌத்தர்களென்றே சொல்லலாமென்று, " அவர்கள் ப்ரகாச பௌத்தர்கள், இவர்கள் ப்ரச்சந்ந பௌத்தர்கள் " என்று பெரியார் வழங்கிவந்தனர். ஸங்கல்பஸூர்யோதயத்தில் * யதி பாஸ்கர யாதவப்ரகாசௌ * என்று தொடங்கிச்

சொன்ன ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். அப்படிப்பட்ட *மயோபாதிவிகார ஸங்கரகதாகோலாஹலிகளாகிற கடலைக் கலக்குவதற்கு மத்துத்தடி போன்றதாம், ஸ்வாமியின் த்ரிதண்டம். த்ரிதண்டதாரியான ஸ்வாமி ப்ரசந்ந பௌத்தர்களை யெல்லாம் பாற்றியருளினர் என்றவாறு.

[வேதாந்தஸார ஸூக்ஷ்மதர்சந தீபதண்டா:] த்ரிதண்டம் இன்னமும் எப்படிப்பட்ட தென்னில்; வேதாந்த விழுப்பொருள்களானவை இவ்விருள் தருமாஞாலத்தவர்குப் புலப்படாதபடிகிடக்க, அவற்றை எளிதாகவும் ஸூவ்யக்தமாகவும் காண்பதற்கு ஏற்றப்பட்ட தீபதண்டங்களோ இவை! என்னும்படியாகவுள்ளன. த்ரிதண்டதாரியான நம் ஸ்வாமி யொருவரே வேதாந்த தத்வார்த்தங்களையெல்லாம் உள்ளவாறு கண்டு வெளியிட்டருளினர் என்றதாயிற்று. *நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது* என்ற அமுதனார் பாசுரம் இங்கே அநுஸந்தேயம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானார் த்ரிதண்டம் "ஐங்கோலுமொருகோலும் நீர்க்கோலம்போல்" என்று பிள்ளைப்பெருமாளையங்கார் பணித்தபடியே பஞ்சபாணனுடைய ஆஜ்ஞையையும் ஏகதண்டிகளுடைய ஆரவாரத்தையுமொழித்துச் செங்கோல் செலுத்தி விளங்கா நின்றது என்றதாயிற்று. .... .... .... .... (2)

**சாரித்ரோத்தாரதண்டம் சதுரநயபதாலங்க்ரியாகேதுதண்டம்**
**ஸத்வித்யாதீபதண்டம் ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலதண்டம்,**
**த்ரய்யந்தாலம்பதண்டம் த்ரிபுவநவிஜயச்சத்ரஸௌவர்ணதண்டம்**
**தத்தே ராமாநுஜார்ய: ப்ரதிகதகசிரோவஜ்ரதண்டம் த்ரிதண்டம்.**

சாரித்ர உத்தார தண்டம், சதுரநய பத அலங்க்ரியா கேது தண்டம், ஸத்வித்யா தீபதண்டம்: ஸகல கலிகதா ஸம்ஹ்ருதே: காலதண்டம், த்ரய்யந்த ஆலம்பதண்டம், த்ரிபுவந விஜயச்சத்ர ஸௌவர்ண தண்டம் ப்ரதிகதகசிரோ வஜ்ரதண்டம் த்ரிதண்டம் ராமநுஜார்ய: தத்தே.

நன்னடத்தைகளை உத்தாரம் செய்யவல்ல வேத்ர தண்டம் போன்றதும், நல்ல நீதிமார்க்கத்தை அலரகரிக்கவல்ல த்வஜதண்டம் போன்றதும், ஸத்வித்யங்முதலான வேதாந்த வித்யைகளை நன்கு காண்பதற்குரிய தீபதண்டம்போன்றதும், ஸகலவித கலிகோலாஹலங்களையும் ஸம்ஹரிப்பதற்குரிய யமதண்டம் போன்றதும், தளர்ந்த வேதங்களுக்குக் கைப்பிடி கொடுக்கவல்ல தடிபோன்றதும், மூவுலகங்களையும் வென்று தாங்குகின்ற கொற்றக்குடைக்கு ஸ்வர்ண தண்டம் போன்றதும். ப்ரதிவாதிகளின் தலைமேல் விழும் வஜ்ரதண்டம் போன்றதுமான திவ்ய த்ரிதண்டத்தை ஸ்வாமிதாம் திருக்கையில் ஏந்தியுள்ளார்.

இந்த ச்லோகமும் த்ரிதண்டத்தின் பெருமைகூறுவது. உல்லேகாலங்கார ரீதியில் பணிக்கிறபடி. (ராமாநுஜார்ய: த்ரிதண்டம் தத்தே) எம்பெருமானார் "முக்கோல் பிடித்தமுனி" யென்று உலகம்போற்ற த்ரிதண்டத்தை திருக்கையிலேந்தி விளங்குகின்றார்; அந்த த்ரிதண்டமெப்படிப்பட்ட தென்னில்; (சாரித்ரோத்தாரதண்டம்) நல்ல அனுஷ்டானங்களைப் பயில்விப்பதற்குக் கையிலேந்திய வேத்ரதண்டமோ இது! என்னலாயிருந்தது. உலகில் உபாத்யாயர்கள் சிஷ்யர்களுக்கு ஜ்ஞாநாநுஷ்டானங்களை சிக்ஷிப்பதற்குக் கையிலே வேத்ரதண்டத்தை வைத்திருப்பதுண்டே.

(சதுரநயபதாலங்க்ரியாகேதுதண்டம்) உபயமீமாம்ஸைகளிலும் பலபல நியாயங்கள் தேறியிருப்பதுண்டே; அவற்றை இதரர்கள் பாழ்படுத்திப் போந்தனர்; அப்படியன்றிக்கே ஸ்வாமி அந்த நியாயங்களையெல்லாம் சிறிதும் நிலைகுலையாமே ஸூரக்ஷிதமாக்கியருளினராதலால் அப்படிப்பட்ட ந்யாயமார்க்கங்களை யலங்கரிப்பதற்கு நாட்டியிட்ட த்வஜதண்டமோ இது! என்னலாயிருந்தது. இத்தால் ஸ்வாமி ந்யாய மார்க்கப்ரதிஷ்டாபகர் என்றதாகும்.

(ஸத்வித்யாதீபதண்டம்) வேதாந்தத்தில் ஸத்வித்யா, அக்ஷிவித்யா, வைச்வாநர வித்யா, உபகோஸலவித்யா என்று பலவித்யைகள் ஓதப்படுகின்றன ; அவற்றுக்குத் தீபதண்ட மென்னலாம்படியுள்ளது. ஸ்வாமி அந்த வித்யைகளையெல்லாம் ப்ரகாசிப்பித்தருளினவர் என்றவாறு. அன்றிக்கே, ஸத்வித்யா என்று மிகவுயர்ந்த வித்யையான உபநிஷத்தைச் சொன்னதாகவுமாம். *ஸா வித்யா யா விமுக்தயே* என்கிற பிரமாணப்படியே மோக்ஷஸாதனமான வித்யைதானே ஸத்வித்யை.

(ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலதண்டம்) *கடலளவாய திசையெட்டினுள்ளுங் கலியிருளே மிடைதரு காலத்திலே மிக்கநான்மறையின் சுடரொளியால் அவ்விருளைத் துரந்தவர் ஸ்வாமியேயன்றோ. *கலியுங்கெடுங் கண்டு கொண்மின்* என்றவிடத்து ஐதிஹ்யமுங் காண்க. கலிகோலாஹலங்க ளெல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதில் காலதண்டம் போன்றதாம். ஸம்ஹ்ருதே: என்றும் பாடமுண்டு.

(த்ரய்யந்த ஆலம்பதண்டம்) *பிபேதி அல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி* என்கிறபடியே அபார்த்தஞ் சொல்லும் குத்ருஷ்டிகள் விளைத்த கஷ்டங்களினால் தளர்ந்துபோன வேதாந்தபுருஷனுக்குக் கைப்பிடிகொடுத்துக் கஷ்டந் தீர்க்கும் தண்டமோவிது ! என்னலாம்படியுள்ளது.

(த்ரிபுவநவிஜயச் சத்ர ஸௌவர்ணதண்டம்) மூவுலகங்களையும் திருவடிக்கீழ்ப்படுத்தி வெற்றிகொண்டமைக் கீடாகத் தாங்கிநிற்கும் கொற்றக்குடைக்கு இட்ட மணிக்காம்பு போன்றது. (ப்ரதிகதகசிரோவஜ்ர தண்டம்) எதிர்வாதம் புரியும் துர்வாதிகளின் தலைகளைத் தகர்க்கும் வஜ்ரதண்டம்போன்றது. ஆக இப்புடைகளிலே உல்லேகிக்கும் படியமைந்த த்ரிதண்டத்தை எம்பெருமானார் ஏந்திநின்று திவ்யஸேவை தந்தருளா நின்றாரென்றதாயிற்று. .... .... .... .... (3)

த்ரய்யா மாங்கல்யஸூத்ரம் த்ரியுகபதயுகாரோஹணாலம்பஸூத்ரம்
ஸத்வித்யாதீபஸூத்ரம் ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலஸூத்ரம்,
ப்ரஜ்ஞாஸூத்ரம் புதாநாம் ப்ரசமதநமந: பத்மிநீ நாளஸூத்ரம்
ரக்ஷாஸூத்ரம் முநீநாம் ஜயதி யதிபதேர் வக்ஷஸி ப்ரஹ்மஸூத்ரம். 4

த்ரய்யா: மாங்கல்ய ஸூத்ரம், த்ரியுக பதயுக ஆரோஹண ஆலம்ப ஸூத்ரம், ஸத்வித்யாதீபஸூத்ரம், ஸகலகலிகதா ஸம்ஹ்ருதே: கால ஸூத்ரம், புதாநாம் ப்ரஜ்ஞாஸூத்ரம், ப்ரசமதநமந: பத்மிநீ நாள ஸூத்ரம், முநீநாம் ரக்ஷாஸூத்ரம் ப்ரஹ்மஸூத்ரம் யதிபதே: வக்ஷஸி ஜயதி·

வேதமாதுக்கு மங்கள ஸூத்ரம் போன்றதும், ஷாட்குண்யபரிபூர்ணனை பகவானுடைய அடியிணையைச் சென்று கிட்டுவதற்கான அவலம்ப ஸூத்ரம் போன்றதும், உபநிஷத்தாகிற திருவிளக்கு எரிவதற்கான திரிநூல் போன்றதும், ஸகல கலிகோலாஹலங்களையும் மாய்ப்பதற்கான காலபாசம் போன்றதும், பண்டிதர்களுடைய மேதையை வளர்க்கும் மீமாம்ஸா ஸூத்ரம் போன்றதும் யோகிகளின் உள்ளமாகிற தாமரையோடைக்கு நாள ஸூத்ரம் போன்றது மானயஜ்ஞஸூத்ரமானது ஸ்வாமியின் திருமார்பிலே திகழாநின்றது.

ஸ்வாமியினுடைய திருமார்பிலே திகழும் யஜ்ஞ ஸூத்ரத்தை யநுபவித்துப் பேசுவது இந்த ச்லோகம். புறமதங்களிலுள்ள ஸந்ந்யாஸிகள் சிகாயஜ்ஞோபவீதங்களை யறுத்தெறிந்து*காணிலு முருப்பொலார்* என்னும்படியாயிருப்பர்கள்; ஸ்வாமி அப்படியன்றிக்கே *உபவீதிந மூர்த்வபுண்ட்ரவந்தம்* என்றும் *விமலோபவீதம்* என்றும் புகழலாம்படி திவ்யபோக்ய ஸேவைஸாதித்தருளுகையாலே அந்த யஜ்ஞோபவீதத்தை நெஞ்சார அநுபவிக்க ப்ராப்தமன்றோ. அந்த யஜ்ஞஸூத்ரம் எங்ஙனே யிரா

நின்றதென்னில்; ஸ்வாமிபக்கலுள்ள அதிசயங்களே [கீழே த்ரிதண்டத்தில் ஏறிட்டுச் சொல்லப்பட்டதுபோல] இதில் யஜ்ஞஸூத்ரத்திலேறிட்டுச் சொல்லப்படுகின்றன.

(த்ரய்யா: மாங்கல்ய ஸூத்ரம்) வேதமாதின் கழுத்திலே கட்டின மங்களஸூத்ரமோ இது! என்னலாயிருந்தது, உலகில் பெண்டிர்க்கு மங்கல ஸூத்ரமில்லாத நிலைமை இரண்டுண்டு; கன்னிகைப்பருவமும் வைதவ்ய நிலையும். கன்னிகையைப் பார்த்துப் பலரும் தங்களையே பர்த்தாவாக அபிமானிப்பர்; விதவையைக் கண்டு இவளுக்கு பர்த்தா இல்லையென்று நினைப்பர்கள். அப்படியே ஸ்வாமி அவதரிப்பதற்கு முன்னே பல தெய்வங்களைப் பரதத்வமாகப் பேசுவாரும் "தெய்வமேயில்லை, ஜகத்து அநீச்வரம்" என்று பேசுவாரும் மலிந்திருந்தார்கள். ஸ்வாமி அவதரித்தபோதே, பெண்டிர் கழுத்தில் மங்கல ஸூத்ரம் ஏறிவிட்டால் "இவளுக்கு பர்த்தாவுண்டு, ஒருவனே" என்று திண்ணமாக எண்ண நேருவது போல "ஜகத்து அநீச்வரமுமன்று, அநேகேச்வரமுமன்று; ஸ்ரீமந்நாராயண னொருவனே ஈச்வரன்" என்று நிர்ணயிக்க நேர்ந்தபடியாலே இதையிட்டு த்ரய்யா மாங்கல்ய ஸூத்ரம் என்கிறது.

(த்ரியுகபதயுக ஆரோஹணலம்பஸூத்ரம்) எம்பெருமானுக்கு த்ரியுகனென்று ஒரு திருநாமமுண்டு. வரதராஜஸ்தவத்தில் "குணைஷ் ஷட்பிஸ் த்வேதை:" என்கிற ச்லோகத்திலே அருளிச்செய்தபடியே ஜ்ஞாநசக்தி பலைச்வர்ய வீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஆறு திருக்குணங்களுடையவன் என்கிற காரணத்தினால் அத்திருநாமமாயிற்று. அப்படிப்பட்ட எம்பெருமானுடைய உபய பாதாரவிந்தங்களிலேயேறுவதற்கு ஆலம்பஸூத்ரமோ இது! என்னலாயிருந்தது. மேலேயேறவேண்டுவோர் ஒரு கயிற்றைப் பற்றிக்கொண்டு ஏறுவார்களே, அந்தக் கயிறுதானிது என்னலாம் போலும். அன்றிக்கே த்ரியுகயுகபத என்றொருபாடமுண்டு; அப்போது அர்ச்சிராதி மார்க்கமென்று பொருளாகக்கடவது. த்ரியுகமென்றால் மூவிரண்டு—ஆறு; அதற்கு மேலுள்ள யுகசப்தம் அந்த ஆறை இரட்டிக்கப்பண்ணிற்று; ஈராறு பன்னிரண்டு என்றதாயிற்று. * முக்தோர்ச்சிர் திநபூர்வபக்ஷ * என்கிற ச்லோகப்படிக்கும், *நடைபெறவங்கிப் பகலொளிநாள்* என்கிற பாசுரப்படிக்கும் அர்ச்சிராதிகள் பன்னிரண்டாதலால் த்ரியுகயுகபதமென்று அந்த அர்ச்சிராதிமார்க்கம் சொல்லிற்றுகிறது. அதிலேயேறுவதற்கு ஆலம்பஸூத்ரமென்கையாலே ஸ்வாமியையடிபணிந்தவர்களுக்கு அர்ச்சிராதிமார்க்கம் எளிது என்பது தேறிற்றுகும்.

(ஸத்வித்யாதீபஸூத்ரம்) உயர்ந்த வித்யையான உபநிஷத்துக்களாகிற திருவிளக்குகள் மேன்மேலும் ஜ்வலிப்பதற்கான திரிநூல் என்னலாயிருந்தது. எண்ணெயிருந்தாலும் திரியில்லையாகில் விளக்கு எரியாதே. (ஸகலகலிகதாஸம்ஹ்ருதே: காலஸூத்ரம்) கலிகோலாஹலங்களெல்லாம் மடிவதற்கு யமபாசம் போன்றது! புதாநாம் ப்ரஜ்ஞாஸூத்ரம்) தம்மடிபணிந்த வித்வான்களுக்கு ப்ரஜ்ஞையை விகஸிப்பிக்கவல்ல ப்ரஹ்மஸூத்ரமோ இது! என்னலாயிருந்தது. முப்புரிநூலும் மார்புமான அழகை ஸேவித்தவாறே அடியார்களுக்கு ப்ரஜ்ஞாவிகாஸ முண்டாகுமென்று கருத்து. ப்ரஜ்ஞா என்றவிடத்தில்—*ஸ்ம்ருதிர் வ்யதீதவிஷயா மதிராகாமிகோசரா, புத்திஸ் தாத்காலிகீ ப்ரோக்தா ப்ரஜ்ஞா த்ரைகாலிகீ மதா* என்பது நினைக்கத்தக்கது.

[ப்ரசமதநமந:பத்மிநீநாளஸூத்ரம்] சமதமாதி குணங்களையே செல்வமாக வுடையவர்கள் யோகிகளெனப்படுவர்கள். ஸ்வாமிதிருவடிகளை யாச்ரயித்துள்ள எம்பார் அருளாளப் பெருமாளெம் பெருமானார் போல்வார் இங்கு விவக்ஷிதர்கள். அந்த மஹான்களுடைய திருவுள்ளமாகிற தாமரை யோடைக்கு நாளஸூத்ரம்போல் அலங்காராவஹமென்றபடி. தாமரைத்தண்டுகள் விளங்குவது பொய்கைகளுக்கு

அலங்காரமிறே. இத்தால் மஹான்கள் திருவுள்ளத்திலே சிந்திக்குமது ஸ்வாமியின் யஜ்ஞஸூத்ரம் என்றதாயிற்று. [மூநிநாம் ரக்ஷாஸூத்ரம்] கீழ் ப்ரசமதநர்களாகச் சொல்லப்பட்டவர்களே இங்கு முனிவர்களாகவும் சொல்லப்படுகிறார்கள். அவர்களை ரக்ஷித்தருளும் ஸூத்ர மென்னலாம்படியுள்ளது. புறமதத்தவர்களான யதிகள்போலே யஜ்ஞஸூத்ரத்தை அறுத்தெறியாமல் ஸ்வாமி அணிந்து கொண்டிருக்கு மழகைச் சிந்தித்த மாத்திரத்திலே வீடுபெறுவார்களென்றதாயிற்று. ஆக இப்படிப்பட்ட திவ்ய யஜ்ஞோபவீதம் ஸ்வாமியின் திருமார்பிலே திகழா நின்றதென்று அநுபவித்துப் பேசினாராயிற்று. .... (4)

பாஷண்டஸாகரமஹாபடபாமுகாக்நி:
ஸ்ரீரங்கராஜசரணம்புஜமூலதாஸ:,
ஸ்ரீவிஷ்ணுலோகமணிமண்டபமார்க்கதாயீ
ராமாநுஜோ விஜயதே யதிராஜராஜ:. 5

பாஷண்டஸாகர மஹாபடபா முகாக்நி:, ஸ்ரீரங்கராஜ சரணம்புஜ மூல தாஸ:, ஸ்ரீவிஷ்ணுலோக மணி மண்டப மார்க்கதாயீ யதிராஜராஜ: ராமாநுஜ: விஜயதே.

பாஷண்டர்களாகிற கடலின் கொந்தளிப்பையடக்கும் விஷயத்தில் படபாக்நிபோன்றவரும், ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளிலே பரமபக்தியுக்தரும், ஸ்ரீவைகுண்டத்திலுள்ள திருமாமணி மண்டபத்தைச்சேரும்வழியைத் தந்தருள்பவரும் யதிகளுள் மிகச் சிறந்தவருமான எம்பெருமானார் ஸர்வோத்கர்ஷசாலியாக விளங்கா நின்றார்.

பாஷண்டர்களாகிற கடலுக்கு படபாக்நிபோன்றவ ரென்றது—அவர்களுடைய பொங்குதலையடக்கி யொழித்தவ ரென்றபடி. படபா என்று பெண் குதிரைக்குப் பெயர். கடலினிடையிலே ஒரு பெண்குதிரை யிருப்பதாகவும் அதன் முகத்திலே நெருப்பு ஒருகாலும் அவியாதிருப்பதாகவும், மழைநீர் முதலியவற்றால் கடல் பொங்காதபடி அதிகமாய் வருகிறநீரை அது உறிஞ்சிநிற்பதாகவும், அதுவே ப்ரளயகாலத்துக் கடலினின்று வெளிப்பட்டு உலகங்களை எரித்து அழிப்பதாகவும் புராணங்கள் கூறும். *தென்னரங்கன் கழல் சென்னிவைத்து நீசச்சமயங்களை நீக்கி, அடியார்க்கு உஜ்ஜீவநோபாயம் காட்டியருளா நின்ற எம்பெருமானார் ஸகலவைபவங்களும்பொலிய வாழ்ந்தருளா நின்றாரென்றதாயிற்று. .... (5)

எம்பெருமானார் திருவடிகளே சரணம்

.... ....

ஸ்ரீகாஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய

# தாடீபஞ்சகவுரை

முற்றிற்று

# அறிவிப்பு.

**எம்பெருமானுர் விஷயமாக மணவாளமாமுனிகள் அருளிச்செய்த யதிராஜ விம்சதிக்கு விரிவான வியாக்கியானம் தனியே அச்சிடப்பட்டுள்ளது. அது வேண்டுவோர் க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம் என்கிற விலாஸத்திற்கெழுதிப் பெற்றுக்கொள்வது. அவ்விடத்தில் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் யாவும் தமிழ் தெலுங்கு தேவநாகரி லிபிகளில்கிடைக்கும். ஸகல பூர்வாசார்ய க்ரந்தங்களும் கிடைக்கும். நாலாயிர திவ்யப்ரபந்தவுரைகளும் கிடைக்கும்.**

---

ஸ்ரீ

எம்பெருமானுர் திருவடிகளே சரணம்

திருமலை அனந்தாழ்வான் அருளிச்செய்த

# ஸ்ரீராமாநுஜசதுச்ச்லோகி.

**(2. உடையவர் விஷயமான இரண்டாவது ஸ்தோத்ரம்.)**

எம்பெருமானுர் பகவத் விஷய காலக்ஷேபம் நிர்வஹித்தருளா நிற்கையில் *ஒழிவில் காலமெல்லா முடனுய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாம், தெழிகுரலருவித் திருவேங்கடத் தெழில்கொள் சோதி யெந்தை தந்தைதந்தைக்கே* என்கிற பாசுரத்தை வியாக்கியானித்தருளும்போது திருமலையில் நித்யவாஸமாக இருந்து திருமலையப்பனுக்கு நித்ய கைங்கர்யம் செய்ய விருப்பமுடையார் இத்திரளில் யாரேனுமுண்டோ? என்று வினவியருள, ஒருவரும் வாய்திறவாதிருக்க, அனந்தாழ்வானொருவரே யெழுந்து இக்கைங்கர்யத்தை அடியேனுக்கு நியமித்தருளவேணுமென்று ப்ரார்த்தித்து, அனந்தாண்பிள்ளை யென்கிற விருதும்பெற்று உடனே புறப்பட்டுத் திருமலைக்கெழுந்தருளி அங்கே நித்யகைங்கர்ய நிரதராயிருக்கையில் எம்பெருமானுருடைய விச்லேஷம் பொறுக்கமாட்டாமே இந்த சதுச்ச்லோகியை யருளிச்செய்து முப்போதும் அநுஸந்தித்துக்கொண்டிருந்தாரென்று பெரியோர் பணிப்பர்.

கோயில் திருமலை பெருமாள் கோயில் திருநாராயணபுரம் ஆகிய நான்கு திருப்பதிகளிலும் எம்பெருமானுருடைய வெற்றிக்குப் பல்லாண்டு பாடுவன இந் நான்கு ச்லோகங்களும். .... .... *

**அநிசம் பஜதாமநந்யபாஜாம்**
**சரணும்போருஹமாதரேண பும்ஸாம்,**
**விதரந் நியதம் விபூதிமிஷ்டாம்**
**ஜய ராமாநுஜ ரங்கதாம்நி நித்யம். 1**

**ஹே ராமாநுஜ சரணும்போருஹம் ஆதரணே அநிசம் பஜதாம் அநந்யபாஜாம் பும்ஸாம் இஷ்டாம் விபூதிம் நியதம் விதரந் ஸந் ரங்கதாம்நி நித்யம் ஜய.**

**எம்பெருமானுரே! (உமது) திருவடித்தாமரையை அன்போடு எப்போதும் ஆச்ரயித்திருக்கின்ற அநந்ய கதிகளான அடியார்களுக்கு எந்தவிபூதி இஷ்டமோ அந்த விபூதியைத் திண்ணமாக அளித்துக்கொண்டு திருவரங்கம் பெரியகோயிலிலே எஞ்ஞான்றும் வாழக்கடவீர்.**

மதுரகவிகள், * தேவுமற்றறியேன் * என்று சொல்லி வேறொரு தெய்வமறியாதே ஆழ்வாரையே பற்றியிருந்தாப்போலே ஸ்வாமிந்! தேவரீரை இடைவிடாது அன்போடு அடிபணிந்திருக்குமடியவர்கட்கு *பொன்னுலகாளீரோ* என்றாப்போலே த்ருஷ்டாத்ருஷ்டங்களில் எதைவேண்டினாலும் அதையளித்துக்கொண்டு தென் திருவரங்கத்திலே பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருக்கவேணுமென்று மங்களாசாஸநம் செய்தாராயிற்று.

மோக்ஷப்ரதத்வமென்பது எம்பெருமானொருவனுக்கே அஸாதாரண லக்ஷணமாயிருக்க, இங்ஙனே சொல்லலாமோ? நித்யவிபூதிச் செல்வத்தை ஸ்வாமியளிக்க வல்லவரோவென்று சங்கிக்கவேண்டா; *தந்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேசகாங்க்ஷீ* என்று ந்யாஸதிலகத்திலே தேசிகன்பணித்தபடியே ஸ்வாமியின் நியமனமிருந்தாலொழிய எம்பெருமான் தானும் முத்தியளிக்கவல்லனல்லனே. தாபயித்ருத்வமும் தாத்ருத்வபர்யாயமாகக் கொள்ளப்படுவதுண்டே. அதனால் ஸ்வாமியையே முக்திப்ரதராகச் சொல்லத்தகும் .... .... .... .... (1)

புவி நோ விமதாந் த்வதீயஸூக்தி:
குலிசீபூய குத்ருஷ்டிபிஸ் ஸமேதாந்,
சகலீகுருதே விபச்சிதீட்யா
ஜய ராமாநுஜ சேஷசைலச்ருங்கே. 2

ஹே ராமாநுஜ! விபச்சித் ஈட்யா த்வதீயஸூக்திః குலிசீபூய புவி குத்ருஷ்டிபிః ஸமேதாந் நః விமதாந் சகலீ குருதே, சேஷசைலச்ருங்கே ஜய.

எம்பெருமானாரே! வித்வான்கள் போற்றத்தக்க, தேவரீரது ஸ்ரீஸூக்தியானது வஜ்ராயுதம் போன்று இப்பூமியிலுள்ள குத்ருஷ்டிகளுட்பட நமது பிரதி பக்ஷிகள் யாவரையும் பொடிபடுத்துகின்றது. (இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த ஸ்ரீஸூக்திகளை யருளிய தேவரீர்) திருவேங்கட மலையுச்சியில் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்தருள வேணும்.

* பாஹ்யாः குத்ருஷ்டய இதி த்விதயேபி * என்று ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ஆழ்வான் அருளிச்செய்தபடியே பாஹ்யர்களென்றும் குத்ருஷ்டிகளென்றும் இருவகுப்பினரான விபக்ஷர்களையும் தமது திவ்யஸூக்திகளாலே கண்டித்தொழித்தருளா நின்ற ஸ்வாமி திருமலையில் நித்யஸ்ரீர்நித்யமங்களமாகக் காட்சிதந்தருளவேணுமென்றாராயிற்று. .... .... .... .... (2)

ச்ருதிஷு ஸ்ம்ருதிஷு ப்ரமாணதத்த்வம்
க்ருபயாலோக்ய விசுத்தயா ஹி புத்த்யா,
அக்ருதாஸ் ஸ்வத ஏவ பாஷ்யரத்நம்
ஜய ராமாநுஜ ஹஸ்திதாம்நி நித்யம். 3

ஹே ராமாநுஜ ஸ்வதஏவ க்ருபயா விசுத்தயா புத்த்யா ச்ருதிஷு ஸ்ம்ருதிஷு ப்ரமாணதத்த்வம் ஆலோக்ய பாஷ்யரத்நம் அக்ருதாः, நித்யம் ஹஸ்திதாம்நி ஜய.

எம்பெருமானாரே, நிர்ஹேதுகக்ருபையினாலே ச்ருதி ஸ்ம்ருதிப்ரமாணவுண்மையையாராய்ந்துமாசற்றமதியினால் மிகச்சிறந்து ஸ்ரீபாஷ்யத்தை அநுக்ரஹித்தருளிற்று; (இப்படிப்பட்ட தேவரீர்) ஸ்ரீஹஸ்திகிரியில் நித்யஸ்ரீயாக விளங்க வேணும்.

ச்ருதிஸ்ம்ருதிப்ரமாணங்களோடு சிறிதும் முரண்படாதபடி மாசற்ற மதிகொண்டு மிகப் பொருத்தமான ப்ரஹ்ம ஸூத்ரபாஷ்யத்தைப் பரமக்ருபையினாலருளிச் செய்த எம்பெருமானார் *தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பல்லாண்டு பல்லாண்டாக விளங்கியருளவேணுமென்றாராயிற்று. .... .... (3)

ஜய மாயிமதாந்தகாரபாநோ,
ஜய பாஹ்ய ப்ரமுகாடவிக்ருசாநோ,
ஜய ஸம்ச்ரிதஸிந்துசீதபாநோ
ஜய ராமாநுஜ யாதவாத்ரிச்ருங்கே, 4

மாயிமத அந்தகார பாநோ! பாஹ்ய ப்ரமுக அடவீ க்ருசாநோ! ஸம்ச்ரித ஸிந்து சீதபாநோ! ராமாநுஜ! யாதவாத்ரி ச்ருங்கே ஜய ஜய ஜய ஜய

மாயாவாதிகளின் மதங்களாகிற இருளுக்கு இரவி போன்றவரே! பாஹ்யர்கள் முதலானவர்களாகிற காட்டுக்குத் தீ போன்றவரே! அடியார்களாகிற கடலுக்குச் சந்திரன் போன்றவரே! எம்பெருமானாரே! தேவரீர் யாதவாத்ரியில் நித்யஸ்ரீயாக நீடூழி விளங்க வேணும்.

* சங்கரபாக்கரயாதவபாட்டப்ரபாகரர் தங்கள் மதமாகிற இருளையகற்றிக் கொண்டு * அறுசமயச் செடியதனையடியறுத்து அடியார்களை வாழ்வித்தருளின ஸ்வாமி எம்பெருமானார் திருநாராயணபுரத்திலே நித்யஸ்ரீர் நித்யமங்களமாக வாழ்ந்தருளவேணு மென்றாராயிற்று. [ஸம்ச்ரித ஸிந்து சீதபாநோ !] கடல் சந்திரனைக் கண்டவாறே பொங்குமாபோலே அடியார்களும் ஸ்வாமியை ஸேவித்தவாறே வருத்தமெல்லாந் தீர்த்துமகிழ்ந்திடுவர்க ளென்றபடி. .... .... (4)

ராமாநுஜசதுச்ச்லோகீம் ய: படேந்நியதஸ் ஸதா,
ப்ராப்நுயாத் பரமாம் பக்திம் யதிராஜபதாப்ஜயோ:. 5

நித்யாநுஸந்தேயமாக நிருமிக்கப்பட்ட இந்த ராமாநுஜ சதுச் ச்லோகியை நியமத்துடன் நித்யாநுஸந்தானம் பண்ணுவார்க்கு எம்பெருமானாரது திருவடித் தாமரைகளிலே பக்திமிகுதியே கைகண்டபலனாகுமென்று பயனுரைத்துத் தலைக் கட்டினாராயிற்று. .... .... .... .... (5)

திருமலையனந்தாழ்வான் திருவடிகளே சரணம்.

திருமலை அனந்தாழ்வானருளிச் செய்த

ஸ்ரீ ராமாநுஜ சதுச்ச்லோகிக்கு

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்

இயற்றிய உரை முற்றிற்று.

———

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நித்யாநுஸந்தேய ஸ்தோத்ர மாலையில்

மணவாளமாமுனிகள் விஷயமான ஸ்துதிகள்.

எறும்பியப்பா அருளிச்செய்த

# ஸ்ரீவரவரமுநிதிநசர்யா.

(ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய வுரையுடன்.)

அவதாரிகை.

* மன்னுயிர்காளிங்கே மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை உன்னிச் சிரத்தாலே தீண்டில் அமானவனும் நம்மைக் கரத்தாலே

தீண்டல் கடன் * என்னும்படியான பெருமைவாய்ந்த ஆசார்ய ஸார்வ பௌமரான மணவாளமாமுனிகளின் நித்யாநுஷ்டாந பத்ததியை நாடோறும் அநுஸந்திப்பதே ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் உஜ்ஜீவநோபாயங்களில் தலையானதென்று பெரியோர்களின் துணிபு. இங்ஙனே நித்யாநுஸந்தானம் செய்யப் பாங்காக இந்த திநசர்யா ப்ரபந்தத்தைப் பணித்தவர் எறும்பியப்பா என்று ப்ரஸித்தரான ஸ்ரீதேவராஜாசார்யர்.

இந்த க்ரந்தம் அவதரித்தபடி யென்னென்னில்; திருக்கடிகைக்கு [சோளஸிம்ஹ புரத்திற்கு] அருகிலுள்ள எறும்பியென்னும் அக்ரஹாரத்திலே தோன்றியதனல் எறும்பியப்பாவென்று வ்யபதேசிக்கப் பெற்ற மிகச் சிறந்த வித்வானுயிருந்த இவ்வாசிரியர் திருவரங்கம் பெரியகோயிலில் நம்பெருமாளை ஸேவிக்க விடைகொண்டு அங்கே தமக்கு தேஹபந்துவான கோயிலண்ணனுடைய திருமாளிகையில் தங்கியிருக்கையில் அவரோடுகூட மணவாளமாமுனிகளின் காலக்ஷேப கோஷ்டியிலும் அந்வயிக்கபாக்யம் பெற்றுர். அப்போது மாமுனிகளின் ஸர்வதோமுகமான ப்ரஜ்ஞா விசேஷத்தைக் கண்டு களித்தும் அவர் திருவடிகளில் ஆச்ரயிக்க பாக்யபரிபாகம் விளையாமையாலே மாமுனிகளிடத்தில் தீர்த்தப்ரஸாதங்களும் பெருமலே தம்முடைய வூருக்குத் திரும்பிவிட்டார். அங்கே நித்யகர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு, தம் திருமாளிகைப் பெருமாளுக்குத் திருவாராதனம் கண்டருளப் பண்ணப்புகுந்து தம் திருவாராதனமான சக்ரவர்த்தி திருமகன் ஸந்நிதியில் தெண்டன்ஸமர்ப்பித்து *கௌஸல்யா ஸுப்ரஜா ராம* என்று அநுஸந்தித்துக்கொண்டே கோயிலாழ்வார் திருக்காப்பை நீக்கப்புக, திருக்காப்பு திறக்கப்பெற்றதில்லை; பின்பு பலவாறு உபாயங்கள் செய்துபார்த்தும் ஒருபடியாலும் திறக்கப்போகாமையாலே பரமதுஃக்கபர்யாகுலராய் அமுது செய்யாமலே 'இது என்ன அபசாரபலனே!' என்று மனம் நொந்து முசித்துக் கிடந்தார். அன்றிரவு அவர்கனவில் சக்ரவர்த்தி திருமகன் ஸேவைதந்தருளி "நமக்கு ஆருயிராய் உலகுக்கு ஒருயிரான மணவாளமாமுனிகளின் திருவடிகளிலே ஆச்ரயியாதே தீர்த்தப்ரஸாதமும் ஸ்வீகரியாதே மீண்டுவந்தீராகையாலே உமக்கு நாம் கதவு திறந்திலோம்; திருவனந்தாழ்வான்தானே அவராகவந்து அவதரித்தமை அறிவீராக; அவர் திருவடிகளில் சென்று ஆச்ரயித்துத் தூய்மை பெற்றுவந்தாலன்றி உமது கையில் நாம் திருவாராதனம் கொள்ளக் கடவோமல்லோம்; சடக்கெனப் போகீர்" என்று நியமித்தருள; அப்பாவும் துயிலெழுந்து விஸ்மிதராய் இவ்வதிசயத்தை அன்பர்களுக்கு அறிவித்து அப்போதே புறப்பட்டுப் பயணகதியிலே நம்பெருமாள் ஸன்னிதி சென்று சேர்ந்தார். அப்போது மணவாளமாமுனிகள், ஸந்நிதியில் மங்களாசாஸனம் செய்தருளத் தம்முடைய மடத்திலிருந்து புறப்படும் அவஸரமாயிருந்தது. அப்பாவும் அவ்விடத்திலே மாமுனிகளைத் திருவடி தொழுது அவருடைய விசேஷகடாக்ஷத்திற்குப் பாத்ரபூதராகி, க்ரமேண தம்முடைய இல்லத்தில் நடந்த செய்திகளையெல்லாம் விண்ணப்பஞ்செய்து வேரற்ற மரம்போலே திருவடிகளிலே விழுந்து அபராதக்ஷாமணம் செய்துகொண்டு 'இனி அடியேனுக்கு இத்திருவடி நிழலொழியப் புகலிடம் வேறென்றில்லை; * நெறிகாட்டி நீக்கப்பாராதே அத்தாணிச் சேவகத்திற்கு ஆட்படுத்திக்கொண்டருள வேணும்' என்று மிகவும் பிரார்த்தித்து மாமுனிகளின் நிரவக்ரஹமான அநுக்ரஹத்தைப் பெற்று மறுநாளே திருவிலச்சினையும் பெற்று அன்றுதொடங்கி ஸகலார்த்தங்களும் சிக்ஷிக்கப்பெற்று க்ருதார்த்தராய், தம்முடைய பரமபக்தி பரீவாஹரூபமாக மணவாளமாமுனிகள் விஷயமாகக் காவ்யநாடக சம்பூ ஸ்தோத்ரங்கள் முதலியன பலவும் பணித்தார். அவற்றுள் முந்துற முன்னம் பணித்தது இந்த திநசர்யா திவ்ய க்ரந்தமாகும்.

இது, பூர்வதிநசர்யையென்றும் உத்தரதிநசர்யையென்றும் இரண்டுபகுதியாக வகுப்புண்டிராநின்றது. பகலில் நடைபெறக்கண்ட அநுஷ்டாநக்ரமங்களைப் பூர்வ திநசர்யையினுல் பேசி, ஸாயம்ஸந்த்யைக்குப்பிறகு நடைபெறக்கண்ட அநுஷ்டா நக்ரமங்களை உத்தரதிநசர்யையினுல் பேசுகின்ருர்.

பூர்வதிநசர்யையில் * அங்கே கவேரகந்யாயா: * என்று தொடங்கி * பவேயம் பவது ககாநாம் அஸஹ்யாநாமநாஸ்பதம் * என்னுமளவுமுள்ள பதின்மூன்று ச்லோகங்களும் இவ் வாசிரியர்தாம் மாமுனிகளின் ஸந்நிதிக்கு விடைகொண்டவளவில் கண்டகாட்சி யைக் கூறியும் மாமுனிகளை வருணித்தும் போந்தவையாகையாலே அதுவரையில் உபோத்காதமென்று கொள்ளத்தக்கது. அதற்குமேல் * பரேத்யு: பச்சிமே யாமே* என்கிற பதினன்காவது ச்லோகந்தொடங்கியே மாமுனிகளின் திநசர்யாக்ரமங்களைப் பேசுகிறபடி. தாம் கோயிலுக்குச் சென்றமறுநாள் பின்மாலைதொடங்கித் தாம் கட் கூடாகக் கண்டநுபவித்த அநுஷ்டாந ப்ரகாரங்களையே பேசுகிறபடி. மறுநாளே தமக்கு ஸ்வாமிபஞ்சஸம்ஸ்காரம் ப்ரஸாதித்தருளினபடியையும் பத்தொன்பதாவது ச்லோகத்திலே பணிக்கின்ருர். ஒருஸம்வத்ஸரம் குருகுல வாஸம்பண்ணிப் பெற வேண்டிய அப்பேறுதன்னைக் கோயிலண்ணன் முதலான பரிவர்கள் தம்பக்கலிலே மிகவும் இரக்கங்கொண்டு ஸ்வாமிதிருவடிகளிலே ப்ரார்த்தித்து அன்றேபெறுவித் தார்கள் என்று க்ருதஜ்ஞதையையும் வெளியிட்டுக் கூறுகிறபடி—*தத்ப்ரார்த்தநாநு ஸாரேண ஸம்ஸ்காராத் ஸம்விதாய மே * என்று.

ஸ்வாமியின் வைபவவிஷயகங்களான காவ்ய நாடக சம்பூக்ரந்தங்களையும் சதகம்முதலான ஸ்தோத்ரங்களையும் பணித்தபிறகு இந்த திநசர்யா ப்ரபந்தத்தைப் பணித்ததாகக் கூறுவாருமுளர். ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவாராதனம் தலைக்கட்டி ப்ரஸாதஸ்வீகாரம் செய்யப்புகுகையில் இந்த திநசர்யா ப்ரபந்தத்தை எங்கும் நெடு நாளாக நியமேந அநுஸந்திக்கக் காண்கையாலே இது பரமபவித்திரமான பங்க்தி பாவந ப்ரபந்தமென்று தெரியலாகும். .... .... .... *

அவதாரிகை முற்றிற்று.

(எறும்பியப்பாதனியன்.)

**ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ரசரணம் புஜஷட்பதம்,**
**தேவராஜகுரும் வந்தே திவ்யஜ்ஞாநப்ரதம் சுபம்.**

மணவாளமாமுனிகளின் திருவடிகளாகிற தாமரைமலரிலே வண்டுபோல் படிந்திருப்பவரும், அடியார்களுக்கு திவ்யமான ஞானத்தையளிப்பவரும், க்ஷேமங் கரரும், ஸ்ரீ தேவராஜாசார்யரென்று திருநாமம் பூண்டவருமான எறும்பியப்பா வைத் தொழுகின்றேனென்றபடி. .... .... .... *

தனியனுரை முற்றிற்று.

---

ஸ்ரீ:

# பூர்வதிநசர்யா.

**அங்கே கவேரகந்யாயாஸ் துங்கே புவநமங்களே,**
**ரங்கே தாம்நி ஸுகாஸீநம் வந்தே வரவரம் முநிம்.** 1

இந்த ச்லோகம் இந்த ப்ரபந்தத்திற்கு மங்களாசரண ரூபமாக அமைந்த தாகும். திருக்காவேரியின் பரிஸரத்திலே மிகச் சிறந்ததாயும் ஸகலலோகக்ஷேமங் கரமாயும் விளங்காநின்ற திருவரங்கந் திருப்பதியிலே இனிதுவாழ்கின்ற மணவாள மா முனிகளை யடிபணிகின்றேனென்றவாறு. மாமுனிகளின் ஆசார்யரான திருவாய் மொழிப்பிள்ளையின் காலம் வரையில் திருவரங்கமாநகர்க்குப் பலபல உபப்லவங்கள் நேர்ந்து கொண்டிருந்ததாகவும், ஸ்வாமி இத்தலத்திலே அடியிட்டதுமுதலாக ஒரு வகையான உபப்லவமுமின்றிக்கே ஸகலவிபத்துக்களும் நீங்கிச் சேமவாழ்ச்சி விளைந்த தாகவுமுள்ள ப்ரஸித்தி ஸுகாஸீநம் என்கிற விசேஷணத்தினால் ஸூசிப்பிக்கப்படுவ தாகப் பெரியோர் பணிப்பர். .... .... .... .... (1)

**மயி ப்ரவிசதி ஸ்ரீமந்மந்திரம் ரங்கசாயிந:,**
**பத்யு: பதாம்புஜம் த்ரஷ்டும் ஆயாந்தமவிதூரத:. 2**

இந்த ச்லோகம்தொடங்கி * பவேயம் பவதுஃககாநாம் அஸஹ்யாநாம் அநாஸ்பதம் * என்கிற பதின்மூன்றும் ச்லோகம்வரையில் ஏகாந்வயமாயிருக்கும். ஆயாந்தம் என்பது முதலாக ச்லோகந்தோறுமுள்ள த்விதீயாந்த விசேஷணங்களெல்லாம் மேலே பன் னிரண்டாவது ச்லோகத்தின் முதலிலுள்ள பவந்தம் என்கிற விசேஷ்யத்திலே அந்வயிப் பனவாம். அந்த ச்லோகத்தில் * முநே வரவரஸ்வாமிந்! * என்று ஸம்போதந மிருக்கை யாலே அதற்கடுத்த ச்லோகம் வரையில் இதெல்லாம் ஸ்வாமியை முன்னிலைப்படுத் தியே பேசுவதாயிருக்கும். நான்காவது ச்லோகத்தில் * பவத்ப்ரியேள * என்ற முன் னிலை நிர்தேசமும் காண்க.

ஸ்வாமிந்! தேவரீரை ஸேவிக்க அடியேன் நெடுந்தூரத்தில் நின்று ஆர்த்தி யோடு ஓடிவாராநிற்க, தேவரீர்தாமே நிர்ஹேதுகமாக அடியேனை விஷயீகரிக்கத் திரு வுள்ளம்பற்றி என்னைத்தேடிப் புறப்பட்டு வந்தருளுகிறுப்போலிருக்கிறதே! என்கிற வுகப்புத்தோற்ற "மயி ப்ரவிசதி" என்றும் "ஆயாந்தம் அவிதூரதஃ" என்றும் கூறுகிறார். ரங்கசாயிநஃ ஸ்ரீமத் மந்திரம் மயி ப்ரவிசதி ஸதி—ஸ்ரீரங்கநாதனுடைய ஸந்நிதியிலே அடியேன் பிரவேசித்துக்கொண்டிருக்கையில் என்று சிலர்:பொருள் கூறுவர்; அந்வயக்ரமமும் இப்படியன்று, பொருளுமிதுவன்று. "ஸ்ரீமந்மந்திரம் மயி ப்ரவிசதிஸதி, பத்யுஃ ரங்கசாயிநஃ பதாம்புஜம் த்ரஷ்டும் அவிதூரதஃ ஆயாந்தம்" என்று அந்வயம். ஸ்ரீமந் மந்திரம் என்று ஸமஸ்தபதம்; "ஸ்ரீமதோ மந்திரம்—ஸ்ரீமந் மந்திரம்" என்று ஷஷ்டீ தத்புருஷன். ஸ்ரீமதஃ என்றது தேவரீருடைய என்றபடி. இவர் தாம் பகவந்நியமனத் தினால் மாமுனிகளை ஸேவிக்க வந்தாரேயல்லது ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க வந்தா ரல்லர்; அப்படிப்பட்டவிவர் முந்துறமுன்னம் ஸ்ரீரங்கநாதன் ஸந்நிதியில் ப்ரவேசிக்க ப்ரஸக்தியில்லாமையாலே அப்பொருள் இங்கு உசிதமன்று. திருவரங்கம் வந்து சேர்ந்து அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு மாமுனிகளை ஸேவிக்க விரும்பி அவருடைய ஸன்னிதாநத்தை நோக்கிச் சென்றார்; இவர் உள்ளே புகாநின்ற ஸம யம் மாமுனிகள் தம்முடைய ஆஸ்தானத்திலிருந்து ஸந்நிதியில் மங்களாசாஸ நார்த்தமாகப் புறப்பட்டு எழுந்தருளுகிற ஸமயமாயிருந்தது. அதை அப்படியே கூறுகின்றார். "தேவரீருடைய மந்திரம்" என்று சொல்லவேண்டுவதை வடமொழி யில் "பவந் மந்திரம்" என்று சொல்லுவதைவிட "ஸ்ரீமந் மந்திரம்" என்று சொல்லுவதே சிறப்புப் பொருந்திய வார்த்தைப்பாடு, ஆகவே அடியேன் தேவரீருடைய ஸந்நி தானத்தை நோக்கி வருகையில், தேவரீர் ஸ்ரீரங்கநாதனைத் திருவடி தொழுவதற் காக உள்ளிருந்து புறப்பட்டெழுந்தருளாநின்றது-என்று இந்த சலோகத்தால் சொல் லிற்றாயிற்று. அவிதூரதஃ—அதிக ஸமீபத்திலுமன்றிக்கே அதிகதூரத்திலு மன்றிக்கே நடுத்தரமான விடத்தில் மடத்தினுள்ளேயே ஸேவைஸாதித்தருளினமை சொன்ன படி. .... .... .... .... .... .... (2)

**ஸுதாநிதிமிவ ஸ்வைரஸ்வீக்ருதோதக்ரவிக்ரஹம்,**
**ப்ரஸந்நார்க்க ப்ரதீகாச ப்ரகாச பரிவேஷ்டிதம். 3**

*தேசாரும்சிச்சன் அவன் சீர்வடிவை ஆசையுடன் நோக்குமவன்* என்று
உபதேசரத்தினமாலையில் அருளிச்செய்தபடி சிஷ்யனுக்கு ஆசார்யனுடைய திவ்ய
மங்கள விக்ரஹத்தில் நோக்கு பரமோத்தேச்யமாகையாலே முதலடியிலே மாமுனி
களின் வடிவழகை நோக்கி அதன் வைலக்ஷண்யத்திலே நெஞ்சைப் பறிகொடுத்துப்
பேசுகிறார். அமுதக்கடல்தானே இப்படியொரு திவ்யமங்கள விக்ரஹபரிக்ரஹம்
பண்ணவேணுமென்று ஆசைப்பட்டு மாமுனிகளாக வடிவெடுத்ததென்னலாயிருந்
தது. பரமஸத்வநிதியான மாமுனிகளின் திருக்கோலமானது *மண்ணும் நீரெரிகால்
மஞ்சுலாவுமாகாசமுமாம் புண்ணுராக்கை* என்றும் *மஞ்சுசேர்வானெரி நீர்நிலங்
காலிவை மயங்கிநின்ற அஞ்சுசேராக்கை* என்றும் சொல்லுகிறபடியே பஞ்சபூத
ஸமஷ்டியாயிருக்க ப்ரஸக்தியில்லாமையாலே * இச்சாக்ருஹீதாபிமதோருதேஹః * என்னப்
பட்ட எம்பெருமானது திருமேனிபோலவே ஸ்வாமி திருமேனியும் அப்ராக்ருத
மென்று உள்ளபடி ப்ரதிபத்திபண்ணினுராயிற்று. ஸ்வைரஸ்வீக்ருத உதக்ர விக்ரஹம்
ஸுதாநிதிமிவ (ஸ்திதம்) பவந்தம் என்று அந்வயிப்பது. ஸ்வேச்சையினுலே ஸ்வீகரிக்கப்
பட்ட அதிரமணீய திவ்ய தேஹத்தையுடைய அமுதக்கடல் போன்று விளங்குகின்ற
தேவரீரை யென்றபடி. இன்னமும் எப்படிப்பட்டவரென்னில்; ப்ரஸந்நார்க்கப்ரதீகாசப்ர
காசபரிவேஷ்டிதம் = கண்கூசாமல் காணத்தக்க ஸூர்யனொருவனிருந்தால் அவனுடைய
வொளிபோன்ற வொளியையுடையவரென்னலாம்; இது அபூதோபமை. [இல்
பொருளுவமையென்பர் தமிழர்.] சந்திரனுடைய தண்ணளியையூட்டப்பெற்ற
ஸூர்யன்போல் ஸேவைஸாதித்தருளாநின்றீரென்கை. * ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம் *
என்றுப்போலே. ப்ரதீகாச என்றது, ஸமாநமென்றபடி. *நிபஸங்காசநீகாசப்ரதீகாசோப
மாதயः* என்பது அமரகோசம். .... .... .... .... (3)

**பார்ச்வத: பாணிபத்மாப்யாம் பரிக்ருஹ்ய பவத்ப்ரியௌ,**
**விந்யஸ்யந்தம் சநைரங்க்ரீ ம்ருதுலௌ மேதிநீதலே. 4**

கீழே '' ஆயாந்தம் அவிதூரதః '' என்று மாமுனிகள் தமதுமடத்தில் உள்
ளிருந்து எழுந்தருளாநின்றமை சொல்லப்பட்டதே; அப்படியெழுந்தருளுகிற ஸந்
நிவேசம் இவர் தம்மால் எவ்வண்ணம் ஸேவிக்கப்பட்டதோ அவ்வண்ணம் பேசு
கிறார் இதில். செந்தாமரை போன்ற திருக்கைகளால் மாமுனிகள் தமக்கு அந்த
ரங்க ப்ரீதிபாத்ர பூதர்களான இரண்டு சிஷ்யர்களை இருபக்கங்களிலும் பற்றிக்
கொண்டு ஸுகுமாரமான திருவடிகளால் மெல்லிதாக நடந்துகொண்டு எழுந்தருளு
கிறபடியைப் பணித்தாராயிற்று. இவ்விரண்டு அந்தேவாஸிகளின் திருநாமங்களைச்
சொல்லாமையாலே; கோயிலண்ணனும் அவருடைய திருத்தம்பியாரும்-என்று
சொல்லுவாருமுளர்; கோயிலண்ணனும் வானமாமலைஜீயரும் என்று சொல்லுவாரு
முளர். திருநக்ஷத்ர முதிர்ச்சியாலே திருமேனி தளர்ந்திருந்தமை பற்றி ஹஸ்தா
வலம்பஸாபேக்ஷராய் எழுந்தருளினபடி. இரண்டு திருக்கைகளாலும் இருவரைப்
பற்றிக்கொண்டால் த்ரிதண்டதாரணம் எப்படிச்செய்ய முடியுமென்று சங்கித்துக்
கொண்டு சிலர் கூறும் பரிஹாரங்கள் சாஸ்த்ரஸரணிக்குச் சிறிதும் இணங்காதவை.
வஸ்துதః இந்த சங்கைக்கு ப்ரஸக்திதானும் இங்கு இல்லையென்பதை விவேகிகள்
ஊன்றியுணரவேணும். கீழே * மயி ப்ரவிசதி ஸ்ரீமந்மந்திரம் * என்றவிடத்து உரையில்
நாம் தெளிவாக விவரித்துரைத்தபடி மாமுனிகள் தமது மடத்திற்குள்ளேயே
ஓரிடத்திலிருந்து புறப்பட்டு எழுந்தருளி வருகிறபடியைச் சொல்லுமதான இந்தப்ர
கரணத்தில் த்ரிதண்டம் திருக்கையிலுள்ளதா இல்லையா? என்கிற விசாரமே அந
பேக்ஷிதம். அஃது இருக்கவுமாம் இல்லாதிருக்கவுமாம். இரண்டு திருக்கைகளாலும்
இரண்டு அந்தேவாஸிகளைப் பற்றிக்கொண்டு எழுந்தருளினதாக இங்குச் சொன்ன

தன் கருத்தை ஊன்றிநோக்குங்கால், ஸ்வாமி அவர்களுடைய கைகளைப்பற்றிக் கொண்டதாகவே சொல்லியாகவேண்டிய அவசியமில்லை: அவர்கள் ஸ்வாமிக்குத் துணைபுரிய ஸ்வஹஸ்தாவலம்பம் கொடுத்தார்களென்பதே இங்கு விவக்ஷிதம். இது தான் யுக்தமான அநுஷ்டானம். மூலத்தில் வசநவ்யக்தி அப்படியில்லையேயென்கிற ஆக்ஷேபம் ப்ராஜ்ஞர்கள் செய்யக் கூடியதன்று. பரிக்ருஹ்ய என்றது ஸ்வீகரித்து என்றபடி. தம்முடைய திருக்கைகளை அவர்கள் பிடித்துக்கொள்ள இசைந்திருந்தாலும் இங்ஙனே ச்லோகமியற்றத் தட்டில்லையன்றோ. அன்றியும், கையைப்பிடித்துக் கொள்வதென்பதேயில்லாமல் இரண்டு பக்கத்திலும் இரண்டு அன்பர்கள் துணையாக வந்துகொண்டிருந்தார்கள் என்கிறவளவையேகொண்டு இங்ஙனே ச்லோகவிந்யாஸம் பண்ணினாரென்னவுங் குறையில்லை. இந்த நிர்வாஹம் நெஞ்சிற்பதிய ஒன்று காட்டுகிறோம்; * லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் * என்கிற ச்லோகம் உலகமறிந்தது. லக்ஷ்மீந்ருஸிம்ஹனே! எனக்கு நீ கைப்பிடிகொடுக்கவேணுமென்று இதனால் வேண்டப்படுகிறது. 'உன்னுடைய அநுக்ரஹம் என்மீதிருக்கவேணும்' என்று சொல்வதற்குப் பர்யாயமாகவே 'கராவலம்பம் தேஹி' என்று சொல்லப்பட்டிரா நின்றது. அன்றியும், யதிராஜஸப்ததியில் "பரப்ரஹ்மணః கரக்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநிః" என்று உள்ளது. எம்பெருமானார் எம்பெருமானுக்குக் கைப்பிடி கொடுப்பதாக முக்தகண்டமாய்ச் சொல்லப்படுகிறது இதனால். ஆனால் உண்மையில் கைப்பிடி கொடுக்கிறாரல்லரே. இதெல்லாம் உபசாரவழக்கு என்பதை * பறவையேறு பரம்புருடா நீ யென்னைக் கைக் கொண்டபின் * என்ற பெரியாழ்வார் திருமொழியாலும் நன்குணரலாம். ப்ரக்ருதத்தில், மாமுனிகள் தாமே இரண்டட்டத்திலும் இரண்டு அன்பர்களின் கையைப்பிடித்துக் கொண்டெழுந்தருளினதாகவே பொருள் கொண்டாலும் அதனால் ஒரு சாஸ்த்ரார்த்தத்திற்கும் ஒருகுறையுமில்லை; இது மடத்திற்குள்ளே நிகழ்ந்தபடியைச் சொல்லுவதத்தனையேயாதலால். ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனை மங்களாசாஸனஞ் செய்தருள வெளியே புறப்பட்டருளும்படியை மேலே *ததஸ் ஸார்த்தம் விநிர்கத்ய ப்ருத்யைர் நித்யாநபாயிபிः, ஸ்ரீரங்கமங்களம் த்ரஷ்டும் புருஷம் புஜகேசயம்* என்கிற இருபத்திரண்டாம் ச்லோகத்தில்தான் ப்ரஸ்தாவிக்கப் போகிறாரென்பதை உள்ளபடியறியகிற்பார்க்கு இன்னமும் விரித்துரைக்கவேண்டா வென நிற்கிறோம். .... .... .... .... .... (4)

ஆம்லாநகோமலாகாரம் ஆதாம்ரவிமலாம்பரம்,
ஆபீநவிபுலோரஸ்கம் ஆஜாநுபுஜ பூஷணம். 5

ஸ்தநந்தயப்ரஜை தாயின் முலையிலே முந்துற முன்னம் வாய்வைக்குமாபோலே இவரும் முதல் தன்னிலே ஸ்வாமியின் திருவடிகளிலே கண்வைத்தபடியைக் கீழ்ச் லோகத்தில் *அங்க்ரீ ம்ருதுலௌ மேதிநீதலே* என்பதனால் வெளியிட்டு இப்போது மற்றுள்ள திவ்யாவயவங்களிலும் திருப்பீதாம்பரத்திலும் கண் செலுத்திப் பேசுகிறார். சிறிது தளர்ந்து பரம ஸௌந்தரமான திருமேனியையுடையீர்; திருவரையிலே சிவந்து பளபளென்ற திருவாடையையுடையீர்; உத்துங்கவிசாலவக்ஷஸ் ஸ்தலத்தையுடையீர்; திருமுழந்தாளளவுந் தொங்குகின்ற திருக்கைகளையே திவ்யபூஷணமாகக்கொண்டு விளங்காநின்றீர் என்று முன்னிலையாகவே பேசினாராயிற்று.

முதல்பாதத்தில் 'அம்லாந' என்று சிலர் பாடங்கொண்டு வாடாக்குறிஞ்சி போல் அழகிய திருமேனியையுடையீர் என்று பொருள் கூறுவர். அது ஸஹ்ருதய ஹ்ருதயங்கமமன்று. ம்லாந சப்தத்தின்மேல் ஆங் ஏறியிருப்பதாகக்கொண்டு பொருளுரைப்பதே பொருத்தம். வயः பரிணமத்தாலே யுண்டான ம்லாநியும் *கிமிவ ஹி மதுராணாம் மண்டநம் நாக்ருதீநாம்* என்ற கணக்கிலே சோபாதிசயாவஹமாகவே யிருக்கு

மாயிற்று. அது தோன்றவே கோமல என்ற விசேஷணமுமிட்டது. புஜபூஷணம் என்றவிடத்தில் புஜங்களிலேயுள்ள பூஷணமென்று மயங்கத் தகாது; புஜங்களாகிற பூஷணமுடையீர் என்றபடி. (5)

**ம்ருணாலதந்து ஸந்தாந ஸம்ஸ்தாந தவலத்விஷா, 6**
**சோபிதம் யஜ்ஞஸூத்ரேண நாபிபிம்ப ஸநாபிநா.**

திருமார்பில் திகழாநின்ற யஜ்ஞோபவீதத்தை யநுபவித்துப் பேசுகிறார் இதில். ம்ருணாலதந்து ஸந்தாநமாவது— தாமரைக்கொடியினுள்ளேயுள்ள நூற்களின் தொகுதி. அதினுடையஸந்நிவேசம்போல் வெளுத்த வொளியையுடையதாகித் திரு நாபிமண்டலத்தளவும் தொங்குகின்ற திருயஜ்ஞோபவீதத்துடன் திகழாநின்றீர்.(6)

**அம்போஜபீஜமாலாபி ரபிஜாத புஜாந்தரம், 7**
**ஊர்த்வபுண்ட்ரை ருபச்லிஷ்டம் உசிதஸ்தாந லக்ஷணை:.**

தாமரைமணிகளினாலமைக்கப்பட்ட மாலைகளினால் அழகிய திருமார்பை யுடையீர்; திருநெற்றி முதலான ஸ்தானப்பொருத்தமும் லக்ஷண ஸௌஷ்டவமும் வாய்ந்த த்வாதசோர்த்வபுண்ட்ரங்கள் திருமேனியில் இயற்கையாகவே தோன்றி னவோ! என்னலாம்படி பொருந்தப் பெற்றிரா நின்றீர். துளஸீ நளிநாக்ஷமாலைகள் முதலிய திருமணித்தாவடங்கள் அணிந்திருக்குமழகையும் பன்னிருதிருநாமங்கள் பளபளவென்று விளங்குமழகையும் அநுபவித்தாராயிற்று. .... .... (7)

**காச்மீர கேஸரஸ்தோம கடார ஸ்நிக்த ரோசிஷா, 8**
**கௌசேயேந ஸமிந்தாநம் ஸ்கந்தமூலாவலம்பிநா.**

குங்குமப் பூக்களின் திரட்சிபோல் சிவந்தும் பளபளத்தும் விளங்குகின்ற காந்தியையுடையதாய், திருத்தோள்களிலே தொங்கவிடப்பட்டிருப்பதான காஷா யோத்தரீயத்தினால் பரபாக சோபைபெற்று ப்ரகாசியா நின்றீர்என்கை. உத்த மாச்ரமிகளுக்கு உத்தரீயதாரணம் கூடாதென்கிற நிஷேதம் திவ்யதேச ப்ராவண்ய மின்றிக்கே வர்ணதர்மைக நிஷ்ணாதர்களான யதிகளை நோக்கியதென்று அறியக் கடவது. .... .... .... .... .... .... (8)

**மந்த்ரரத்நாநுஸந்தாந ஸந்ததஸ்புரிதாதரம்- 9**
**ததர்த்ததத்த்வ நித்யாந ஸந்நத்த புலகோத்கமம்.**

மந்த்ர ரத்நமென்கிற த்வயமந்த்ரத்தை இடைவீடின்றி யநுஸந்திப்பதனால் துடிப்பது போல் விளங்காநின்ற திருப்பவளத்தையுடையீர்; இந்த த்வயத்தின் ஆழ்பொருளைச் செவ்வனே சிந்தனை செய்வதனால் புளகாங்கிதமான திருமேனியை யுடையீர்.

த்வய மந்த்ரத்திற்கு மந்த்ரரத்ந மென்கிற பதம் யோகரூடியாயிருக்கும். "ஸர்வேஷாமேவ மந்த்ராணும் மந்த்ர ரத்நம் த்வயாஹ்வயம்" என்கிற பாஞ்சராத்ரவசநம் இங்கே அநுஸந்தேயம். ''த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா'' என்கிற கத்ய ஸ்ரீஸூக்தியும் ''யாவச்சரீரபாதம் து த்வயமாவர்த்தயேந் மநும்'' என்கிற பராசர வசனமும் த்வயாநுஸந்தாநத்தை அவிச்சிந்நமாகச் செய்து போரும்படி விதிக்கையாலே அதை யநுஸரித்து ஸ்வாமியின் அநுஷ்டான மிருக்கிறபடி. காலக்ஷேபாதி ஸமயங்கள்போக மிக்குள்ள காலங்களில் த்வயாநுஸந்தாந நிரதரா யிருப்பார்கள் ஆசார்ய ஸார்வ பௌமர்களென்க.

"ததர்த்த நித்யாந" என்னுமல் *ததர்த்த தத்வ நித்யாந* என்றவிதில் ரஹஸ்யார்த்த விசேஷமொன்றுண்டு. த்வயத்தின் அர்த்தம் அஷ்டச்லோகி முமுக்ஷுப்படி முதலானவற்றிலே விசதம்; அர்த்தத்தின் தத்த்வமாவது என்னென்னில்; ஸ்ரீமந்நாராயண சரணௌ என்கிற பூர்வவாக்யத்தில் ஸ்ரீமந்நாராயண சரணமென்று நம்மாழ்வார் விவக்ஷிதர்; அவருடைய சரணமென்று எம்பெருமானர் விவக்ஷிதர். அர்ச்சாவதாரங்களிலெங்கும் எம்பெருமானுடைய திருவடி நிலைக்கு ஸ்ரீசடகோபனென்றும். அந்த ஆழ்வாருடைய திருவடி நிலைக்கு இராமாநுசன் என்றுமிறே ப்ரஸித்தியுள்ளது. சரணௌ என்கிற த்விவசநத்தினுல் இவ்விரண்டு திருநாமங்களையும் சிந்தனை செய்வது அர்த்ததத்வ நித்யாநமாகும். (9)

ஸ்மயமாநமுகாம்போஜம் தயமாந த்ருகஞ்சலம்-
மயி ப்ரஸாதப்ரவணம் மதுரோதாரபாஷணம்- 10

புன்முறுவல்பூத்து விளங்குகின்ற முகாரவிந்தத்தையுடையீர்; திருவுள்ளத்திலுள்ள க்ருபாதிசயத்தைக் கோள் சொல்லித் தருகின்ற கடாக்ஷ வீக்ஷணத்தையுடையீர்; இன்றளவும் அடிபணியாதே இன்ருக அடிபணியவந்த அடியேன்பால் ஆதரம் பெருகநின்றீர்; அநுக்ரஹமே வடிவெடுத்தாற்போன்று சப்தபுஷ்டியும் அர்த்த புஷ்டியும் கொண்ட இனிய திருவாசகங்களையுடையீர். .... ....(10)

ஆத்மலாபாத் பரம் கிஞ்சிதந்யந்நாஸ்தீதி நிச்சயாத்,
அங்கீகர்த்துமிவ ப்ராப்தம் அகிஞ்சநமிமம் ஜநம். 11

*குருமாமணிப்பூண் குலாவித்திகழுந் திருமார்பனுன எம்பெருமானுக்குக் கௌஸ்துப ஸ்தாநீயமான ஒரு ஆத்மாவைத் திருத்திப்பணிகொண்டு பெறுமதிற்காட்டிலும் வேறுபுருஷார்த்தம் எதுவுமில்லை என்கிறவுறுதியினுல், ஆகிஞ்சந்யமே வடிவெடுத்த அடியேனைத் திருவுள்ளம் பற்றுகைக்காக ஆபிமுக்யந்தோற்ற எழுந்தருளாநின்றீர்போலுமென்கிருர். (11)

பவந்தமேவ நீரந்த்ரம் பச்யந் வச்யேந சேதஸா,
முநே வரவரஸ்வாமிந் முஹுஸ் த்வாமேவ கீர்த்தயந். 12
த்வதந்ய விஷயஸ்பர்சவிமுகைரகிலேந்த்ரியை:,
பவேயம் பவதுக்காநாம் அஸஹ்யாநாமநாஸ்பதம். 13

கீழ்ச்லோகங்களில் வந்த த்விதீயாந்த விசேஷணங்களெல்லாம் இந்த ச்லோகத்திலுள்ள பவந்தம் என்கிற விசேஷ்யபதத்தில் அந்வயித்து முடிவுபெறுகின்றன. மணவாளமாமுனிகளே! கீழ்ச்சொன்ன பெருமைகளெல்லாம் வாய்ந்த தேவரீரையே இடைவிடாது கண்ணுரக்கண்டு கொண்டிருப்பேனுய், தேவரீருடைய கடாக்ஷவிசேஷத்தினுல் எனக்கு ஸ்வாதீநமாகப்பெற்ற மனத்தைக்கொண்டு [அதாவது, *யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோ மென்னும்படியாகப்பெற்று] அடிக்கடி தேவரீரையே ஸங்கீர்த்தநம் செய்யாநிற்பேனுய், தேவரீரைத்தவிர்த்து மற்றை விஷயங்களைச் சிறிதும்பற்றுத செவி, வாய், கண், மூக்கு முதலான ஸகலேந்த்ரியங்களோடுங் கூடினவனுய் அஸஹ்யங்களான ஸாம்ஸாரிகதாபங்களுக்கு ஆச்ரயமல்லேனுய் ப்ரஹ்மாநந்த சாலியாகக்கடவேன். .... .... .... ....(12, 13)

ஆக இவ்வளவும் இந்த திநசர்யாக்ரந்தத்திற்கு உபோத்காதரூபமாக அமைந்ததாயிற்று. இனி அடுத்த ச்லோகம் முதலாக திநசர்யா விசேஷப்ரதிபாதந ப்ராரம்பம்.

பரேத்யு: பச்சிமே யாமே யாமிந்யாஸ் ஸமுபஸ்திதே,
ப்ரபுத்திய சரணம் கத்வா பராம் குருபரம்பராம். 14

**த்யாத்வா ரஹஸ்யத்ரிதயம் தத்வயாதாத்ம்யதர்ப்பணம்,**
**பரவ்யூஹாதிகாந் பத்யுः ப்ரகாராந் ப்ரணிதாய ச.** 15

இனி பரேத்யுः என்று தொடங்கி, மறுநாள்பின்மாலை முதலாகத் தாம் மாமுனிகள் பக்கல் நேராகக்கண்ட நித்யாநுஷ்டாநவைகரிகளைச் சுருக்கமாகச் சொல்லுகின்ருர். அடியேன் மாமுனிகளை ஸேவிக்கச்சென்று சேர்ந்த மறுநாளிரவு அபரயாமம் அணித்தானவாறே திருக்கண்விழித்தருளிப் பெரிய பெருமாள் தொடங்கி ஸ்வாசார்ய பர்யந்தமான குருபரம்பரையைத் தஞ்சமாக நினைத்து அநுஸந்தித்தருளி, அதன்பிறகு, ஆத்மஸ்வரூபம் முதலியவற்றை உள்ளபடி தெரிவிக்கும் விஷயத்தில் கண்ணுடிபோன்றுள்ளதான திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகமென்கிற ரஹஸ்யத்ரயத்தையும் சிந்தனைசெய்து, நடாதூரம்மாளருளிச் செய்த பரந்வாதி பஞ்சகம் முதலான ஸ்தோத்ரங்களையநுஸந்திக்கும் முகத்தால் எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதார நிலைகளையும் சிந்தனை செய்தருளி. இந்த ல்யபந்தாவ்யயமும் மேல்ச்லோகங்களில் வருவனவுமெல்லாம் மேலே *ஸாக்ஷாத்பலைக* இத்யாதியான இருபத்தோராம் ச்லோகத்தில் ''மந்த்ரரத்ந ப்ரயச்சந்த'' என்கிறதிலே அந்வயித்து முடிவுபெறும்.

[பரேத்யுः] வியாகரண சாஸ்த்ரப்படி பரேத்யவி என்கிற ரூபம் ஸித்திக்குமேயல்லது இதரேத்யுः, அபரேத்யு என்பனபோல பரேத்யுः என்கிற ரூபம் ஸித்திக்கவழியில்லையே யென்று சிலர் சங்கிப்பர்கள்; இதற்காக *பரேந்த்யவ்யத்திமே யாமே என்று தான் பாடமிருந்ததென்று சொல்லுவாருமுளர். அப்படியொரு பாடமிருந்ததாகத் தெரியவில்லை. தர்ம சாஸ்த்ர நிபந்தநக்ரந்தங்களில் பெரும்பாலும் பரேத்யுः என்கிற ப்ரயோகம் காண்கிறது; காலநிர்ணயம் முதலான நூல்களில்''பரேத்யுःத்வாதச்யபாவவிஷயம் ''பரேத்யுःதிவாபாரணம்'' என்றிப்படி ப்ரயோகமுள்ளதன்றே. அதை அடியொற்றி ப்ரயோகித்தபடியென்று பெரியோர் நிர்வஹிப்பர்கள். *உத்தாய பச்சிமே யாமே ஆசம்ய ப்ரயதாத்மவாந், உபவிச்ய சுசௌ தேசே ஸமாஸீநஸ் ஸுகாஸநே* என்ற பராசர வசனத்தையும் * உத்தாய பச்சிமே யாமே சாந்தமாநஸः* என்றுள்ள கௌதமவசநத்தையும் பின்பற்றி'' பச்சிமே யாமே'' என்று பணித்திருக்கின்ற பாடத்தை '' அந்திமேயாமே'' என்று மாற்றுவதும் விரஸம். .... .... (14, 15)

**தத: ப்ரத்யுஷஸி ஸ்நாத்வா க்ருத்வா பௌர்வாஹ்ணிகீः க்ரியாः,**
**யதீந்த்ரசரணத்வந்த்வப்ரவணேனைவ சேதஸா.** 16

அதன்பிறகு திருமுத்துவிளக்குதல் முதலான காரியங்களையும் முடித்துக்கொண்டு அருணோதயகாலத்தில் நீராட்டங்கண்டருளி, எம்பெருமானுர் திருவடிகளில் பரமபக்தியுக்தமான திருவுள்ளத்துடனே, ப்ராதःகாலத்தில் செய்தருள வேண்டிய ஆஹ்நிகங்களையெல்லாம் செய்தருளி. .... (16)

**அத ரங்கநிதிம் ஸம்யக் அபிகம்ய நிஜம் ப்ரபும்,**
**ஸ்ரீநிதாநம் சனைஸ் தஸ்ய சோதயித்வா பதத்வயம்.** 17

நீராடி ப்ராதःகாலக்ருத்யங்களை முடித்துக்கொண்டு மடத்திற் கெழுந்தருளினபிறகு தமக்கு ஆராத்ய தேவதையான அரங்கநகரப்பனுக்கு அர்க்க்யபாத்யாசமநீயாதிகள் ஸமர்ப்பித்து. .... .... (17)

**ததஸ் தத்ஸந்நிதிஸ்தம்பமூல பூதல பூஷணம்,**
**ப்ராங்முகம் ஸுகமாஸீநம் ப்ரஸாதமதுரஸ்மிதம்.**

அதன்பிறகு அந்த அரங்கநகரப்பனுடைய ஸன்னிதியில் ஒருஸ்தம்பத்தின் அடிக்கு அலங்காரமாகக் கிழக்கு நோக்கி இனிது வீற்றிருந்து, திருவுள்ளம் ப்ரஸந்ந

மாயிருப்பது தோற்ற வெளிவருகின்ற புன்முறுவலையுடையவராயும்.[மேலே இருபத்தோராம் ச்லோகத்தில் *வந்தே வரவரம்முநிம்* என்றவிடத்தில் அந்வயிப்பது இந்த த்விதீயாந்தம்.] அடுத்த ச்லோகத்தில் தமக்கு மாமுனிகள் திருவிலச்சினை ஸாதித்தருளினபடியைச் சொல்லப் போகிறாராய், அதற்காக ஸ்வாமி வீற்றிருந்தருளின விடத்தை இந்தச்லோகத்தினால் தெரிவித்தாராயிற்று. .... ....(18)

ப்ருத்யை: ப்ரியஹிதைகாக்ரை: ப்ரேமபூர்வமுபாஸிதம்,
தத்ப்ரார்த்தநாநுஸாரேண ஸம்ஸ்காராந் ஸம்விதாய மே. 19

அநுகம்பாபரீவாஹை: அபிஷேசநபூர்வகம்,
திவ்யம் பதத்வயம் தத்வா தீர்க்கம் ப்ரணமதோ மம. 20

ஸாக்ஷாத் பலைகலக்ஷ்யத்வப்ரதிபத்தி பவித்ரிதம்,
மந்த்ரரத்நம் ப்ரயச்சந்தம் வந்தே வரவரம் முநிம். 21

ஸ்வரூபாநுரூப வ்ருத்தியிலே ஊன்றியிருக்கின்ற வானமாமலைஸ்வாமி, கோயிலண்ணன், கந்தாடையண்ணன் முதலான சிஷ்யர்களால் அன்போடு புடைசூழப்பட்டவராய், அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கி அடியேனுக்குப் பஞ்சஸம்ஸ்காரப்ரதாநம் பண்ணியருளி க்ருபாப்ரவாஹ பரீவாஹரூபங்களான கடாக்ஷ வீக்ஷணங்களை அடியேன்மீது செலுத்தி, ஸாஷ்டாங்க ப்ரணாமம்செய்து நின்ற வடியேனுக்கு தமது திவ்யபாதாரவிந்தயுகளத்தைத் தந்தருளி [என் சென்னிக்கணியாக வைத்தருளி] மங்களாசாஸனத்திலேயே ஊன்றியிருக்கும்படியான அநுக்ரஹத்தைச் செய்தருளி த்வயமென்னும் மந்த்ர ரத்நத்தை உபதேசித்தருளினவருமான மணவாள மாமுனிகளைத் தொழுகின்றேன்.

ஸாக்ஷாத்பலைகலக்ஷ்யத்வ ப்ரதிபத்தி பவித்ரிதம்= ஸ்ரீவசநபூஷணத்தில் ஸதாசார்ய லக்ஷண ப்ரகரணத்தில்—(311.) "ஸாக்ஷாத் பலமும் ஆசார்யத்வமும் ஸித்திக்கிற படியென்னென்னில்; தன்னினைவாலும் ஈச்வரன் நினைவாலும் ஸித்திக்கும்" என்றவிடத்து "ஸாக்ஷாத் பலமாவது உபதேச பாத்ரமானவிவன் திருந்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாகை. இதுதன்னினைவாலே ஸித்திக்கையாவது—உபதேஷ்டாவான தான் விப்ரதிபத்திகளொன்று மின்றி இதுவே பலமாக நினைத்து உபதேசிக்கவே அவனப்படி திருந்தி மங்களாசாஸந அதிகாரியாகை." என்றுள்ள வியாக்கியான ஸ்ரீஸூக்திகளை இங்கேயநுஸந்திப்பது. திருந்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாகவேணுமென்கிற ப்ரதிபத்தி தவிர வேறொரு எண்ணமின்றிக்கே யுபதேசித்தருளினபடி சொல்லிற்றாயிற்று. .... .... .... .... .... (19-21)

ததஸ் ஸார்த்தம் விநிர்கத்ய: ப்ருத்யைர் நித்யாநபாயிபி:,
ஸ்ரீரங்கமங்களம் த்ரஷ்டும் புருஷம் புஜகேசயம், 22

மஹதி ஸ்ரீமதி த்வாரே கோபுரம் சதுராநநம்,
ப்ரணிபத்ய சநைரந்த: ப்ரவிசந்தம் பஜாமி தம். 23

அதன் பிறகு, அரவணைமேல் பள்ளிகொண்டருளும் அரங்கனை மங்களாசாஸநஞ்செய்தருள்வதற்காக, தம்மை ஒருநொடிப்பொழுதும் அகலகில்லாத சிஷ்யவர்க்கங்களுடனே புறப்பட்டருளிப் பெரியதிருவாசலிலே நான்முகன் கோட்டை வாசலென்னும் ப்ரஸித்தியையுடைய திருக்கோபுர நாயனாரைத் தெண்டனிட்டு,மெதுவாக உள்ளே யெழுந்தருளா நின்ற மணவாளமாமுனிகளை வணங்குகின்றேன்.

விமாநமண்டப ப்ராகார கோபுராதிகளின் வைலக்ஷண்யாநுபவத்திலே திருவுள்ளமூன்றி அவற்றைத் தனித்தனியே அநுபவித்துக்கொண்டே உள்ளுப்புகவேண்டியிருப்பதனுல் "சநைஃ அந்தஃ ப்ரவிசந்தம்" என்னப்பட்டது. .... (22-23)

தேவி கோதா யதிபதிசடத்வேஷிணௌ ரங்கச்ருங்கம்
ஸேநாநாதோ விஹகவ்ருஷப: ஸ்ரீநிதிஸ் ஸிந்து கந்யா,
பூமா நீளாகுருஜநவ்ருத: பூருஷச் சேத்யமீஷாம்
அக்ரே நித்யம் வரவரமுநேரங்க்ரியுக்மம் ப்ரபத்யே. 24

கோதா தேவீ—ஆண்டாள்; யதிபதி சடத்வேஷிணௌ—எம்பெருமானுர், நம்மாழ்வார். ரங்கச்ருங்கம்—ஸ்ரீரங்கவிமாநம், ஸேநாநாதஃ—ஸேனை முதலியார்; விஹகவ்ருஷபஃ—பக்ஷிராஜனுன பெரிய திருவடி, ஸ்ரீநிதிஃ—ஸ்ரீரங்கநாதன், ஸிந்துகந்யா—ஸ்ரீரங்கநாச்சியார். பூமா நீளா குருஜநவ்ருதஃ பூருஷச் ச—பூதேவி ஸ்ரீதேவி நீளா-தேவி ஆழ்வார்கள் ஆகிய இவர்களால் சூழப்பட்ட பரமபதநாதன்; இதி அமீஷாம் அக்ரே—என்னுமிவர்கள் திருமுன்பே, [மங்களாசாஸநார்த்தமாக எழுந்தருளியிருந்து ஸேவைஸாதிக்கின்ற] வரவரமுநேஃ அங்கரியுக்மம் நித்யம் ப்ரபத்யே—மணவாளமாமுனிகளின் திருவடியிணைகளை நித்யமும் தொழுகின்றேன்.

ஸ்வாமி நித்யம் மங்களாசாஸநம் செய்தருளும் க்ரமம் இந்த ச்லோகத்தில் நிபந்திக்கப்பட்டுள்ளது. இந்த ச்லோகம் வரவரமுநிசதகத்திலுமுள்ளது. (24)

மங்கலாசாஸநம் க்ருத்வா தத்ரதத்ர யதோசிதம்,
தாம்நஸ் தஸ்மாத் விநிஷ்க்ரம்ய ப்ரவிச்ய ஸ்வம் நிகேதநம். 25

கீழே "தேவி கோதா" என்கிற ச்லோகத்தில் தெரிவித்த முறைப்படியே ஆங்காங்கு தம்முடைய ப்ரேமத்துக்குத் தகுதியாக மங்களாசாஸநம் செய்தருளி, ஸந்நிதியிலிருந்து புறப்பட்டு மீண்டும் தம்முடைய மடத்தேற வெழுந்தருளி.

இதற்கு மேல்ச்லோகத்திலும் அதற்கடுத்த ச்லோகத்திலும் அந்வயம். (25)

அத ஸ்ரீசைல நாதார்ய நாம்நி ஸ்ரீமதி மண்டபே,
ததங்க்ரி பங்கஜத்வந்த்வச்சாயா மத்யநிவாஸிந (நா) ம். 26

ஸந்நிதியில் மங்களாசாஸநம் செய்தருளித் தம்முடைய ஆஸ்தானத்தேற எழுந்தருளியான பிறகு, தம்முடைய ஆசார்யருடைய திருநாமத்தினுல் காலக்ஷேபகூடமாக அமைக்கப்பட்டிருந்த திருமலையாழ்வார் திருமண்டபத்திலே [சித்ரரூபியாக எழுந்தருளியிருக்கிற] ஸ்வாசார்யரான அந்தத் திருவாய்மொழிப் பிள்ளையின் திருவடித் தாமரையிணையின் நிழலிலே யெழுந்தருளியிருந்து.

"சாயாமத்யநிவாஸிநம்" என்று த்விதியாந்தமான பாடமே பொருத்தமானது. இது மணவாள மாமுனிகளுக்கு விசேஷணம். அடுத்த ச்லோகத்திலுள்ள நம் என்பதில் அந்வயிப்பது. "நிவாஸிநாம்" என்று ஷஷ்டீபஹுவசந பாடமும் வழங்கிவருவதுண்டு. திருமழிசை அண்ணாவப்பங்கார்ஸ்வாமி அப்பாடத்தையும் எடுத்துக்காட்டியுள்ளார். அந்தப் பாடத்தில் சிஷ்யானும் என்று விசேஷ்யபதமொன்று அத்யாஹ்ரித்துக்கொள்ளவேணும். காலக்ஷேபார்த்தமாக ஸ்வாமியின் வருகையை எதிர்பார்த்துக்கொண்டு அவ்விடத்தில் ச்ரோதாக்கள் குழுமியிருந்தபடியைச் சொல்லிற்றுகக் கொள்வது. அப்படிப்பட்ட அந்தேவாஸிகளுக்கு * திவ்யப்ரபந்தாநாம் தத்வம் வ்யாசக்ஷாணம் என்று (மேலோடே) அந்வயிப்பது. .... .... .... (26)

தத்த்வம் திவ்யப்ரபந்தாநாம் ஸாரம் ஸம்ஸாரவைரிணும்,
ஸரஸம் ஸரஹஸ்யாநாம் வ்யாசக்ஷாணம் நமாமி தம். 27

* வானின் மீதேற்றி யருள் செய்து முடிக்கும் பிறவிமாமாயக் கூத்தினையே * என்றும், *மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே* என்றும் சொல்லுகிற படியே ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கித் திருநாடு சேர்ப்பிக்கவல்ல ஆழ்வாரருளிச் செயல்களின் ஸாரமான தத்வப்பொருளை ரஹஸ்யார்த்தங்களோடு சேர்த்துப் பரம போக்யமாக வியாக்கியானித்தருளாநின்ற அந்த மணவாள மாமுனிகளை வணங்குகின்றேன் என்கை.

ஸம்ஸாரவைரிணும் என்பதும் ஸரஹஸ்யாநாம் என்பதும் திவ்யப்ரபந்த விசேஷணம். ப்ரக்ருதிஸம்பந்த நிவர்த்தகத்வமே ஸம்ஸாரவைரித்வம். " ரஹஸ்யைஸ் ஸஹ வ்யாசக்ஷாணம்" அல்லது 'ரஹஸ்யாநி ச வ்யாசக்ஷாணம்' என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் 'ஸரஹஸ்யாநாம் திவ்யப்ரபந்தாநாம் தத்வம் வ்யாசக்ஷாணம்' என்று சொல்லியிருப்பது வடமொழி நடை. 'ஸம்ஸாரவைரிணும்' என்பதை திவ்யப்ரபந்த விசேஷணமாக்காமல் ஸ்வயம் விசேஷ்யமாக்கி " ஸரஹஸ்யாநாம் திவ்யப்ரபந்தாநாம் ஸாரம் தத்வம் ஸம்ஸார வைரிணும் ஸரஸம் வ்யாசக்ஷாணம்" என்று அந்வயிக்கவுமாம். இப்போது ஸம்ஸார வைரிணு மென்றது முமுக்ஷுக்களுக்கென்றபடி. கீழ்ச்லோகத்தில் சாயாமத்ய நிவாஸிநாம் என்று காட்டப்பட்ட பாடாந்தரத்தில் அது இங்கு அந்வயிக்கத்தக்கது. ததங்க்ரி பங்கஜ த்வந்த்வச்சாயாமத்ய நிவாஸிகளான ஸம்ஸாரவைரிகளுக்கு [முமுக்ஷுக்களுக்கு] என்றதாயிற்று. .... .... (27)

ததः ஸ்வசரணம்போஜஸ்பர்ச ஸம்பந்ந ஸௌரபை:,
பாவனைரர்த்திநஸ் தீர்த்தைர் பாவயந்தம் பஜாமி தம். 28

அத்யாத்ம சாஸ்த்ர ப்ரவசநம் செய்தருளித் தலைக்கட்டினபிறகு சிஷ்யர்களுக்கு ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதித்தருளாநின்ற ஸ்வாமியைத் தொழுகின்றேன்.

ஸ்வசரணம்போஜஸ்பர்ச ஸம்பந்ந ஸௌரபைः—தம்முடைய திருவடித் தாமரைகளின் ஸம்பந்தத்தினால் பரிமளம் மிகுந்த தீர்த்தமென்றது ஸ்ரீ பாததீர்த்த மென்றபடி.

பாவயந்தம்—ஸத்தை பெறுவித்தருளாநின்ற என்றபடி. தீர்த்தைः என்றது பூஜாயாம் பஹுவசநம். .... .... .... .... (28)

ஆராத்ய ஸ்ரீநிதிம் பச்சாத் அநுயாகம் விதாய ச,
ப்ரஸாத பாத்ரம் மாம் க்ருத்வா பச்யந்தம் பாவயாமி தம். 29

ஸ்ரீபாததீர்த்தம் ப்ரஸாதித்தருளின வனந்தரம் ஸ்வாராத்ய தேவதையான அரங்க நகரப்பனுக்குத் திருவாராதனம் கண்டருளப்பண்ணி பகவத் ப்ரஸாத ப்ரதிபத்திரூபமான ப்ரஸாத ஸ்வீகாரத்தைச் செய்தருளி, போனகஞ்செய்த சேடம் தந்தருளி அடியேனைக் கடாக்ஷித்தருளின மாமுனிகளைச் சிந்தனை செய்கின்றேன். (29)

ததச் சேதஸ் ஸமாதாய புருஷே புஷ்கரேக்ஷணே,
உத்தம்ஸித கரத்வந்த்வம் உபவிஷ்ட முபஹ்வரே. 30

அமுதுசெய்தருளியான பிறகு புண்டரீகாக்ஷனை புருஷோத்தமன் பக்கலிலே திருவுள்ளத்தை ஊன்றவைத்து மத்தகத்திடைக் கூப்பிய கையராய் ஏகாந்தமாக எழுந்தருளியிருந்து சிந்தனை செய்தருளாநின்ற மணவாளமாமுனிகளை (ஸேவிக்கின்றேன்.) க்ரியாபதம் மேல் ச்லோகத்திலுள்ளது.

அநுயாகத்திற்குப் பிறகு யோகநிஷ்டையை பரத்வாஜ முனிவர் கூறியுள்ளார், * க்ருத்வாநுயாகம் குர்வீத ஸ்வாத்யாயம் வைஷ்ணவம்பரம், ததோ யுஞ்ஜீத சஆத்மாநம் புருஷே புஷ்கரேக்ஷணே * என்று. அதை யடியொற்றியே இங்கும் 'புருஷே புஷ்கரேக்ஷணே' என்று கூறப்பட்டது. யோகிகளின் உள்ளத்தினுள் எம்பெருமான் விக்ரஹவிசிஷ்ட

ளுய்க்கொண்டு ஸந்நிதிபண்ணியருளுகிருனென்கிறசாஸ்த்ரார்த்தம்'புஷ்கரேக்ஷணே' என்கிற பதத்திஞல் ஸூசிதமாகிறது. .... ..... (30)

அப்ஜாஸநஸ்த மவதாத ஸுஜாதமூர்த்திம்
ஆமீலிதாக்ஷ மநுஸம்ஹித மந்த்ரரத்நம்,
ஆநம்ரமௌலிபிருபாஸித மந்தரங்கை:
நித்யம் முநிம் வரவரம் நிப்ருதோ பஜாமி. 31

யோகார்த்தமாகப் பத்மாஸனத்தி லெழுந்தருளியிருப்பவராய், பரமபரிசுத்த ஸுந்தர திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவராய், சுபாச்ரய வஸ்து த்யானத்திஞல் சிறிது மூடின திருக்கண்களையுடையராய், த்வயாநுஸந்தாநநிரதராய், விநயமே வடிவெடுத்த வானமாமலை ஸ்வாமி முதலான அந்தரங்க சிஷ்யர்களால் அத்தாணிச் சேவகம் செய்யப்பட்டவரான மணவாளமாமுனிகளை ஏகாக்ரசித்தனுய் எஞ்ஞான்றும் அநுபவம் செய்யா நிற்கிறேன். .... .... .... (31)

தத: சுபாச்ரயே தஸ்மிந் நிமக்நம் நிப்ருதம் மந:,
யதீந்த்ர ப்ரவணம் கர்த்தும் யதமாநம் நமாமி தம். 32

யோகாப்யாஸத்திற்குப் பிறகு, அந்த சுபாச்ரயவஸ்துவில் லயித்து நிச்சலமாயிருக்கின்ற திருவுள்ளத்தை மீட்டு எம்பெருமானுரிடத்தில் ஊன்றவைப்பதற்கு முயற்சி செய்தருளா நின்ற அந்த மணவாள மாமுனிகளைத் தொழுகின்றேன்.

"ஹேயப்ரத்யநீகத்வே ஸதி சித்தாகர்ஷகத்வம் சுபாச்ரயத்வம்" என்று சுபாச்ரயலக்ஷணம் கூறியுள்ளார்; அது இங்கு அறியத்தக்கது.

கீழ் பதினைரும் ச்லோகத்தில் *யதீந்த்ர சரண த்வந்த்வ ப்ரவணேநைவ சேதஸா* என்று சொல்லியுள்ளதை இங்கு நினைக்கவேணும். யதீந்த்ர ப்ரவணரென்றே நிருபகமான திருநாமத்தையுடைய மணவாள மாமுனிகளின் திருவுள்ளம் எப்போதுமே எம்பெருமானுர் திருவடிகளிலே ஊன்றியிருக்கும்; இடையில் புருஷே புஷ்கரேக்ஷணே சேதஸ் ஸமாதாநம் ப்ராப்தமானபடியாலே, அந்த நிலையில் நின்றும் மீண்டும் பழையபடியே யதீந்த்ரப்ரவண ஹ்ருதயரானமை சொல்லிற்றுயிற்று. யோகத்தில் நின்று மெழுந்து எம்பெருமானுர் திருவடிகளான ஸ்ரீவைஷ்ணவர்களோடு கலந்து பரிமாறப்புகுந்த படியை, மேல் உத்தரதிநசர்யைக்கு அவதாரிகைபோல் அருளிச்செய்தபடி. அபராஹ்நத்தில் ஸ்ரீவசநபூஷணுதி திவ்யக்ரந்த காலக்ஷேபம் அடுத்தபடியாக அருளிச்செய்யப் படுகிறதன்றே, அதற்கு இந்த ச்லோகம் அவதரணிகை போலும். .... (32)

எறும்பியப்பா அருளிச்செய்த

**பூர்வதிநசர்யைக்கு**

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய

உரை முற்றிற்று

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

எறும்பியப்பா அருளிச்செய்த

# உத்தரதிநசர்யா

**இதி யதிகுலதுர்யமேதமாநை: ச்ருதிமதுரைருதிதை: ப்ரஹர்ஷயந்தம், வரவரமுநிமேவ சிந்தயந்தீ மதிரியமேதி நிரத்யயம் ப்ரஸாதம்.**

இதனால் யதிராஜவிம்சதியின் அநுஸந்தானம் தெரிவிக்கப்பட்டதாயிற்று. இவ்விதமாகச் செவிக்கினிய செஞ்சொற்கள் நிறைந்த ஸ்துதியினால் எம்பெருமானரைத் துதித்துத் திருவுள்ள முகந்தருளாநின்ற மணவாளமாமுனிகளையே சிந்தனை செய்யுமென்மதியானது நிகரற்ற தெளிவுபெற்று விளங்குகின்ற தென்றபடி. *

**அத கோஷ்டீம் கரிஷ்டாநாம் அதிஷ்டாய ஸுமேதஸாம்,
வாக்யாலங்க்ருதி வாக்யாநி வ்யாக்க்யாதாரம் நமாமி தம். 1**

யோகநிலையைவிட்டு, வெளியே யெழுந்தருளியானபின்பு, மிகச்சிறந்த மேதாவிகள் நிறைந்த திருவோலக்கத்திலே யெழுந்தருளியிருந்து ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்திகளை வியாக்கியானித்தருளாநின்ற மணவாளமாமுனிகளைத் தொழுகின்றேன்.

ஸாயம்ஸந்த்யாநுஷ்டானத்திற்கு முன்பு பிற்பகலில் ஸ்ரீவசநபூஷணதிவ்ய க்ரந்த காலக்ஷேபம் நடைபெறுகிறவழக்கம் இதனால் தெரிவிக்கப்பட்ட தாயிற்று.

வ்யாக்க்யாதாரம் என்று—வ்யாக்யாந ரூபமான க்ரந்தங்களை இயற்றியருளும்படி சொல்லுகிறதன்று ; பூர்வதிநசர்யையில் ப்ராத:ப்ரவசநத்தைச் சொல்லுமிடத்தில் 'வ்யாசக்ஷாணம் நமாமி தம்' என்றது போலவே ' வ்யாக்க்யாதாரம் நமாமி தம் ' என்றவிதுவும் ப்ரவசனத்தையே சொல்லிற்றுகிறது; " கரிஷ்டாநாம் ஸுமேதஸாம் கோஷ்டீமதிஷ்டாய " என்றிருக்கையாலே.

வாக்யாலங்க்ருதி யென்றது வசநபூஷணமென்றபடி. 'வாக்யாநாம்' என்று ஷஷ்டியான பாடமும் சிலர் சொல்லுவதுண்டு; த்விதீயாந்தமான பாடமே சிறக்கும்; கத்யத்தில் "த்வயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ....வக்தா" என்றதுபோல. .... (1)

**ஸாயந்தநம் தத: க்ருத்வா ஸம்யகாராதநம் ஹரே:,
ஸ்வைராலாபைச் சுபைச் ச்ரோத்ரூந் நந்தயந்தம் நமாமி தம். 2**

பிறகு ஸாயம்ஸந்த்யாநுஷ்டாநங்களைத் தலைக்கட்டியருளி, அரங்கநகரப்பனுடைய திருவாராதனத்தையும் செய்தருளி, தம்முடைய அழகிய வார்த்தைகளினால் ச்ரோதாக்களை உகப்பித்தருளா நின்ற மணவாளமாமுனிகளை வணங்குகின்றேன்.

ஸ்வை: ஆலாபை:—ஸ்வகீயைராலாபை: என்றபடி. 'ஸ்வைராலாபை:' என்று ஸமஸ்தபதமாகவுங் கொள்ளலாம்; ஸ்வைர ஆலாபை:—ஸ்வச்சந்தாலாபை: என்றபடி. "சொல்லும் அவிடு சுருதியாம்" என்று அருளாளப் பெருமாளெம் பெருமானார் பாசுரம் இங்கு நினைக்கத்தகும். * கலையிலங்கு மொழியாளர் கண்ணபுரத்து * என்ற விடத்திற்கு வியாக்யானம் செய்தருளுகிறப் போலவும், வாய்திறந்து எது பேசினாலும் அத்தனையும் சாஸ்த்ரார்த்தமாயேயிருக்கு மென்றபடி. .... (2)

ததஃ கநகபர்யங்கே தருணத்யுமணித்யுதௌ,
விசால விமலச்லக்ஷ்ண துங்கதூலாஸநோஜ்ஜ்வலே. 3

ஸமக்ரஸௌரபோத்கார நிரந்தரதிகந்தரே,
ஸோபதாநே ஸுகாஸீநம் ஸுகுமாரே வராஸநே. 4

அர்த்தபஞ்சக விசேஷ ப்ரகாசகங்களான ஸ்வோக்தி விசேஷங்களாலே அந்தே வாஸிகளை உகப்பித்தருளின பிறகு, பாலஸூர்யன்போல் விளங்குகின்ற காந்தியை யுடையதாய், பரந்து வெளுத்து நிகநிகென்ற உயர்ந்த பஞ்சணையினால் அலங்க்ருத மாய் நிரவதிகமான நறுமணக்கிளர்ச்சியினால் வ்யாப்தமான நான்குபக்கங்களையு முடையதாய், தலையணையோடு கூடியதாய் ஸ்வர்ணமயமாயிருந்துள்ள மஞ்சத்திலே யோகயோக்யமாய் மிகவும் ஸுகுமாரமான உத்தமாஸநத்தில் இனிதாக எழுந்தருளி யிருக்கின்ற.

இதற்கு "இதி ஸ்துதிநிபந்தேந" என்கிற மேல் பதினோராம் ச்லோகத்தில் "சிந் தயாமி தம்" என்ற விடத்திலே அந்வயம். உத்தமாச்ரமியாய் பரம விரக்தாக்ரேஸர ரான மாமுனிகள் துங்கதூலாஸநோஜ்ஜ்வலமாய் ஸோபதாநமாய் ஸமக்ரஸௌரப சாலியான கநகபர்யங்கத்திலே எழுந்தருளியிருப்பது ஸுதராம் அஸம்பாவிதமே யானாலும் இது ஆதராதிசயம் தோற்ற அதிசயோக்தியாகச் சொன்னவார்த்தை யென்று கொள்ளக்கடவது. *படியிடைமாடத்தடியிடைத்தூணில் பதித்த பன்மணி களினொளியால், விடிபகலிரவென்றறிவரிதாய திரு வெள்ளியங்குடியதுவே* என்றும் *செம்பொன் மாடத் திருக்குருகூர்* என்றும் அருளிச்செய்த கட்டளை.

"விவிக்ததேசே ச ஸுகாஸநஸ்தஃ" என்று யோகாப்யாஸத்திற்கு ஸுகாஸநாதிஷ்டா நம் சொல்லியிருப்பதை அடியொற்றிய இவ்வதிசயோக்தி யுக்தமேயாகும். (3, 4)

**உந்மீலத்பத்மகர்ப்பத்யுதிதலமுபரி க்ஷீரஸங்காதகௌரம்**
**ராகாசந்த்ரப்ரகாச ப்ரசுரநகமணித்யோத வித்யோதமாநம்,**
**அங்குல்யக்ரேஷு கிஞ்சிந்நதமதிம்ருதுலம் ரம்யஜாமாத்ருயோகீ**
**திவ்யம் தத்பாதயுக்மம் திசது சிரஸி மே தேசிகேந்த்ரோ தயாளுஃ. 5**

இந்த ச்லோகம் முதலாக "இதி ஸ்துதிநிபந்தேந ஸூசிதஸ்வமநீஷிதாந்" என்னுமள வும் அடியார்கள் ப்ரேம பரவசர்களாய் ஸ்துதிசெய்யும்படிகளைச் சொல்லுகிறது. மணவாளமாமுனிகள் தம்முடைய திருவடித்தாமரையிணையை அடியேன் முடிமீது வைத்தருள வேணுமென்று ஒரு சிஷ்யர் ப்ரார்த்திப்பதைக் கூறுவது இந்த ச்லோகம். [தயாளுஃ தேசிகேந்த்ரஃ ரம்யஜாமாத்ருயோகீ தத் திவ்யம் பாதயுக்மம் மே சிரஸி திசது] பரம காருணிகராய்ப் பரமாசார்ய ஸார்வபௌமரான மாமுனிகள் தம் முடைய பரமவிலக்ஷணமான திவ்ய பாதாரவிந்த யுகளத்தை அடியேனது சிரத்தின் மீது பொறித்தருள வேணும். அந்த திருவடியிணை எப்படிப்பட்டதென்னில்; [உந் மீலத் பத்ம கர்ப்பத்யுதிதலம்] (இச் சொல் தொடரில் இரண்டு பஹுவ்ரீஹியுள்ளது.) அப்போதலராநின்ற தாமரையின் உள்ளே விளங்குகின்ற காந்திபோன்ற காந்தியை யுடையதான உட்புறத்தையுடையது. புறவடி செந்தாமரைபோற் செவ்வியது என்றபடி. [உபரி க்ஷீரஸங்காதகௌரம்] திருவடியின் மேல்பாகம் பால்திரளைபோல் வெண்ணிறமானது. ஆதிசேஷாவதாரமான நம்பி மூத்தபிரா [பலராம]னைப் பற்றிப் பெரியாழ்வார் திருமொழியிலருளிச் செய்யும்போது *முன்னலோர் வெள்ளிப் பெருமலைக் குட்டன் மொடுமொடு விரைந்தோடப், பின்னைத்தொடர்ந்ததோர் கரு மலைக் குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல், பன்னியுலகம் பரவியோவாப் புகழ்ப் பல தேவனென்னும், தன்னம்பியோடப் பின்கூடச் செல்வான் தளர்நடை நடவானோ* என்றுள்ள பாசுரத்தில் கண்ணனைக் கருமலைக்குட்டியாகவும் மூத்தராமனை வெள்ளி

மலைக் குட்டியாகவும் அருளிச் செய்திருப்பதானது பலராமனை சேஷாம்சமென்று காட்டுவதற்கே யன்றோ. அதுபோல இங்கும் க்ஷீரஸங்காதகௌரம் என்றது மாமுனிகள் ஆதிசேஷாவதார மென்பதை யறிவிப்பதற்காகவேயாம். இதுதன்னை அஸ்மத்குல கூடஸ்தரான அண்ணா தாம் அருளிச்செய்த வரவரமுநி சதகத்தில் *துக்தோதந்வத்தவள மதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த்ராவதாரம்* என்ற ச்லோகத்தினால் விளங்கக்கூறியுள்ளார். [ராகாசந்த்ரப்ரகாசப்ரசுரநகமணித்யோத வித்யோதமாநம்] பூர்ண சந்திரனுடைய ப்ரகாசம்போன்ற ப்ரகாசம் விஞ்சிய திருநகங்களாகிற ரத்நங்களின் ஒளியினால் விளங்கப் பெற்றது. இதுவும் பாதயுக்மத்திற்கு விசேஷணம். [அங்குல்யக்ரேஷு கிஞ்சித் நதம்] திருவிரல்களின் நுனி சிறிது வணங்கியிருப்பது உத்தம புருஷ லக்ஷணமாகக் கூறப்பட்டுள்ளது. ''பாதாவராளாங்குளீ'' என்பர் மஹாகவிகளும், அதிம்ருதுலம்] பரம ஸுகுமாரமான, அப்படிப்பட்ட திவ்ய பாதாரவிந்த யுகளத்தை அடியேனுடைய முடிமீது வைத்தருளவேணுமென்று சில பக்தர்கள் ப்ரார்த்தியா நின்றார்கள். .... .... .... .... .... (5)

த்வம் மே பந்துஸ் த்வமஸி ஜநகஸ் த்வம் ஸகா தேசிகஸ் த்வம்
வித்யா வ்ருத்தம் ஸுக்ருதமதுலம் வித்தமப்யுத்தமம் த்வம்,
ஆத்மா சேஷீ பவஸி பகவந் ஆந்தரச் சாஸிதா த்வம்
யத்வா ஸர்வம் வரவரமுநே யத்யதாத்மாநுரூபம். 6

மணவாளமாமுனிகளே! தேவரீரே அடியேனுக்கு உறவினராகிறீர்; தேவரீரே தந்தையாகிறீர்; தேவரீரே துணைவராகிறீர்; தேவரீரே ஆசார்யராகிறீர்; வித்யையோ அனுஷ்டானமோ சிறந்த ஸுக்ருதமோ உத்தமமான செல்வமோ எல்லாமும் தேவரீரேயாகிறீர். உடலுக்கு உயிராக நிற்பவரும் தேவரீரே; அடியேனுக்குக் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியும் தேவரீரே; உள்ளே நின்று நியமித்துப் போருமவரும் தேவரீரே; பலசொல்லி யென்? ஆத்ம ஸ்வரூபத்திற்கு அநுரூபமான பொருளெல்லாம் அடியேனுக்கு தேவரீரே—என்றிப்படி சில சிஷ்யர்கள் விண்ணப்பம் செய்யா நின்றார்கள். .... .... .... .... .... (6)

அக்ரே பச்சாதுபரி பரிதோ பூதலம் பார்ச்வதோ மே
மௌலௌ வக்த்ரே வபுஷி ஸகலே மாநஸாம்போருஹே ச,
தர்சம்தர்சம் வரவரமுநே திவ்யமங்க்ரித்வயம் தே
நித்யம் மஜ்ஜந் அம்ருதஜலதௌ நிஸ்தரேயம் பவாப்திம். 7

மணவாளமாமுனிகளே! மிக விலக்ஷணமான தேவரீருடைய திருவடியிணையை முன்புறத்திலும் பின்புறத்திலும் மேலேயும் நிலத்தில் நான்கு பக்கங்களிலும் என்னுடைய பக்கங்களிலும் சிரஸ்ஸிலும் முகத்திலும் எல்லாவவயவங்களிலும் ஹ்ருதய புண்டரீகத்திலும் பாவநாப்ரகர்ஷத்தினால் ப்ரத்யக்ஷஸமாநாகாரமாக ஸ்ம்ருதி விஷயமாக்கி ஆனந்தவமுதக்கடலில் எஞ்ஞான்றும் ஆழ்ந்தவனாகி ஸம்ஸாரஸாகரத்தைக் கடக்கக் கடவேன். .... .... (7)

கர்மாதீநே வபுஷி குமதி: கல்பயந் ஆத்மபாவம்
து:க்கே மக்ந: கிமிதி ஸுசிரம் தூயதே ஜந்துரேஷ:,
ஸர்வம் த்யக்த்வா வரவரமுநே ஸம்ப்ரதி த்வத்ப்ரஸாதாத்
திவ்யம் ப்ராப்தும் தவ பதயுகம் தேஹி மே ஸுப்ரபாதம். 8

மணவாளமாமுனிகளே! அந்யதாஜ்ஞாநயுக்தனான இந்தவொரு பிராணி [அடியேன்] பூர்வகர்மாயத்தமான சரீரத்தில் ஆத்மப்ரதிபத்தியை ஏறிட்டுக்கொண்டவனாகி [தேஹாத்மப்ரமசாலியாய்] ஆத்யாத்மிகம் முதலிய தாபத்ரயத்தில் மூழ்கினவனாய் நெடுங்காலமாக ஏதுக்குப் பரிதபிக்கக் கடவன்! [இந்த பரிதாபத்தைப் போக்கி

யருளத் திருவுள்ளம் பற்ற வேணுமென்று சேஷபூரணம் செய்வது] இப்போதேதேவரீருடைய திருவருளால் புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடேவிட்டு தேவரீருடைய திவ்ய பாதாரவிந்தத்தையடையும்படி ஒரு நல்விடிவு தந்தருள வேணும்-என்று சில பக்தர்கள் ப்ரார்த்தியாநிற்பர்கள்.

நான்காவது பாதத்தில் ப்ரப்தம், ப்ரப்தும், ப்ராப்து: என மூன்று பாடங்கள் தெரிய வருகின்றன; 'ப்ராப்தம' என்னும் பாடத்தைப் பெரியோர் பேணவில்லை. ப்ராப்து: என்கிறபாடம் நன்றே; அது மே என்பதில் விசேஷணமாக அந்வயிக்கும். ....(8)

**யா யா வ்ருத்திர் மநஸி மம ஸா ஜாயதாம் ஸம்ஸ்ம்ருதிஸ் தே**
**யோ யோ ஜல்பஸ் ஸ பவது விபோ நாமஸங்கீர்த்தநம் தே,**
**யா யா சேஷ்டா வபுஷி பகவந் ஸா பவேத் வந்தநம் தே**
**ஸர்வம் பூயாத் வரவரமுநே ஸம்யகாராதநம் தே.** 9

மணவாளமாமுனிகளே! அடியேனுக்குண்டாகிற மநோவ்ருத்தியெல்லாம் தேவரீருடைய ஸம்ஸ்மரணரூபமாகவேயாகக் கடவது; அடியேனுடைய வாக்கில் வருகிற ஜல்பிதங்களெல்லாம் தேவரீருடைய திருநாமஸங்கீர்த்தநமேயாகக் கடவது; அடியேன் பக்கலிலே தோன்றும் ஸகல வ்யாபாரங்களும் தேவரீருடைய திருவாராதனமேயாகக் கடவன-என்று சில சிஷ்யர்கள் விஜ்ஞாபநம் செய்யாநின்றூர்கள். (9)

**அபகதமதமாநை ரந்திமோபாய நிஷ்டை:**
**அதிகதபரமார்த்தை ரர்த்தகாமாநபேக்ஷை:,**
**நிகிலஜநஸுஹ்ருத்பிர் நிர்ஜிதக்ரோதலோபை:**
**வரவரமுநிப்ருத்யை ரஸ்து மே நித்யயோக:.** 10

விஷயபோகக் களிப்பும் செருக்கும் அற்றவர்களாயும்: ஆசார்யாபிமாநமே உத்தாரகமென்று ஸ்ரீவசநபூஷணத்தில் சரமோபாயமாக நிஷ்கர்ஷிக்கப்பட்ட அந்திமோபாயத்தில் ஊற்றமுடையவர்களாயும், ஸகலசாஸ்த்ர ஸாரார்த்தங்களும் கைவந்தவர்களாயும், தர்மமோக்ஷங்கள் தவிர அர்த்த காமங்களில் விருப்பமற்றவர்களாயும், ஒருவரிடத்திலும் மாத்ஸர்யங்கொள்ளாதே ஸர்வபூதஸுஹ்ருத்துக்களாயும் க்ரோதம் லோபம் இரண்டையும் வென்றவர்களாயுமிருக்கின்ற மணவாளமாமுனிகளினடியாரோடு அடியேனுக்கு நித்யஸஹவாஸமுண்டாகக் கடவது-என்று விஜ்ஞாபநம் செய்வார் சில பக்தர்கள். .... (10)

**இதி ஸ்துதிநிபந்தேந ஸூசிதஸ்வமநீஷிதாந்,**
**ப்ருத்யாந் ப்ரேமார்த்ரயா த்ருஷ்ட்யா ஸிஞ்சந்தம் சிந்தயாமி தம்.** 11

கீழே *உந்மீலத்பத்மகர்ப்பத்யுதிதலம்* என்கிற ச்லோகந் தொடங்கி *அபகதமதமாநை* என்கிற ச்லோகமளவாகவுள்ள ஆறு ச்லோகங்களிலுமுள்ள ஸ்துதிமொழிகளை விஜ்ஞாபனம் செய்து தம்தம் கருத்தை வெளியிட்டுக் கொண்டிராநின்ற அடியார்களைக் குளிரநோக்கியருளாநின்ற மாமுனிகளைச் சிந்தனை செய்யாநின்றேன்.

கீழ்''ஸோபதாநே ஸுகாஸீநம்'' என்றதற்கும் இங்குள்ள சிந்தயாமிக்ரியையிலே அந்வயம். .... .... .... (11)

**அத ப்ருத்யாநநுஜ்ஞாப்ய க்ருத்வா சேதச் சுபாச்ரயே,**
**சயநீயம் பரிஷ்க்ருத்ய சயாநம் ஸம்ஸ்மராமி தம்.** 12

இங்ஙனே சிஷ்யாநுக்ரஹமான பிறகு அவரவர்களுக்கு விடை கொடுத்தருளி தம் திருவுள்ளத்தைச் சிந்தனைக்கினிய ஸ்வாராத்ய தேவதையினிடத்தே ஊன்ற வைத்து திருப்பள்ளியைப் பரிஷ்கரித்துத் திருக்கண்வளர்ந்தருளா நின்ற மாமுனிகளையே ஸ்மரிக்கின்றேன். .... .... ....(12)

திநசர்யாமிமாம் திவ்யாம் ரம்ய(ஸௌம்ய) ஜாமாத்ருயோகிந:,
பக்த்யா நித்யமநுத்யாயந் ப்ராப்நோதி பரமம் பதம். 13

மணவாளமாமுனிகள் விஷயமாயமைந்த திவ்யமான இந்த திநசர்யாப்ரபந்தத்தை அன்போடு நிச்சலும் சிந்தை செய்பவர் ஸத்கதிப்ராப்திக்கு உரியராவர் என்று பலனுரைத்துத் தலைக்கட்டிற்றாயிற்று. .... .... (13)

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய

ஸ்ரீவரவரமுநி திநசர்யா வ்யாக்கியானம்

முற்றுப் பெற்றது.

---

# ஸ்ரீ கலிவைரி குருதசகம்.

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்காசார்யரிற்றிய நம்பிள்ளை ஸ்தோத்ரமிது.

*(அந்தாதித் தொடையாலமைந்தது.)*

— கருத்துரையுடன் கூடியது. —

**வேதாந்தவேத்யாம்ருதவாரிராசேர் வேதார்த்தஸாராம்ருதபூரமக்ர்யம்,**
**ஆதாய வர்ஷந்தமஹம் ப்ரபத்யே காருண்யபூர்ணம் கலிவைரிதாஸம்.**

தாஸம் ஜநம் ஸ்ரீசடவைரிஸூக்தே: திவ்யார்த்த ஸௌவாதவ போததந்யம்,
ஆதித்ஸுரத்ராவததார யஸ் தம் ஸேவேய நித்யம் கலிவைரிஸூரிம். 1

தாஸ ஜனங்களை [அல்லது அடியேனை]த் திருவாய் மொழியின் திவ்யார்த்த மாதுர்யத்தை யுணர்த்தி உய்விக்கும் பொருட்டு இங்கு அவதரித்தருளின நம்பிள்ளையை நிச்சலும் தொழக்கடவேன். .... .... (1)

ஸூரீநசேஷாந் ஸ்வகபிரஸூக்திப்ரவாஹமக்நாந் விரசய்ய தந்யாந்,
சகார யஸ் தம் கலிவைரிஸூரிம் சுத்தேந சித்தேந விபாவயாம:. 2

ஸகல வித்வான்களையும் தம்முடைய கம்பீரமான ஸ்ரீஸூக்திப்ரவாஹத்திலே மூழ்த்தி க்ருதார்த்தர்களாக்கியருளின நம்பிள்ளையைத் தூயமனத்தினால் தொழுவோம். .... .... .... (2)

யாமச் சரண்யம் ந கமப்யதோந்யம் ஸ்ரீமத்கலித்வம்ஸிகுருப்ரவீராத்,
ஸர்வஜ்ஞசூடாமணிரித்யசேஷை: ப்ராஜ்ஞைரஜஸ்ரம் ப்ரதிதப்ரசம்ஸாத். 3

ஸகலபண்டிதர்களுங்கூடி ஸர்வஜ்ஞசூடாமணியென்று எந்நாளும் போற்றநின்ற நம்பிள்ளையைத் தவிர்த்து வேறு எவரையும் அடைக்கலம் புகுவோமல்லோம்..... (3)

சம்ஸாமி வாசா கலிஜித்குணௌகாந் த்யாயாமி சித்தே மஹிமாநமஸ்ய,
குர்வே ஸதா தத்பதபத்மயுக்மப்ராவண்யதந்யாத்மக்ருஹேஷு ஸேவாம், 4

நம்பிள்ளையின் திருக்குணத்திரள்களை வாக்கினால் விளம்புகின்றேன்; அவரது பெருமையை நெஞ்சிற் சிந்தனை செய்கின்றேன்; அவரது திருவடித்தாமரையிணைகளில் ப்ராவண்யமுள்ள மஹான்களின் திருமாளிகைகளிலே ஸேவை செய்கின்றேன். [எனது மநோவாக்காயங்களுக்கு இவையே வ்ருத்தியாகும்.] .... (4)

ஸேவாமஜஸ்ரம் கலிஜித்குரோர் யே குர்வந்தி ஸூக்திஷ்வநகாஸு தந்யா:,
தேஷாம் ஸதாம் திவ்யமுகாரவிந்தஸ்ரவந்மதூந்யேவ பிபேம நித்யம். 5

நம்பிள்ளையின் திவ்ய ஸ்ரீஸூக்திகளிலே அநவரத பரிசயம் செய்து போரும் மஹான்களின் முகாரவிந்தத்தினின்று பெருகும் மதுவையே நிச்சலும் பருகுவோமாக. [பகவத்விஷயோபந்யாஸங்களையே கேட்டுக் களிப்போமாக.] (5)

நித்யம் கலித்வம்ஸிகுரூத்தமஸ்ய ஸ்ரீக்ருஷ்ணஸூரித்வயஸேவிதாங்க்ரே:,
திவ்யாநி நாமாந்யநுஸந்ததீமஹி அந்யாநி க்ருத்யாநி ந சிந்தயேம. 6

வடக்குத் திருவீதிப்பிள்ளையும் பெரியவாச்சான்பிள்ளையும் திருவடி பணிய நின்ற நம்பிள்ளையின் திருநாமங்களையே நிச்சலும் அநுஸந்திக்கக்கடவோம்; அஃதொழிய வேறு செய்கைகளிலே விமுகராயிருக்கக்கடவோம். .... (6)

சிந்தாவிதூரஸ்தமஹாப்ரபாவம் வந்தாமஹே ஸ்ரீகலிவைரிஸூரிம்,
யத்ஸூக்திப்ருந்தச்ரவணப்ரஹ்ருஷ்டோ ரங்கீ ஸ்வநித்யோத்ஸவமப்யருந்த. 7

திருவரங்கம் பெரியகோயிலில் நம்பெருமாள் ஸன்னிதித் திருமுற்றத்தில் நம்பிள்ளை பெரிய திருவோலக்கமாகவிருந்து பகவத்விஷய முபந்யஸித்தருளும்போது செல்வரெழுந்தருள நேர்ந்தால் 'கூட்டங் கலைப்பான் வந்தா'னென்று முதலிகள் வெறுத்திருந்தது கண்டு நம்பெருமாள் செல்வருத்ஸவமும் வேண்டாமென்று நிறுத்தியருளினதாக இதிஹாஸம். இங்ஙனே சிந்தைக்கும் கோசரமல்லாத பெருமை வாய்ந்த நம்பிள்ளையைத் தொழுகின்றோம். .... .... ....(7)

ருந்தே யதீய: பணிதிப்ரவாஹ: தத்வார்த்த சங்காத்மககர்தமௌகாந்,
ஸோயம் கலித்வம்ஸிகுரு: க்ருபாலு: ஸர்வாநிமாந் ந: பரிபாத்வஜஸ்ரம். 8

சாஸ்த்ரதத்வார்த்தங்களில் தோன்றும் சங்கைகளாகிற சேறுகளைத் தம்முடைய ஸ்ரீஸூக்தி ப்ரவாஹத்தினால் போக்கியருளின பரமகாருணிகரான நம்பிள்ளை நம்மெல்லாரையும் எப்போதும் காத்தருள்க. .... (8)

அஜஸ்ரமஸ்யைவ குரூத்தமஸ்ய ஸ்ரீமத்கலித்வம்ஸி ஸமாஹ்வயஸ்ய,
ஸர்வாத்மபோக்யாநி ஸதுக்திரத்நாநி ஆநந்த ஸாந்த்ராண்யநுபூய மோதே. 6

ஸகலசேதநர்களுக்கும் பரமபோக்யங்களாய் பேரின்பமே வடிவெடுத்ததானவையான நம்பிள்ளை ஸ்ரீஸூக்தி ரத்னங்களையே நிரந்தரமாக வனுபவித்துக்களிக்கின்றேன். .... .... .... .... (9)

மோதேமஹ்யநிசம் சடாரிமநகம் நாதம் முநிம் யாமுநம்
கூரேசாதிநிஷேவிதம் யதிபதிம் பட்டார்ய வேதாந்திநௌ,
ஸ்ரீமத்க்ருஷ்ணகுரூத்தமத்வயநுதம் ஸ்ரீமத்கலித்வம்ஸிநம்
லோகார்யம் ஸஸஹோதரம் வரமுநிம் நத்வா ச நுத்வா முஹு:. 10

நம்மாழ்வாரையும் ஸ்ரீமந்நாதமுனிகளையும் ஆளவந்தாரையும் கூரத்தாழ்வான் முதலானார் தொழுதேத்து மெம்பெருமானாரையும் பட்டரையும் நஞ்சீயரையும் வடக்குத் திருவீதிப்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளை துதிக்க நின்ற நம்பிள்ளையையும் பிள்ளைலோகாசார்யரையும் (அவரது திருத்தம்பியாரான) அழகியமணவாளப் பெருமாள் நாயனாரையும் மணவாளமாமுனிகளையும் நிச்சலுமிறைஞ்சியு மேத்தியும் களிப்போமாக. .... .... .... .... .... (10)

முஹுர் முஹு: கலித்விஷே குருத்தமாய மங்கலம்
ததங்க்ரிபத்மப்ருங்கக்ருஷ்ண தேசிகத்வயாய ச,
ததீயதிவ்யஸூக்திப்ருந்த ஸௌரபாட்யவாக்மிநே
வரோபயந்த்ருயோகிநே ச நித்யமஸ்து மங்கலம். 11

நம்பிள்ளை யென்னும் பேராசிரியர்க்கு நித்யமங்கலம்; அவரது திருவடித் தாமரையிணைகளில் வண்டுபோல் விளங்கும் வடக்குத் திருவீதிப்பிள்ளைக்கும் பெரிய வாச்சான்பிள்ளைக்கும் மங்களம்; அப்பேராசிரியர்களின் திவ்ய ஸூக்தி பரிமளம் கமழ்கின்ற திருவாக்கையுடைய மணவாள மாமுனிகளுக்கு நித்யஸ்ரீர் நித்ய மங்களம். .... .... .... .... .... (11)

கலிவித்வேஷிலோகார்யகுரோர் மங்கலமாலிகாம்,
படத்ப்யோ பக்தவர்க்கேப்யோ நித்யஸ்ரீர் நித்யமங்களம். 12

திருக்கலிகன்றி தாஸரென்றும் (ஆத்ய) லோகாசார்யரென்றும் வீறுபெற்ற நம்பிள்ளையின் விஷயமான மங்கள ஸ்துதிகளைக் கற்பார்க்கு நித்யஸ்ரீர்: நித்ய மங்களம். .... .... .... .... .... (12)

★★★★★★★★★★★★★★*★★★★★★★★★★★★★★★

ஸ்ரீகாஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய நம்பிள்ளை ஸ்தோத்ரமான

ஸ்ரீகலிவைரிகுருதசகம் முற்றுப்பெற்றது.

★★★★★★★★★★★★★★★★★*★★★★★★★★★★★★★★★★★

ஸ்ரீ:

ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியரியற்றிய

# ஸ்ரீ வரவரமுநி வைபவ ஸ்தோத்ரம்.

ஸ்ரீசைலேசேதி மந்த்ரஸ்தவர்ணாநுக்ரமசோபிதம்.
ஆசார்யஸார்வபௌமஸ்ய ஸ்தோத்ரம் ஹ்ருத்யம் நிகத்யதே.

"ஸ்ரீ சை லே ச தயாபாத்ரம்" என்கிற தனியனிலுள்ள முப்பத்திரண்டு அக்ஷரங்களில் ஒவ்வொரு அக்ஷரத்தையும் அடைவே ஒவ்வொரு ச்லோகத்தின் முதலெழுத்தாகக் கொண்டது இந்த ஸ்தோத்ரம். .... .... (*)

ஸ்ரீமத்வரவரமுநயே குணகணநிதயே ஸதா நதிம் கலயே,
யத்ஸூக்திகல்பலதிகா காங்க்ஷிதமகிலார்த்தமநுபதம் திசதி. 1

கற்பகக்கொடிபோல் விரும்பிய பொருளனைத்தையும் பதந்தோறும் அளிக்கவல்ல ஸ்ரீஸூக்திகளையருளிச் செய்தவரும் ஸமஸ்த திருக்கல்யாணகுணங்களுக்கும் கொள்கலமுமான மணவாள மாமுனிகளை எப்போதும் வணங்குவன். (1)

சைல இவ ஸூக்திஸரிதாம் சாயாதருரிவ பவார்த்திகிந்நாநாம்,
ரவிரிவ துரத்வதமஸாம் வரவரமுநிவர்ய புவி பவாந் விபபௌ. 2

மணவாளமாமுனிகளே! தேவரீர், ஸ்ரீஸூக்திகளாகிற புண்ணியநதிகளுக்கு மலைபோல் உத்பத்திஸ்தாநமாயும், ஸம்ஸார தாபங்களினால் வருந்தினவர்களுக்கு நிழல் தரும் வ்ருக்ஷம் போன்றவராயும், தீயநெறியாகிற இருளைத் தொலைப்பதில் இரவிபோன்றவராயும் விளங்கினீர். .... .... .... (2)

லேசோபி யஸ்ய ஸூக்தே: மநஸி த்யாதோத்ர முதமுதஞ்சயதி,
ஸோயம் வரவரயோகீ ஸூதே பக்திம் ஸ்வகீயபதபத்மே. 3

தமது ஸ்ரீஸூக்திகளில் ஸ்வல்பபாகத்தைச் சிந்தனை செய்தாலும் ஆனந்தம் பொங்கி வளரும்படியாக அவற்றைத் திருவாய்மலர்ந்தருளிய மணவாளமாமுனிகள் தமது திருவடித்தாமரைகளில் பக்தியை விளைத்தருளாநின்றார். .... (3)

சமயதி துரிதமசேஷம் ஜநயதி பரமப் ப்ரபோதமிஹ யஸ்ய,
ஸூக்திததி:, ஏஷ மம ஹ்ருதி ஜாகர்த்தி ஸதைவ வரவரோ யோகீ. 4

தீவினைகளனைத்தையும் தொலைத்து நல்லறிவு நல்குகின்ற திவ்யஸூக்திகளைத் திருவாய் மலர்ந்தருளின மணவாளமாமுனிகள் எப்போதும் எனது உள்ளத்திலே விளங்காநின்றார். .... .... .... .... .... (4)

தயயா நிர்ஹேதுகயா ஹரிரிஹ ஸம்ரக்ஷதீதி யத்ஸூக்தி:,
விசதயதி முநிவரோஸௌ விலஸதி நிர்ஹேது கருணயா ஹ்ருதி மே. 5

எம்பெருமான் தனது நிர்ஹேதுக கருணையினாலே நம்மைக் காத்தருள்கிறானென்னுமிடத்தை விளங்கக்காட்டும் ஸ்ரீஸூக்திகளை அருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் என்னுள்ளத்தில் நிர்ஹேதுக கருணையோடு எழுந்தருளியுள்ளார்.

யாது ஸகலோபி காலோ வரவரயோகீந்த்ரவிவ்ருதஸகலார்த்தே,
ஸ்ரீவசநபூஷணக்யே திவ்யே சாஸ்த்ரேஸ்ய தாஸதாஸஸ்ய. 6

மணவாள மாமுனிகளின் வியாக்கியானங் கொண்டே ஸகலார்த்தங்களையும் அறியக் கூடியதாகவுள்ள ஸ்ரீவசந பூஷணமென்னும் திவ்ய சாஸ்த்ரத்தின் அநுபவத்திலேயே அடியேனுடைய வாழ்நாளெல்லாம் செல்லவேணும். .... (6)

பாது வரயோகிவர்யோ யோ ஹி ரஹஸ்யத்ரயார்த்தமநவத்யம்,
பாவநபணிபிரத்புதஸந்தர்ப்பாபி: ப்ரஸாதயாமாஸ. 7

ரஹஸ்யத்ரயார்த்த விவரணமாகப் பிள்ளையுலகாசிரியர் பணித்தருளின முமுக்ஷுப்படியை மிகவழகிய புனிதமான திவ்யஸூக்திகளினால் ஸத் ஸம்ப்ரதாயப்படியே வியாக்கியானித்தருளின மணவாளமாமுனிகள் நம்மைக்காத்தருள்க. .... (7)

த்ரய்யந்தார்த்தமசேஷம் லலிதஸரண்யைவ போதயந் யோஸ்மாந்,
தத்வத்ரயஸ்ய விவ்ருதிம் வரவரயோகீ சகார ஸ குருர் ந:. 8

பிள்ளையுலகாசிரியர் பணித்தருளிய தத்வத்ரய மென்னும் ரஹஸ்யக்ரந்தத்தை வியாக்கியானித்தருளும் முகத்தால் ஸகல வேதாந்தஸாரப் பொருள்களையும் எளிய நடையில் உபகரித்தருளின மணவாளமாமுனிகளே நமக்கு அகவிருளை அகற்ற வல்ல பேராசிரியர். .... .... .... .... (8)

தீரிஹ ஜகதி மதீயா தாஸ்தா வாசோ நிஷேவ்ய விரமந்தீ,
வரவரமுநீந்த்ர பணிதிஷு திவ்யாஸ்வநுபூதிமவிரதாம் தத்தே. 9

இவ்வுலகில் அவதரித்துள்ள பலபலவாக்குக்களை அநுபவித்து ஓய்வு அடைகின்ற எனது புத்தியானது மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளின் அநுபவத்

திலிருந்து மாத்திரம் ஒருபோதும் ஓய்வடைகின்றதில்லை"எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னுராவமுதமே.' என்னுமாபோலே நித்யாபூர்வமானவை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளென்க ....(9)

பவபயபேஷஜமதுலம் விபாதி யத்ப்ரோக்தவிவ்ருதி விசதார்த்தம்,
ஆசார்ய ஹ்ருதய் சாஸ்த்ரம் ஸ ஜயது ஸௌம்யோபயந்த்ருயோகீந்த்ர:. 10

அழகிய மணவாளப்பெருமாள் நாயனுரருளிச் செய்ததும் பிறவியென்னும் நோய்க்குமருந்துமான ஆசர்ய ஹ்ருதய மஹாசாஸ்த்ரத்தின் ஸகலார்த்தங்களையும் விசதமாகக் காட்டவல்ல வியாக்கியானத்தைத் திருவாய் மலர்ந்தருளிய மணவாள மாமுனிகள்வாழ்க. .... .... .... .... ....(10)

பக்த்யா கதயத ஸததம் வரவரமுநிவக்த்ர திவ்யகமலஸூதாம்,
உபதேசரத்நமாலாம் யயைவ சோபேத புவி ஸதாம் ஹ்ருதயம். 11

மணவாளமாமுனிகளின் முகாரவிந்தத்தின் மகரந்தம் போன்றதும் ஸத்துக்களின் ஹ்ருதயத்திற்கு சோபாவஹமுமான உபதேசரத்தினமாலையென்னும் திவ்ய ப்ரபந்தத்தை அன்புடன் ஓதுமின். [இதில் (க்த்யா) இரண்டாமெழுத்து.]....(11)

திசது மயி திவ்யத்ருஷ்டிம் த்ரமிடோபநிஷந்மஹார்த்தஸாரம் ய:,
சதகேந திவ்யவசஸாம் ப்ரோசே காந்தோபயந்த்ரு முநிவர்ய:. 12

திருவாய்மொழியின் உட்பொருள்களைத் திருவாய்மொழி நூற்றந்தாதியென்னும் திவ்யப்ரபந்த மூலமாக வெளியிட்டருளின மணவாளமாமுனிகள் அடியேனுக்கு திவ்யசக்ஷுஸ்ஸை அருளவேணும். .... .... (12)

குருபிரிஹ பஹூபிரமிதா கிர: ப்ரஸூதா லஸந்தி விலஸந்து,
ஸுந்தர ஜாமாத்ருமுநேஸ் ஸூக்திஷு மாதுர்யமப்ரதித்வந்த்வம். 13

இவ்வுலகில் பல பல ஆசிரியர்களால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகள் அளவுகடந்தவை யுண்டெனினும் மணவாளமாமுனிகள் திவ்யஸூக்திகளிலுள்ள இனிமை இணையற்றதேயாம். .... .... .... (13)

குணலவதரித்ரமேநம் தாஸம் வரயோகிகுருவர: ஸ்வகிராம்,
அர்த்தமநர்க்கமகாதம்பரயா க்ருபயா ப்ரபோதயத்வகிலம். 14

ஒரு யோக்யதையும் சிறிதுமில்லாத அடியேனுக்கும் மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளின் ஆழ்பொருள்களெல்லாம் நன்கு தெரியும்படி அந்த மாமுனிகளின் திருவருளே வாய்க்கவேணும்.[இந்த ச்லோகத்தில் ணகாரம் இரண்டாமெழுத்தாக அமைக்கப்பட்டது.] .... .... .... .... (14)

அர்ணவகபீரதாமபி அஹஹ பரிச்சேத்துமீசதே கதிசித்,
வரயோகிஸூக்திஸாகரகபீரபாவஸ்து கோசரோ ந ந்ருணம். 15

"அப்ரமேயோ மஹோததி:" என்னப்பட்ட கடலின் காம்பீர்யத்தையும் அளவிட வல்லார் சிலருண்டு; மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்திக் கடலின் காம்பீர்யம் மாத்திரம் ஒருவர்க்கும் நிலமன்று [இந்த ச்லோகத்தில் (ர்ண) என்கிற எழுத்து இரண்டாமக்ஷரமாக அமைக்கப்பட்டது,] .... .... (15)

வம்சே ஸமஹதி ஜநநம் விவேகபுஷ்டிம் சமாதி குணபூர்த்திம்,
வரயோகிதிவ்யஸூக்திஷ்வத்வேஷ பலம் ப்ரசக்ஷதே ப்ராஜ்ஞா:. 16

13

மணவாளமாமுனிகளின் திவ்யஸூக்திகளில் பக்திவிசேஷம் இல்லாவிடினும் அத்வேஷமாவது இருந்திருக்குமாகில் அதன்பயனுக மாசில்குடிப்பிறப்பும் நல்லுணர் வின் மிகுதியும் சமதமாதி குணபூர்த்தியும் விளையுமென்று மஹான்கள் கூறுகின்றார் கள். (16)

யதிபதிபுநரவதாரோ வரவரமுநிரேஷ இதி விநிச்சேதும்,
உபபத்தயோ ஹி ஜாக்ரதி பூயஸ்யஸ் தாஸ் ஸதா ஹ்ருதா கலயே. 17

மணவாளமாமுனிகள் எம்பெருமானருடைய அபராவதாரமேயென்று அறுதியிடுவதற்குப் பலபல சான்றுகள் உள்ளனவாதலால் அவற்றையே எப்போதும் சிந்தை செய்வேனுக. .... .... .... .... (17)

தீர்த்வா பவாம்புராசிம் யதி திவமாஸாதயேயமபி தத்ர,
காந்தோபயந்த்ருமுநிவர திவ்யோக்தி ஸூதைவ புக்திரஸ்து மம. 18

பிறவிக்கடலைக்கடந்துஒருகால் விண்ணுலகம் சென்றுசேரப்பெறுவேனுயினும் அங்கும் மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதமே அடியேனுக்கு உணவாக வேணும். (18)

த்ரவதி த்ருஷதப்யஹோ யத்ப்ரகதித யதிராஜ விம்சதிச்ரவணுத்,
சமதம முககுணசேவதிரேஷ முநிஃ பாது வரவரோ ஜகதீம். 19

கேட்டவளவிலே கல்லும் உருகும்படியான நடையில் அமைந்த யதிராஜவிம் சதியை அருளிச் செய்தவரும் சமதமாதி ஸத்குணநிதியுமான மணவாளமாமுனிகள் உலகைக் காத்தருளவேணும். .... .... .... (19)

**ப்ரதயதி யதுதிதபகவத்கீதாவ்யாக்யாந மத்புதம் பாவம்,**
**கதயது மம முகமநிசம் தஸ்யைவ முநேஃ படூநி நாமாநி. 20**

பகவத்கீதையின் அற்புதமான தாற்பரியத்தை விளங்கக்காட்டவல்ல கீதா தாத்பர்யதீப மென்னும் வியாக்கியானத்தை யருளிச்செய்த மணவாளமாமுனி களின் சிறந்த திருநாமங்களையே என்வாய் உரைத்திடுக. .... .... (20)

**வரதாதிராஜமங்கல மபிராமவரோ முநீச்வரோ ஹ்ருத்யம்,**
**யஃ ப்ரோவாச ஸதா மே வக்த்ரம் தஸ்யைவ மங்கலம் ப்ரூதாம். 21**

பேரருளாளன் விஷயமாகப் பரமபோக்யமான மங்களாசாஸந ஸ்துதியை அருளிச்செய்த மணவாளமாமுனிகளுக்கே என் வாக்கு அநவரதம் பல்லாண்டு பாடக்கடவது. .... .... .... .... (21)

**ப்ரவணம் ஹ்ருதய ஸதாபவவரவரமுநிவர்ய விவ்ருதி மஹிதாயாம்,**
**யதிபதி சுப குணவர்ணந விசக்ஷணயாம் ப்ரபந்ந காயத்ர்யாம். 22**

எம்பெருமானருடைய திருக்குணங்களை அழகாகப்பேசவல்லதும் மணவாள மாமுனிகளின் வியாக்கியானத்தினல் சிறப்புற்றோங்குவதுமான இராமனுச நூற்றந் தாதியில் நெஞ்சே! எப்போதும் ஊற்றமுற்றிருப்பாயாக. (இந்த ச்லோகத்தில் ணகாரம் மூன்றுவது அக்ஷரமாக அமைக்கப்பட்டது.) .... (22)

**வஞ்சயிதுமபி யதீச்சத ஜகதீம் வரயோகி பக்திபாவநயா,**
**வஞ்சயத காமமேஷா புநாதி ஸத்யம் சலாத்மிகாபி ஸதீ. 23**

கபடபக்தியினுல் உலகை வஞ்சிக்க நினைத்தாலும் அந்தக் கபட பக்தியையும் மணவாளமாமுனிகள் விஷயமாகவே கொள்வது நலம். ஏனென்னில், மாமுனிகள் திறத்தில் பக்திபாவனை செய்யினும் ஆத்மா புனிதமாகுங்காணும். "பொய்யே கைம்மைசொல்லி" இத்யாதி. .... .... .... (23)

தேயாத் வரவரயோகீ கோதாஜநகீயதிவ்யஸூக்திததே:.
ஸ்வாத்மக்ருத விசத விவ்ருதௌ ஸுகாடமவகாடமந்தராத்மாநம். 24

மணவாளமாமுனிகள் பெரியாழ்வார் திருமொழிக்கு தாமருளிச்செய்த இனிய வியாக்கியானத்தில் மிகவும் ஆழ்ந்து அவகாஹிக்கவல்ல உள்ளத்தை எனக்கு அருள் புரியவேணும். — — — — (24)

ரமயதி மம மதிமவிரதமாசார்யவரஸ்ய வரவரஸ்ய முநே:,
ஸகலப்ரமாணஸங்க்ரஹ ஸமாஹ்வயம் தத் ப்ரஸித்தக்ருதிரத்நம். 25

ஆசார்ய ஸார்வபௌமரான மணவாளமாமுனிகள் அருளிச்செய்த ஸகலப்ரமாண ஸங்க்ரஹமென்னும் (பிரமாணத்திரட்டு) திவ்யக்ரந்தம் என்னுள்ளத்தை எப்போதும் உகப்பிக்கின்றது. .... .... .... (25)

ய இஹ வரயோகிவர்ய: ப்ரணிநாயார்த்திப்ரபந்தமார்த்திபராத்,
அபநுதது ஸோயமார்த்தீரகிலா அபி நித்ய மதிவஸந் ஜகதீம். 26

இந்நிலத்தில் அடிக்கொதிப்பால் ஆர்த்திப்பிரபந்தமருளிச் செய்தருளின மணவாளமாமுனிகள் ‘இன்னமொருநூற்றாண்டிரும்’ என்ற வாழ்த்துப்படியே இவ்வுலகில் எந்நாளுமெழுந்தருளியிருந்து கொண்டு நமது ஆர்த்திகளைத் தீர்த்தருள வேணும். (26)

ஜாயா ஜநநீ ஜநகஸ் ஸோதர இதி தேஷு தேஷு ய: ப்ரேமா,
இஹ பவதி ஸோயமகில: ஸ்ரீமத்வரயோகி சரணயோர் மேஸ்து. 27

தாரமென்றும் தாயென்றும் தந்தையென்றும் ஸஹோதரனென்றும் பலரிடத்தும். பாலிபர்யக் கூடிய அன்பு முழுவதும் அடியேனுக்கு மணவாளமாமுனிகளின் திருவடிகளிலேயே பதியக்கடவது. ஸகலவித பந்துக்களும் மாமுனிகளேயென்கை.

மாதவ முகுந்த முரஹர மதுஸூதந கேசவேதி நாமோக்தி:,
முக்த்வா கதயது ஸததம் வரவரமுநிநாம மாமகம் வதநம். 28

எனது வாய், மாதவ! முகுந்த! முராரே! மதுஸூதந! கேசவ! என்கிற திருநாமஸங்கீர்த்தனங்களை விட்டிட்டு எப்போதும் மணவாளமாமுனிகளின் திருநாமங்களையே கூறப்பெறவேணும். (28)

தரலமபி மாநஸம் மே ஸுந்தரஜாமாத்ரு யதிபதே: பதயோ:
ஸூத்ருடமவகாடமாஸ்தே குருவரகருணமஹோ கதம் கதயை. 29

எனதுநெஞ்சு நின்றவாநில்லாது அலைபாய்வதேயானாலும் மணவாளமாமுனிகளின் திருவடிகளில் மாத்திரம் ஒருபடிப்பட ஆழ்ந்த அன்பை யுடைத்தாயிருக்கின்றது. இங்ஙனே அருள்புரிந்த அந்த மாமுனிகளின் திருவருளை எங்ஙனே புகழ்வேன். (29)

ரங்கீ ஸ்வயமிஹ யஸ்மிந் அந்தேவாஸீ பவந் க்ருதார்த்தோபூத்,
ஸ கலு வரயோகிவர்ய: கதமிஹ வர்ண்யேத மாத்ருசாம் வசஸா. 30

ஸ்ரீரங்கநாதனையும் தம்பக்கலிலே சிஷ்யனுகக்கொண்ட மணவாளமாமுனிகளின் மஹிமை என்போன்ற சிறியோர்களின் இளைய புன்கவிதைகளால் வருணித்துத் தலைக்கட்டக்கூடியதோ? .... .... .... (30)

முஹுரிஹ வரவரமுநிவர ஸூக்திஸுதாஸ்வாத முதிதஹ்ருத் ரங்கீ,
திவ்யம் யமாஹ மந்த்ரம் ஸ ஸர்வமந்த்ராந் விஜித்ய புவி:பாதி. 31

மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியமுதத்தைப்பருகிப் பருகிக் களித்த ஸ்ரீரங்கநாதன் சோதிவாய்திறந்து பணித்த *ஸ்ரீசைலேசத்தனியன் உலகிலுள்ள ஸகல மந்த்ரங்களையும் வென்று வீறுபெற்று விளங்குகின்றது. .... ....(31)

நிகிலாப்யர்ச்சாமூர்த்தி: நித்யம் யந்மந்த்ரநிசமநாத் துஷ்டிம்,
பஜதே, வரவரமுநிவரதைவதமந்த்ரோய மஸ்து மேஜப்ய:. 32

ஆங்காங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களனைவரும் மணவாளமாமுனிகளையே தேவதையாகக்கொண்ட எந்த ஸ்ரீசைலமந்த்ரத்தையே நாடோறும் திருச்செவிசாத்தித் திருவுள்ளம் பூரிக்கின்றனரோ அந்த மந்த்ரத்தையே நான் எப்போதும் ஜபிக்கக்கடவேன். .... .... (32)

மஹதாம் சுபகுலஜநுஷா மஹநீயாசார்ய கருணயா ச ததா
ஸ்ரீவைஷ்ணவாங்க்ரி தாஸோ வரவர யோகிஸ்துதிம் வ்யஜிஜ்ஞபத. 33

ஸ்ரீவைஷ்ணவதாஸனெனவடியேன் பெரியோர்களின் நற்குலத்திற் பிறந்ததனுலும் பேராசிரியர் திருவருளுக்கு இலக்காகப் பெற்றதனுலும் இந்த ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ் செய்யலானேன். .... .... (33)

ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசார்ய ஸ்ரீவைஷ்ணவதாஸன் விண்ணப்பஞ் செய்த

ஸ்ரீவரவரமுநிவைபவ ஸ்தோத்ரம் முற்றுப் பெற்றது.

---

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

# ஸ்ரீலோகாசார்ய ஸ்துதி.

(பொழிப்புரையுடன் கூடியது)

லோகாசார்யாயேதி ப்ரஸித்தபத்யஸ்தவர்ண்ப்ருந்தஸ்ய,
க்ரமதோ லோககுருத்தமநுதிரியமாவிர்ப்பவத்யஹோ லலிதா.

லோகே யத்யபி குரவோ பஹவஸ்ஸமவாதரம் ஸ்ததாப்யத்ர,
ஸ்ரீமல்லோககுருத்தமஸமோ குரு: கோபி நைவ ஸஞ்ஜஜ்ஞே. 1

"லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதாஸ்ய ஸூநவே, ஸம்ஸார போகிஸந் தஷ்ட ஜீவஜீவாதவே நம:" என்று ஸுப்ரஸித்தமான தனியனிலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் அடைவே ஒவ்வொரு ச்லோகத்தின் முதலெழுத்தாகக்கொண்ட இந்த ஸ்தோத்ரம் பிள்ளையுலகாசிரியர் விஷயமாகக் கூறப்படுகின்றது.

இவ்வுலகில் பலபல ஆசாரியர்கள் திருவவதரித்திருந்தபோதிலும் பிள்ளையுலகாசிரியர்க்கு ஒப்பான குரவர் ஒருவரும் அவதரித்ததில்லையென்பது திண்ணம் (1)

காசாய நீசந்ருபதீந் துஷ்டுஷந்த: கவீச்வரா போபோ:,
குருத ஜகத்குருவிஷயம் ஸ்துதிசதமநிசம் ஸமுஜ்ஜிஜீவிஷவ:. 2

காசுக்காக க்ஷுத்ர ப்ரபுக்களைத்துதிக்க விரும்புகின்ற கவிகாள்! நீங்கள்உய்ய வேண்டில், * அன்னபுகழ் முடும்பையண்ணலுலகாசிரியர் விஷயமான துதிகளையே எப்போதும் இயற்றுமின். .... .... (2)

சாரித்ரமதிபவித்ரம் வித்யா ஹ்ருத்யா மதிச் சுபா யஸ்ய,
தஸ்ய ஜகத்குருஸூரேஸ் ஸூக்திபிருர்வீ விபாதி நநு குர்வீ. 3

பரமபுனிதமான சரித்திரத்தையும் சிறந்த கல்வியையும் தூயமதியையுங் கொண்ட உலகாசிரியருடைய திவ்யஸூக்திகளாலன்றோ இப்பூமண்டலம் பெருமை பெற்று விளங்குகின்றது. .... .... (3)

யாபயத காலமகிலம் லோகாசார்யஸ்ய திவ்யஸூக்தீநாம்,
அநுஸந்தா நகுதூஹலபரேண போ பவ்யசேமுஷீபரிதாஃ! 4

நன்மதிவாய்ந்த நல்லோர்களே! பிள்ளையுலகாசிரியரின் திவ்ய ஸூக்திகளை யநுஸந்திப்பதிலுள்ள குதூஹலங்கொண்டே நீங்கள் நாள்கடலைக் கழிமின். (4)

யதிபதிதர்சநமத்புதம் அபிவர்த்தயிதும் யதுக்திரத்நாநி,
ப்ராதுர்பபூவுரம்ருதப்ராயாணி தமேவ லோககுருமீடே. 5

எம்பெருமானார் தரிசனத்தை அழகாக வளர்த்தருள்வதற்காகவே அமுதிலுமாற்றவினிய திவ்யஸூக்திகளைத் திருவாய் மலர்ந்தருளின பிள்ளையுலகாசிரியரைப் போற்றுகின்றேன். .... .... .... (5)

குருரிதி நாம யதார்த்தம் வோடும் சக்நோதி லோககுருரேகஃ,
யஃ ஸ்வீயதிவ்யஸூக்த்யா த்வாந்தம் ருந்தே ஸ்ம காடமிஹ ஜகதி. 6

இவ்வுலகின்கண் மலிந்திருந்த அகவிருளையெல்லாம் பிள்ளையுலகாசிரியர் ஒருவர்தாமே தமது திவ்யஸூக்திகளினால் தொலைத்தருளினபடியால், குரு என்னுந்திருநாமத்தை உள்ளபடி வஹிப்பதற்கு அவரொருவரே உரியவர். .... (6)

ரத்நாகரேபி ஜலதௌ ஹேயாநி பவந்தி ஹந்த ஸூபஹூநி,
லோககுருஸூக்திரத்நாகரேது நைவாஸ்தி ஹேயமீஷதபி. 7

ரத்நாகர மென்று பேர்பெற்றிராநின்ற கடலிலும் பலபொருள்கள் ஹேயங்களாயிருக்கின்றன; உலகாசிரியரின் ஸ்ரீஸூக்திஸாகரத்திலோவென்னில் அங்ஙனே ஹேயமானபொருள் ஒன்றின்றியே ஸகலமும் உபாதேயதமம். .... (7)

வேதாந்தயுக்மஸிந்தும் நிர்மத்த்ய ஸமுத்த்ருதாம் ஸூதாம் ஸூபகாம்,
பாக்யாதிகைகபோக்யாம் யோதாத் தம் லோககுருவரம் நௌமி. 8

உபயவேதாந்தக்கடலைக் கடைந்து எடுக்கப்பட்டதும் மஹாபாக்யசாலிகளுக்கே போக்யமுமான சிறந்த அமுதத்தை அளித்தருளின உலகாசிரியரைப் போற்றுகின்றேன். .... .... (8)

க்ருபயா நிருபாதிகயா ரஸ்யரஹஸ்யார்த்த மகிலமநவத்யம்,
ஸ்ரீவசநபூஷணாத்யைஃ க்யாபிதவந்தம் ஜகத்குரும் ஸ்தௌமி. 9

நிர்ஹேதுகக்ருபை கொண்டு ஸ்ரீவசநபூஷணம் முதலிய திவ்யக்ரந்தங்கன மூலமாக அரியபெரிய ரஹஸ்யார்த்த தத்துவத்தைச் சிறப்புற வெளியிட்டருளின் உலகாசிரியரைத் துதிக்கின்றேன். .... .... (9)

க்ருஷ்ணகுருபுத்ரரத்நம் க்ருஷ்ணகுணாம்போதிபாரத்ருச்வாநம்,
ஸர்வஜ்ஞஸார்வபௌமம் ஸததம் த்யாயாமி புவநகுருவர்யம். 10

வடக்குத்திருவீதிப்பிள்ளையின் திருக்குமாரரும், எம்பெருமானுடைய குணக் கடலைக் கரைகண்டவரும் ஸர்வஜ்ஞ ஸார்வபௌமருமான பிள்ளையுலகாசிரியரை எப்போதும் சிந்தனை செய்கிறேன். .... .... (10)

பாவநபணிதிபிரகிலாந் சாஸ்த்ரார்த்தகணந் ப்ரகாச்ய லோகார்ய:,
பாவயதி ஸ்ம தரித்ரீம் யோஹி ஸ ஏகோ விராஜதாம் ஹ்ருதி மே. 11

தூயதிருவாக்குகளினால் ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் வெளியிட்டருளி இந்நிலவுலகைப் புனிதமாக்கின பிள்ளைலோகாசார்ய ரொருவரே எனது உள்ளத்தில் விளங்கியருளவேணும். .... .... .... .... (11)

தமயதி யதீயஸூக்தி: துரத்வநிஷ்டாகரிஷ்டஜநதர்ப்பம்,
ஸ புவநகுருவர ஏவ ஹி வைஷ்ணவஜநதாவதம்ஸ்யபதபத்ம:. 12

அபஸம்ப்ரதாயங்களில் ஊற்றங்கொண்டிருக்கின்ற ஜனங்களின் செருக்கை யடக்கவல்ல திவ்யஸூக்திகளைத் திருவாய்மலர்ந்தருளின பிள்ளை லோகாசாரியருடைய திருவடிகளே ஸ்ரீவைஷ்ணவவுலகின் சென்னிக்கு மலர்ந்த பூவாகத்தகுவன.12

ஸ்யந்தநஹயகஜபத்திப்ரமுகமஹைச்வர்யமகிலம வதீர்ய,
புவநகுருஸூக்தி ரஸிகஸ்ரீவைஷ்ணவ ஸத்மசோதநம் கரவை.

ரதகஜதுரகபதாதிகள் முதலியவற்றை யாளுகையாகிற பெருஞ் செல்வம் கிடைப்பதாயிருந்தாலும் அதனை உதறித்தள்ளிவிட்டு, பிள்ளையுலகாசிரியரின் ஸ்ரீஸூக்திகளில் சுவையறியும் ஸ்ரீவைஷ்ணவர்களின் திருமாளிகைகளில் தொண்டுசெய்து வாழ்வேனாக. .... .... .... .... .... .... 13

ஸூந்ருதமிதமவதேயம் ஸூக்தீர் யதி லோகதேசிக: க்ருபயா,
நாதாஸ்யதத தரித்ரீ த்ருவமபவிஷ்யத் தமோமயீ ஸூதராம்.

இந்த வுண்மையுரையைக் குறிக்கொள்மின்; உலகாசியர் பேரருள் கொண்டு ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்திராவிடில் இவ்வுலகம் இருள் தருமாஞாலமாகவே யிருந்திருக்கும். .... .... .... .... .... (14)

நந்ததுமநுபதிமிஹ யே லிப்ஸந்தே தே ஜகத்குரோஸ் ஸூக்தீ:,
ஸததமுபபுஜ்ய நந்தந்த்வந்யை: கிமதந்யஜந்மவாக்விஸரை:.

இவ்வுலகில் உண்மையான ஆனந்தத்தைப் பெறவிரும்புமவர்கள் உலகாசிரியரின் அருளிச்செயல்களையே இடைவீடின்றி யநுபவித்து ஆநந்திக்கப் பெறவேணும் மற்றையோருடைய வாக்குக்களினால் இன்பமுண்டாவதரிது. .... (15)

வேத யதி கோபி தந்யோ லோகாசார்யஸ்ய ஸூக்திமேகாம் வா,
தஸ்ய பதாப்ஜஸகாசே பத்தாஞ்ஜலிதா ஸதைவ மே பவிதா. 16

பிள்ளையுலகாசிரியருடைய திவ்யஸூக்திகளில் ஒன்றையாவது நன்கறிந்த மஹாநுபாவர் ஒருவர் இருப்பரேல் அவருடைய திருவடி வாரத்தில் எப்போதும் கைகூப்பிக்கொண்டு நிற்றலே எனக்குற்றது. —— — —(16)

ஸம்யமிந்ருபதிஸதத்வநி ஸௌபாக்யவசேந ஸமுதிதைஸ் ஸூஜநை:,
புவநகுருஸூக்திரஸிகைர் யதி நஹி பூயேத பூபரஸ் த இமே. 17

மஹத்தான பாக்யவசத்தினால் எம்பெருமானார் தரிசனத்தில் உதிக்கப் பெற்ற ஸத்துக்கள் பிள்ளைலோகாசார்யருடைய திவ்யஸூக்திகளில் சுவையறியப் பெருதொழியில் அவர்கள் மண்ணின்பாரமேயாவர். .... .... (17)

ஸாதுமஸாதுமிஹார்த்தம் ஸம்ம்ருச்ய விவேக்துமஸ்தி தீர் யேஷாம்,
தே கலு லோககுருத்தமஸூக்திஸுதாபாநபாக்ய பாஜஸ் ஸ்யு:. 18

"இவையன்றே நல்ல இவையன்றேதீய" என்று நல்லதுதீதுகளைப் பகுத்துணரவல்ல ஆற்றல் பெற்றவர்கள்தாம் உலகாசிரியருடைய ஸ்ரீஸூக்தியமுதத்தைப் பருகுவதற்கீடான பாக்கியம்பெற்றவர்களாவர். .... (18)

ரஸிகா யே கலு பகவத்குணகணவித்யாஸு விச்ருதாஸ் தேஷாம்,
ஸ்ரீமல்லோககுருத்தமபணிதி ரஸாஸ்வாதலுப்ததா சரணம். 19

பகவத்குணவித்யைகளில், சுவையறிந்தவர்களாகப் புகழ்பெற்றிருக்குமவர்கள் பிள்ளையுலகாசிரியர்தம் திவ்யஸூக்திகளில் ரஸிகர்களாக இருந்து தீரவேவேண்டும்

போஜநமத ச ஸ்வாப: ஸ்வச்சந்தவிஹார இத்யத:க்ருத்யை:,
க்ஷபயந்தி காலமகிலம் ஹாஹா லோகார்யஸூக்திரஸவிமுகா:, 20

உலகாரியன் ஸ்ரீஸூக்திரஸமறியப் பெருதவர்கள் அந்தோ! உண்பது உறங்குவது பட்டிமேய்ந்து திரிவது என்றிப்படிப்பட்ட செயல்களினுல் போதைப் போக்குகின்றனர்!. .... .... .... (20)

கிரிகஹ்வரேஷூ ஸூசிரம் தப்தம் கோரம் தபஸ்து தைஸ் ஸத்யம்,
யே லோகதேசிகீயாஸ் ஸூக்தீரநுஸந்ததத்யஹோ ஸததம். 21

பிள்ளையுலகாசிரியர்தம் திவ்யஸூக்திகளை இடைவிடாது அநுஸந்திக்கும் மஹான்கள் திண்ணமாக மலை முழஞ்சுகளில் கோரமாதவம் செய்தேயிருப்பார்கள். .... .... (21)

ஸந்த்யஜ்ய ஸர்வவாசோ யே கலு தந்யா ஜகத்குருப்ரோக்தம்,
ஸ்ரீவசநபூஷணக்யம் சாஸ்த்ரம் த்யாயந்தி தத்க்ருஹே ச்வா ஸ்யாம். 22

மற்றைய வாக்குகளையெல்லாம் உபேக்ஷித்து, உலகாசிரியர் திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீவசநபூஷண திவ்யசாஸ்த்ரத்தையே சிந்தை செய்யும் மஹான்களின் திருமாளிகையில் நாயாயிருந்து உழைக்கக் கடவேன். .... (22)

தயயா பரயா குரவ: பூர்வே பரிதா அபி ப்ரசஸ்தார்த்தாந்,
அஹஹ நிகூஹிதவந்த: ப்ராசிக்யிபதேஷ லோககுருரேவ.

பூருவாசாரியர்களும் பேரருள் பொலிந்தவர்களே யாகிலும் அரும்பெரும் பொருள்களை அவர்கள் மறைத்துப்போந்தார்கள்; இவ்வுலகாசிரியர் தாமே அவற்றை வெளியிட்டருளினர். .... .... (23)

நஷ்டமிதம் ஜகதகிலம் த்ருவமபவிஷ்யத் விசுத்ததீவிரஹாத்,
ஸர்வஜ்ஞசக்ரவர்த்தி லோகர்யச்சேந்நசாவிரபவிஷ்யத. 24

ஸர்வஜ்ஞர்களில் தலைவரான பிள்ளையுலகாசிரியர் திருவவதரித்திராவிடில் உலகமெல்லாம் தூயநன்மதிபெருது நசித்தொழிந்தே கிடக்குமென்பது திண்ணம். .... .... (24)

ஜீவிதுமிச்சத யதி போ: ஸ்வைரம் க்ருஹ்ணீத பாரதாதிகதா:,
உஜ்ஜீவிதும் யதிச்சத லோகார்யகதைகநிஷ்டயோல்லஸத. 25

வயிறு வளர்க்க விருப்பமுடையவர்கள் மஹாபாரதாதி க்ரந்தங்களைக் கொண்டு போதுபோக்கலாம்; உஜ்ஜீவிக்க விருப்பமுடையவர்கள் உலகாசிரியர்தம் திவ்ய சரிதைகளில் ஊற்றமுற்றிருந்து வாழ்வது நன்று.

வரவரமுநிராட் யதி புவி க்ருபயா நாவாதரிஷ்யதிஹ ஸத்யம்,
பகவந் ஜகத்குரோ தவ விபலம் ஹ்யபவிஷ்யததுலமவதரணம். 26

பிள்ளையுலகாசிரியரே! மணவாளமாமுனிகள் இவ்வுலகில் அவதரித்தருளா திருப்பரேல் தேவரீருடைய திருவவதாரம் பயனற்றதாகவே ஆயிருக்கும். (26)

ஜீவிதமிஹ மம பகவாந் ஸங்கல்பயதாம் தயாநிதிஸ் ஸுசிரம்,
யதி லோகதேசிகீயா ஸூக்திததிர் மே ஸதா பவேத் புக்திః. 27

உலகாசிரியர் தம் திவ்யஸூக்திகளே அடியேனுக்கு ஓவாதஊணுக வாய்க்கப் பெறுமாகில் எனது ஆயுளை எம்பெருமான் எவ்வளவும் நெடுகச்செய்தருளலாம்.(27)

வாசி ஜகத்குருபணிதிஷு காச்சித் யதி நாம ஜாக்ருயுர் விதுஷாம்.
ஸத்யம் சபே தரித்ரீம் த்ரவயிதுமேதே பஜந்தி படிமாநம். 28

உலகாசிரியரின் திவ்யஸூக்திகளில் சிலவற்றையாகிலும் முகஸ்தமாக்கித் தரித்துவைத்துக்கொள்ளவல்ல புலவர்கள் இந்நிலவுலகை நீர்ப்பண்டமாக உருக்க வல்லவராவர்கள் என்பதை ஆணையிட்டுரைக்கின்றேன். .... (28)

தநுதநவாங்மநஸாத்யைஸ் ஸததம் கைங்கர்யமத்புதம் கரவை,
கரிகிரிபதிபுநரவதாராயித லோகார்ய ஸூக்திரஸிகாநாம். 29

தென்னத்தியூரருடைய திருவவதாரமான உலகாசிரியரின் திவ்ய ஸூக்தி களில் ஊற்ற முற்றிருக்கும் மஹான்களுக்கு உடலாலும் பொருளாலும் வாயாலும் மனத்தாலும் நித்யகைங்கர்யம் செய்யப்பெறுவேனுக. .... (29)

வேதஸ்ம்ருதீதிஹாஸேஷ்வந்யேஷ்வபி காலயாபநம் ஹித்வா,
லோகார்யக்ருதிபிரகிலம் காலம் க்ஷிபதாமநர்கலம் ச்ரேயః. 30

ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸங்களிலும் மற்றுமுள்ளவற்றிலும் பொழுதுபோக்கு வதைவிட்டிட்டு உலகாசிரியருடைய திவ்யஸூக்திகளைக் கொண்டே நித்யகாலக்ஷே பம் செய்பவர்கட்கு இடையூறற்ற நன்மையுண்டாம். .... (30)

நமத ஜகத்குருபக்தாந் வதத ததீயாஸ் ஸுதாமுசோ வாசః,
சரத ததுக்தஸரண்யா பஜத ச்ரேயாம்ஸி ஸபதி பூயாம்ஸி. 31

உலகாசிரியர்தம் அடியார்களை வணங்குமின்; அவருடைய அமுதமொழி களையே உரைத்திடுமின்; அவர் காட்டியருளின வழியே செல்லுமின்; இங்ஙன மிருந்து பலவகை நன்மைகளையும் பெறுமின். .... (31)

மஸ்தகமஸ்து மதீயம் நிஸ்துலஜகதார்யபாதபத்மதரம்,
வக்த்ரமபி விலஸதாந்மே ததீய திவ்யோக்தி கீர்த்தநைகரதம். 32

என் சென்னியானது ஒப்பற்ற உலகாசிரியருடைய திருவடித் தாமரை களையே தாங்கி நிற்க; எனது வாக்கு அவர் தம்முடைய திவ்ய ஸூக்திகளை யுரைப் பதிலேயே ஊன்றியிருக்கக் கடவது.

ஸ்ரீவைஷ்ணவாங்க்ரிதாஸப்ரதாப்ரதாநேந ஸாது ஸங்க்ரதிதா,
லோகாசார்யஸ்துதிரியமநிசம் ஜாகர்த்து பக்த ரஸநாயாம்.

இங்ஙனே ஸ்ரீவைஷ்ணவதாஸன் விஜ்ஞாபித்த ஸ்ரீலோகாசார்யஸ்துதி பக் தர்களின் நாவில் என்றும் விளங்குக.

---

ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர்
இயற்றிய
ஸ்ரீலோகாசார்ய ஸ்துதி முற்றிற்று.

---